# அருமையான துணை

வல்லிக்கண்ணன்




கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்

# முன்னுரை

சிறுகதைகள் எத்தனை எத்தனையோ விதங்களில் எழுதப்பட்டுள்ளன—எழுதப்படுகின்றன. சொல்லும் முறையிலும், உத்திகள் வகையிலும் அவை பலவிதத் தன்மைகளைக் கொண்டிருக்கலாம். ஆயினும் அவை வாழ்க்கையைப் பிரதிபலிப்பனவாக, மனிதரின் இயல்புகள் போக்குகள் உணர்ச்சிகளைச் சித்திரிப்பனவாகவே அமைகின்றன, பெரும்பாலும்.

வாழ்க்கை விரிவானது. ஆழமானது. பன்முகத் தோற்றம்கொண்டது. புரிந்துகொள்வதற்கு எளிதாக இருப்பதுபோல் தோற்றம் காட்டினும் சுலபத்தில் புரிந்து கொள்ள முடியாததாகவும் இருப்பது.

மனிதர்களும் ரகம் ரகமானவர்கள். எப்படி எப்படியோ நடந்துகொள்ளக்கூடியவர்கள். எவர் எந்த வேளையில் எப்படி நடந்துகொள்வார் என்று திட்டவட்டமாகச் சொல்ல முடியாத விதத்தில் செயல்புரிகிறவர்கள்.

அதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் மனம் எனும் புதிர்தான். மனம் ஒரு மாயசக்தி. அது வலியதாகவும் இருக்கிறது. மனிதரை எவ்வாறெல்லாமோ ஆட்டி வைக்கிறது. உணர்ச்சிகளும் மனிதரை பாடாய்ப் படுத்துகின்றன.

விலகியிருந்து மனிதரையும் அவர்களது போக்குகளையும்—பொதுவாக வாழ்க்கையை—வேடிக்கையாகக் கவனிக்கிறவர்களுக்கு வாழ்க்கை ரசமான நாடகமாகக் காட்சி தருகிறது. மனிதர்கள் விந்தைக் கதைகளாகிறார்கள்.

மனம் எனும் மாயையும், விந்தையான உணர்ச்சிகளும், இவற்றினால் விதம் விதமாக பாதிக்கப்படுகிற மனிதர்களும்

எனது கதைகளுக்கான உந்துசக்திகள். இவற்றை ஆதார மாக்கி நான் எழுதிய கதைகள் எண்ணற்றவை.

பலப்பல வருடங்களாக, பல்வேறு பத்திரிகைகளிலும், பிரசுரமான என் சிறுகதைகளில் பெரும்பாலானவை புத்தக வடிவம் பெறவில்லை. வெவ்வேறு காலகட்டங்களில் தொகுப்புகளாக வெளிவரும் வாய்ப்பினைப் பெற்றவை ஒரு சிலவே:

1. கல்யாணி முதலிய கதைகள்.
2. நாட்டியக்காரி.
3. வல்லிக்கண்ணன் கதைகள்.
4. ஆண் சிங்கம்.
5. வாழ விரும்பியவன்.

இவை என்மீது அன்புகொண்ட நண்பர்களால் அவ்வப்போது வெளியிடப்பட்ட சிறுகதைத் தொகுப்புகள்.

மிக நீண்ட இடைவெளிக்குப் பிறகு இப்போது எனது ஆறாவது சிறுகதைத் தொகுப்பு வெளிவருகிறது. என்னிடம் மிகுந்த அன்பும் நட்புணர்வும் கொண்டுள்ள அருள்திரு. டாக்டர் தயானந்தன் பிரான்சிஸ் அவர்களின் முன் முயற்சியினாலேயே இது சாத்தியமாகியுள்ளது.

இதில் உள்ள பன்னிரெண்டு கதைகளும் வித்தியாச மானவை. மனம் எனும் வலிய சக்தியின் பலவிதமான தன்மைகளைக் காட்டுகிறவை. மனசினாலும் உணர்ச்சிகளா லும் உந்தப்பட்டுச் செயல்புரிகிற வேடிக்கை மனிதரின் விந்தை நடவடிக்கைகளைக் காட்டுகின்ற கதைகள் இவை.

இவற்றைத் தொகுத்து அழகிய புத்தகமாக வெளியிடும் கிறிஸ்தவ இலக்கியச் சங்கத்துக்கு என் நன்றி உரியது. இதற்குப் பெரிதும் உதவிய இனிய நண்பர் அருள்திரு. டாக்டர் தயா அவர்களின் அன்புக்கு வணக்கம். இக் கதைகளைத் தங்கள் பத்திரிகைகளில் வெளியிட்ட பத்திரிகை ஆசிரிய நண்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**வல்லிக்கண்ணன்**

# பதிப்புரை

எழுத்துச் செல்வர் வல்லிக்கண்ணன் அவர்களின் படைப்புகள் ஏராளம். அவற்றுள் இதழ்களில் வெளிவந்து தொகுப்பு நூல்களில் இடம்பெருதவை பல. அவற்றைச் சுவைக்கும் வாய்ப்பு இந்தத் தலைமுறையினருக்கும் கிடைக்க வேண்டும் என்ற வேட்கையோடு திரு. வல்லிக்கண்ணன் அவர்களை அணுகி இந்நூலில் அடங்கும் பன்னிரெண்டு சிறு கதைகளை அவர்களிடமிருந்து பெற்றுக்கொண்டு அவர்களின் நல்லாசிகளோடு இந்நூலினை வெளிக்கொணர்கிறோம்.

கடந்த அரை நூற்றுண்டுக் காலமாகப் பல்லாயிரக் கணக்கான வாசகர்களிடம் தம்முடைய எழுத்துக்களின் பொருள் பொதிந்த உரையாடல்களின்மூலம் முற்போக்குச் சிந்தனைக்கு வளம்கூட்டி வருபவர் திரு. வல்லிக்கண்ணன் என்பதை யாவரும் அறிவர்.

எழுத்துச் செல்வரின் 71ஆவது பிறந்த நாள் நிறைவின் போது இந்நூலை வெளிக்கொணர்வதில் கிறிஸ்தவ இலக்கியச் சங்கம் பெருமிதம் அடைகின்றது. நாங்கள் நடத்திவரும் இலக்கிய நண்பர் வட்டத்திற்கு உறுதுணையாக விளங்கிவரும் மூத்த எழுத்தாளர்களுள் முதல்வராகத் திகழ்வதோடு ஆண்டுதோறும் கருத்தரங்குகளில் கலந்துகொண்டு சிறப் புரைகள் வழங்கிவரும் திரு. வல்லிக்கண்ணன் அவர்களின் இலக்கியப்பணி மேலும் பல்லாண்டுகாலம் சிறந்தோங்க அவருக்கு எங்கள் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கி றோம். அத்துடன் இந்நூலினை உருவாக்கும் பணியில் எங்களை ஈடுபடுத்தி, ஊக்குவித்த முற்போக்கு இலக்கியச்

செல்வர் திரு. தி. க. சி. அவர்களுக்கும், விழாக் குழுவின் அமைப்பாளர்கள் திரு. ச. செந்தில்நாதன், திரு. மு. பரமசிவம், திரு. மாமணி ஆகியோருக்கும், இந்நூலினை நன்முறையில் அச்சிட்டுத் தந்த எங்கள் சி.எல்.எஸ். அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி உரியதாகும்.

அன்புடன்,

டாக்டர் தி. தயானந்தன் பிரான்சிஸ்
பொதுச் செயலாளர்
கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்

# பொருளடக்கம்

# நஷ்டமே லாபம்

அவள் தன் துணைவியாக வந்து சேராதது தனது வாழ்க்கையின் பேரிழப்பு ஆகும் என்று ராஜாகிருஷ்ணன் நம்பினான். தன் வாழ்வில் மலரவேண்டிய வசந்தம் தோன்றாமலே, வரண்ட கடுமையான கோடை புகுந்து தன்னுடைய இளமைக் கனவுகளை, இனிமை நினைவுகளை, ஆசைத் திட்டங்களை எல்லாம் தீய்த்துக் கருக்கிவிட்டது என்று அவன் உள்ளம் சதா குமைந்து கொண்டிருந்தது.

அவன் எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தான்! அவளை மையமாக்கி எத்தனை எத்தனை இன்பக் கனவுகள், ஆசைக் காவியங்கள் கற்பனையில் ஆக்கி மகிழ்ந்து வந்தான்! 'அடி வசந்தா, அனைத்தையும் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி விட்டாயேடி, பாவி!' என்று ராஜாகிருஷ்ணன் மனம் அடிக்கடி கொதித்துக் குமுறுவது வழக்கமாயிற்று.

—வசந்தா . . . வசந்தா . . . வசந்தா . . .

எந்தப் பெயரை ஜெபிப்பது அவனுக்கு முன்பு இன்பக் கிளர்வும் கிளுகிளுப்பும் உண்டாக்கியதோ, அதுவே இப்போது ஆத்திரத்தை, கசப்பை, வெறுப்பைக் கிளறிவிடும் சொல்லாக மாறியிருந்தது. ஆயினும் அதை அவன் மனசினால் நினைக்காதிருக்க இயலவில்லை.

—ஏடி வசந்தா. வஞ்சனையின் திருஉருவே! நீ பெரிய நடிப்புக்காரி. என்ன பசப்புகள் பசப்பினாய். ஏமாற்றுகளை ஏமாற்று என்று தெரியவிடாதபடி நடித்து என் மீதே உனக்கு அளவிலா ஆசை என்பதுபோல் பாவனைகள் பண்ணி . . . சமயம் வந்தபோது பணமும் காரும் பகட்டும் பெருமையும் கொண்ட எவனோ வெறும்பயலுக்கு மணமகள் என்று மின்னி மினுக்கிச் சிங்காரித்துச் சிரித்துக்கொண்டு போய்விட்டாயே.

முந்திய உனது பேச்சுகளும் சிரிப்புகளும், கொஞ்சுதல்களும் செயல்களும் உண்மையானவை என்றால், உன் உள்ளத்து உணர்ச்சிகளின் ஊற்றெடுப்புகள் என்றால், புதிய ஏற் பாட்டுக்கு இணங்காமல் நீ என்னோடு அல்லவா வந்திருக்க வேண்டும்? கள்ளி, ஏமாற்றுக்காரி, வஞ்சகி...

பெருமூச்செறிந்து, கசப்போடு கரித்துக் கொட்டுவதே அவனுடைய வாழ்க்கை நியதி ஆகிவிட்டது.

வசந்தா தனக்கில்லாமல் போய்விடக்கூடும் என்று ராஜாகிருஷ்ணன் எண்ணியதே இல்லை. எண்ணிப் பார்க்க வேண்டும் என்று தோன்றக்கூட இல்லை அவனுக்கு. அவள் சதா அவனோடு சிரித்து விளையாடிக் கலகலத்துத் திரிந்து கொண்டிருந்தாள். எதிரில் இல்லாதபோது அவன் நினைப் பாகவும், தூக்கத்தில் கனவுகளாகவும் அவள் அவனுள் நிறைந்திருந்தாள். கவலை என்பதறியாக் கவிதை அவள். அவனது கவலையையும் பொங்கி எழும் தன் சிரிப்பால், இனிய பேச்சால், போக்கிவிடும் களிப்பின் ஊற்று. காட்சிக்கு இனிய ஓவியம். அவள் அசைவுகள் தனி நாடகம். அவன் ரசனைக்கு இனிய இலக்கியம்.

வசந்தா சூரியனின் பொன்னொளி போல் அவன் வாழ்வில் பிரவேசித்தாள்.

அப்போது அவளுக்குப் பதினாலு அல்லது பதினைந்து வய திருக்கலாம். தோழிகளோடு கலகலவெனச் சிரித்து, கவீ ரெனப் பேசி, அவள் ஓடிவிளையாடுவதை அவன் தன் அறையி லிருந்தே கவனித்து ரசிப்பது வழக்கம். அந்த அறைக்கு அண்மையில்தான் அவன் குடிவந்திருந்தான். அவள் வீடு அதன் அருகிலேயே இருந்தது.

ஒருநாள் அவள் திடுமென அந்த அறைக்குள் புகுந்தாள். 'நான் அங்கே இங்கே போகிற போதும் வருகிற போதும், என்னையே, என் முகத்தையே கூர்ந்து பார்க்கிறீர்களே? அங்கே என்ன இருக்குதாம்?' என்று கேட்டாள்.

அவள் அப்படிவந்து இப்படி ஒரு கேள்வியைக் கேட்பாள் என்று ராஜாகிருஷ்ணன் எண்ணியவன் அல்லன். அதனால்

அவன் தயங்கினான். சிறிது குழம்பினான். பிறகு அவனுக்கே உரிய இயல்பான துணிச்சலோடு சொன்னான்:

'கருவண்டுக் கண்கள் சுழலுது. குமிழ் மூக்கு இருக்கு. கண்ணாடிக் கன்னங்களும், பிறை நிலவு நெற்றியும், பழச்சுளை உதடுகளும் இருக்கு. எல்லாவற்றிலும் அழகு கொஞ்சுது; சிரிக்குது!'

அவளுக்கு வெட்கமாவது வெட்கம்! இருந்தாலும், அந்தப் பேச்சு அவளுக்கு இனித்தது என்பதை அவள் அங்கிருந்து திரும்பி ஓடாதது எடுத்துக் காட்டியது; முகத்தில் பூத்த செம்மையினூடே மலர்ந்த புன்சிரிப்பு சுட்டியது. தலை கவிழ்ந்த நிலையில் அவள் ஏவிய ஓரக் கண் பார்வை விளக்கியது.

'இதை விசாரிக்கத்தான் நீ இங்கே வந்தாயா?' என்று கேட்டான் அவன்.

'நீங்கள் கதை எழுதுகிறவரா?' என்று அவளும் ஒரு கேள்வியையே உதிர்த்தாள்.

'இல்லை. ரசிகன் நான்!'

'பத்திரிகை ஆபீசில் எதிலாவது வேலை பார்க்கிறீர்களா?'

'ஊகுங். ஒரு லைபிரரியில்!'

'அப்போ, எனக்குப் படிப்பதற்கு நிறையப் புத்தகம் தரணும் நீங்க.'

'அழகை ரசிப்பதற்குக் கட்டணமா, காணிக்கையா?'

அவள் சிரித்தாள். அது செஞ்சொல் கவிதையாக ஒலித்தது அவன் காதுகளில்.

'பொழுது போகல்லே, போரடிக்குது. கதைப் புத்தகம் ஏதாவது வாங்கிட்டுப் போகலாம்னுதான் வந்தேன். நீங்க நிறையப் புத்தகங்கள் வச்சிருக்கீங்க. எப்ப பார்த்தாலும் படிச்சுக்கிட்டே இருக்கீங்க. அதனாலே உங்களிடமிருந்து...' அவள் இழுத்தாள்.

இன்பக் கதைகள் கொண்ட இரண்டு புத்தகங்களை அவன் கொடுத்தான்.

விரைவிலேயே, 'இன்பக் கதைகள் உன்னைப்போல் ஏடுகள் சொல்வதுண்டோ, கண்ணம்மா!' என்ற வரியை 'வசந்தா!' என்று மாற்றி அவளிடமே சொல்லவேண்டிய நிலைமை அவனுக்கு ஏற்பட்டுவிட்டது.

அவள் பள்ளிக்கூடம் போகாத நேரங்களில் எல்லாம் அங்கேயே இருந்தாள். 'பாடத்தில் சந்தேகம் கேட்க வந்தேன்' என்று சொல்லிக்கொண்டு வருவாள். பள்ளிப் பாடம் படிப்பது தவிர, எல்லாவற்றையும் செய்வாள். அர்த்தம் உள்ளனவும், இல்லாதனவும், சுவை உடையனவும் அல்லாதனவும் ஆக என்னென்னவற்றையோ பேசுவாள். அவள் சொல்வதிலேயே தனிச்சுவை இருந்தது அவனுக்கு.

அவள் வரும்போது அவன் படித்துக்கொண்டிருந்தால், 'சும்மா என்ன படிப்பு!' என்று புத்தகத்தைப் பிடுங்கி வைத்துவிட்டு, 'நான் வருவதைக் கண்ட உடனேயே புத்தகத்தை மூடி வைக்கவேண்டாம்?' என்று செல்லமாக அதட்டுவாள். சிரிப்பாள்.

சிரிக்காமல் இருக்க முடியாது அவளால். களங்கமிலாச் சிரிப்பை அள்ளிச் சிதறும் ஆனந்த ஊற்று அவள். ஆடாமல் அசையாமல், குதிக்காமல், துள்ளாமல், ஓடாமல் ஒரே இடத்தில் அவளால் அமைதியாக இருக்க முடியாது. உணர்வு துளும்பும் உயிர்க் கவிதை அவள்.

அவள் சுபாவங்கள் அனைத்தையும் அவன் ரசித்து மகிழ்ந்தான். அவள் விளையாட்டுப் பேச்சும் சிரிப்பும் அவனுக்குப் பிடித்திருந்தன.

அந்த அறையில் உள்ள ஒவ்வொன்றையும் அவள் துழாவித் துருவி ஆராய்ந்து விடுவாள். அப்படி டப்பாவைத் திறந்து பார்த்தவள், 'ஐயே. நீங்க என்ன சின்னப் பிள்ளையா!' என்றாள். அதனுள்ளிருந்த மிட்டாய்களில் ஒன்றை எடுத்து, கண்ணாடித் தாளை உரித்துவிட்டு, வாயில் விட்டுச் சுவைத்தாள். 'அய், நல்லாருக்கு!' என்றாள்.

'நான்தான் சொன்னேனே! நான் ரசிகன். இனிய விஷயங்களை ரசிப்பதற்கு வயது குறுக்கே நிற்காது. மனம் தான் வேண்டும்' என்றான் ராஜாகிருஷ்ணன்.

வசந்தாவின் பள்ளிப் படிப்பு முடிந்த பின்னர், அவள் எந்நேரமும் அவன் அறையிலேயே காணப்பட்டாள்—சாப்பிடும் நேரங்களிலும், இரவு தூங்கும் நேரமும் தவிர. எப்போதும் சிரிப்பு, ஓயாத பேச்சு. எப்பவாவது பத்திரிகைகள், புத்தகங்களில் ஈடுபடுவதும் உண்டு.

அவனுக்கு இனிப்புகள் பிடிக்கும் என்றால், அவனைவிட அதிகமாகவே அவை அவளுக்குப் பிடித்திருந்தன. அவன் ஆரம்பத்தில் அன்பளிப்பாக சில சில 'ஸ்வீட்'கள் வாங்கிக் கொடுத்து வழி காட்டவும், அவள் உரிமையோடு 'ஜாங்கிரி வேண்டும்' 'இன்று பாதாம் அல்வா' 'ரசமஞ்சரி வாங்கி வாங்களேன்' 'பெங்கால் ஸ்வீட் காஷ்மீர் ஆப்பிள் எனக்கு ரொம்பப் பிடிக்கும். இன்று அதையே வாங்குங்கள்' என்று 'டைரக்ட் செய்து' விரும்பியதைப் பெற்று மகிழ்ந்தாள். அவள் விருப்பங்களும் கோரிக்கைகளும் அவனுக்கு வெறுப்பு ஏற்படுத்தவில்லை. மகிழ்வுடன் வாங்கித் தந்தான். அவளது அந்நேரத்திய மனநிறைவை, முகமலர்ச்சியை, ஆனந்தக் களிப்பைக் கண்டு, மனம் மகிழ்வது அவன் இயல்பாகி விட்டது.

இவ்விதம் ஓடின வருடங்கள்.

அவள் அவனைத் தன்னுடன் இணைத்தே பேசிக் களித்தாள். 'நம்ம வீடு' என்றே அறையைக் குறிப்பிட்டாள். 'நமக்கு நிறைய பணம் கிடைத்தால் நாம் என்னென்ன வாங்கலாம், என்ன செய்யலாம், எங்கே போகலாம்' என்றெல்லாம் ஆசைக் கோட்டைகள் கட்டுவாள்.

அழகான ஸாரிகள், ஜாக்கெட்டுகள், புது டிசைன் நகைகள், அடிக்கடி சினிமா பார்ப்பது, ஓட்டல்களில் விதம் விதமான தின்பண்டங்களையும் டிபன் தினுசுகளையும் வயிறார, மனமார, தின்பது—அவள் விழிப்பு நிலையில் அளக்கும் கனவுகளில் இவை எல்லாம் அதிகம் இடம் பெறும். அனைத்தும் அவன் துணையோடு நடப்பதாகத்தான் அவள் சித்தரித்தாள்.

அவனும் வசந்தாவுக்கு அடிக்கடி அவள் விரும்பிய துணி மணிகளை வாங்கி அன்புப் பரிசுகளாக வழங்கினன். அப்படிக் கொடுப்பதில் அவனுக்கு ஒரு இன்பம். அவற்றை வாங்கி அணிந்துகொள்வதிலும் அவன் முன் காட்சிப் படுத்துவதிலும் அவளுக்கு எவ்வளவோ சந்தோஷம். அவள் அழகு மலர்ச்சியையும் ஆனந்தத் துள்ளலையும் கண்டு ரசிப்பதில் ராஜா கிருஷ்ணனுக்குத் தனி மன நிறைவு.

வசந்தா தன்னுடையவளாகத் தன் வீட்டுக்கே வந்து விடுவாள்; இவ்வளவு உரிமையோடு பழக அனுமதித்திருக்கும் பெற்றோர்கள் தங்கள் அருமை மகளின் விருப்பத்துக்குக் குறுக்கே நிற்கமாட்டார்கள் என்றே அவன் நம்பினன்.

காலம் அவன் நம்பிக்கையைச் சிதறடித்தது.

பணம் மிகுந்த, வசதிகள் நிறைந்த, காரும் பெரிய வீடும் தொழில் நிறுவனமும் உடைய பெரியதனக்காரர் ஒருவரின் மகனை தங்கள் மகளுக்குத் தகுந்த மணாளனுகத் தேர்ந்தெடுத் தார்கள் வசந்தாவின் பெற்றோர்கள்.

அந்த ஏற்பாட்டில் மனம் ஈடுபடாதவளாய்க் காட்டிக் கொண்டாள் வசந்தா. ராஜாகிருஷ்ணன் பற்றி அவள் அம்மாவிடம் சொல்லவும் செய்தாள். ஆனால் அனுபவம் மிகுந்த அம்மாவின் அன்பு உபதேசம் அவள் ஆசையைத் திசைதிருப்பிவிட்டது. வசதியான பங்களா; உல்லாச வாழ்வுக்கு ஏற்ற கார். பணம், இஷ்டம்போல் கிடைக்கக் கூடிய நகைகள் ஸாரிகள் வகையறு; நாகரிக ஓட்டல்களின் நவ நவமான தீனிவகைகள்—புதிய சொர்க்க வாழ்வு அவள் கனவில் குளு குளுவென ஒளி வீசியது.

அப்புறமும் அவள் சிணுங்கவில்லை; சீறவில்லை. சிரித்துக் கொண்டே புதுமனை புகுந்தாள்.

ஏமாற்றம் அடைந்த ராஜாகிருஷ்ணன்தான் சீறினன்; தன்னுள் சிடுசிடுத்தான்; 'ஸினிக்' ஆனன்.

'பெரும்பாலும் பெண்கள் துணைவன் என ஒருவனை நாடுவதும் தேடுவதும் தங்களுடைய எதிர்காலம் ஸ்திரமான

தாக அமையவேண்டும் என்பதற்காகவே. சாப்பாட்டுக்கு மயக்கம் இல்லாமல், இஷ்டம்போல் உண்டு, உடுத்து, உல்லாசமாகத் திரிவதற்கு உதவிபுரியக்கூடியவன்தான் அவர்கள் நோக்கில் நல்ல கணவன்...' என்றெல்லாம் அவன் மனம் ஞானமொழி பேசலாயிற்று.

என்றாலும், வசந்தா போய்விட்டது தனக்குப் பெரும் நஷ்டம் என்று அவன் உள்ளம் வருத்தப்படாமல் இல்லை. அப்போதெல்லாம் மனசார அவளை வசைபாடுவதும் அவன் இயல்பாகிவிட்டது.

அதன் பிறகும் அவ்வட்டாரத்தில் இருப்பது அவனுக்கு உசிதமாகப்படவில்லை. எனவே ராஜாகிருஷ்ணன் வேறொரு இடத்துக்குக் குடிபெயர்ந்தான்.

ஐந்து வருடங்கள் தம் போக்கில் ஓடிவிட்டன. தான் உண்டு, தனது புத்தகங்கள் உண்டு என்று காலம் ஓட்டி வந்தான் அவன். வசந்தாவை அவன் மறுபடி பார்க்கவே இல்லை, பார்க்கவேண்டும் என்று ஆசைப்படவும் இல்லை.

அதற்காகக் காலம் சும்மா இருந்துவிடுமா? ஒருநாள் அவர்களை மீண்டும் சந்திக்க வைத்தது.

ஒரு சினிமா தியேட்டரின் அருகே அந்தச் சந்திப்பு நிகழ்ந்தது.

அவன் ஏதோ நினைவாக நடந்துகொண்டிருந்தபோது, 'என்னுங்க? ஹல்லோ ராஜாகிருஷ்ணன்!' என்ற குரல் அவனைப் பிடித்து உலுக்கி நிறுத்தியது.

அப்படி அழைத்தது யார்? ஒரு இளம் பெண். தடியாக, ரொம்பவும் தடியாக, கழுத்து—உடம்பு எல்லாம் ஒன்றாகி, குதிர் மாதிரிப் பெருத்திருந்த உருவம்...

'யார் இந்த எருமைமாடு? எங்கோ பார்த்த ஞாபகமாய்...'

கால் பந்து மாதிரி உருண்டு திரண்டிருந்த தலையில் உப்பியிருந்த கன்னங்கள் மத்தியில் இருந்த மூக்கும், அதை ஒட்டியிருந்த கண்களும்...

'அடடே, வசந்தாவா!' உண்மையான ஆச்சரியத்தோடு கூவினான் அவன்.

—எப்படி இருந்தவள் என்னமாய் மாறிப்போனாள்! ஆளே அடையாளம் தெரியாதபடி! மித மிஞ்சிய தீவனமும் சுகவாழ்வும் ஆளைக் கெடுக்கும் என்பது சரிதான்!

'என்ன இப்படி அடையாளமே தெரியாதபடி ரொம்ப மெலிஞ்சுபோயிருக்கிங்க?' என்று கேட்டாள் வசந்தா. 'நலம் தானே? நல்லா இருக்கீங்களா?'

'ஆமா ஆமா' என்றான் அவன். 'சௌக்கியம் தானே?'

அதுதான் ஆளைப் பார்த்தாலே தெரியலியா என்றது அவன் மனம்.

என் வசந்தா—என் நினைவில், உள்ளத்தில், பசுமையாக விளையாடுகிற பெண் வேறு, இத்தடிச்சி வேறு என்று பேசியது அது.

'நேரமாகுது. பிக்சருக்குப் போகிறேன். அந்தப் பக்கமே நீங்க வர்றது இல்லேபோலிருக்கு. ஒரு நாள் வாங்களேன்' என்று சொல்லிவிட்டு, அவளுக்காகக் காத்து நின்ற அம்மாளோடு சேர்ந்து போனாள் அவள்.

'தொலை...தொலைஞ்சு போ!' என்றது அவன் மனம்.

இப்போது அவனை அறியாமலே அவனுள் ஒரு ஆனந்தம் குமிழியிட்டுக் கொப்புளித்துப் பொங்கியது; புரண்டு ஓடியது; அவனுள் எங்கும் பரவி, அவனை நனைத்து உவகைப் பெருக்கில் குளிப்பாட்டியது,

—ஆடும் கவிதையாய், அசையும் ஓவியமாய், இனிய கலையாக விளங்கிய என் வசந்தா கால வேகத்தில் இப்படி மாற முடிந்திருக்கிறது என்றால்! என்னோடு சேர்ந்திருந்தாலும் இப்படித்தான் ஆகியிருப்பாள். ஸ்வீட் வேணும், அது வேணும், இது வேணும் என்று கேட்டு வாங்கித் தின்று... எப்படியும் போகட்டும்! ஆளைக் கெடுத்துவிட்டாளே! இவள் என் வாழ்வில் வந்து சேராமல் போனதே நல்லதுதான். வசந்தா என் துணைவி ஆகி, இப்படிக் குண்டம்மாளாக

வளர்ந்து நின்றால், உண்மை ரசிகனான என்னால் எப்படி சகித்துக்கொண்டிருக்க முடியும்? அவள் என்னை விட்டுப் போனதே எனக்கு லாபம்...

அவன் முகத்தில் சிரிப்பு பரவியது. அந்த லாபத்தைக் கொண்டாட வேகமாக ஒரு ஓட்டலை நோக்கி நடந்தான் ராஜாகிருஷ்ணன்!

'சௌராஷ்டிரமணி', தீபாவளி மலர் 1971

# அனுதாபம்

அவன் அப்பாவியாகத் தோற்றம் கொண்டிருந்தான். மனிதக் கும்பலிடையே தனித்துநிற்கும் படியான தோற்றம் அவனுக்கு இல்லையாயினும், அவன் ஒரு விசித்திர மனிதன் தான். அவனோடு சிறிது பழகியவர்களுக்கும் அது புரிந்துவிடும்.

அவன் மட்டும் முண்டி அடித்து முன்னேறித் தன்னை சதா உணர்த்திக்கொள்ளும்—மற்ற அனைவர் நோக்கிலும் கருத்திலும் உறுத்திக்கொண்டிருக்கக்கூடிய—சாமர்த்தியத்தைப் பெற்றிருந்தானானால், அவனுடைய அந்தத் தனிப் பண்புக்காக அவனுக்குப் பொன்னாடை போர்த்தப் பட்டிருக்கலாம். 'மகான், மகாத்மா' என்று போற்றிப் புகழ்வதற்கும் அவனைச் சுற்றிலும் கும்பல் கூடியிருக்கவும் கூடும். ஆனால் அவன் அரசியல்வாதி இல்லை.

அவன் ஒரு செல்வராக இருந்து, இந்தப் பண்பை விளம்பரப் பகட்டுடன் வெளிச்சமிடக் கற்றிருந்தால், அவனுக்கு அர்த்தம் விளங்காத வடமொழிப் பெயர் கொண்ட பட்டங்களை வழங்க ஞானிகளும், ஆதீனங்களும் மடத்தலைவர்களும் முன்வந்திருக்கக்கூடும். அவனை ஞானி என்றும், தியாகி என்றும், ஜீவன் முக்தன், சித்தன், என்ற தன்மைகளிலும் கூடப் பாராட்டி விழா எடுக்க அடியார் திருக்கூட்டம் எப்போதும் சித்தமாகக் காத்திருக்கவும் கூடும்.

அவனோ அத்தகைய சிறப்புகள் எதையும் பெற்றிராத, எனினும் வாழ்க்கைப் பாதையிலே ஒவ்வொரு நாள் பயணத்தையும் மற்றவர்களுக்குப் புலனாகாத—பிறர் புரிந்து கொள்ளவும் தயாராக இராத—தியாகங்களைச் செய்தபடி நடத்தியாக வேண்டிய நிலையில் உள்ள மத்திய தர

வர்க்கத்தை, அதிலும் அவ்வர்க்கத்தின் கீழ்த்தட்டை சேர்ந்த சாதாரண மனிதனாக இருந்தான்.

அவனுக்கு அப்படி ஒரு இதயம் ஏன் வாய்த்தது? வாழ்க்கையையே மென்னியை அழுத்தும் பயங்கரமான சிலுவையாக ஏற்றுக் கூனிக்குனிந்து திரியும் அந்த அப்பாவிக்கு ஏன் இந்த விசித்திர சுபாவம்?

மழை பெய்து கொண்டிருக்கிறது. கொஞ்சம் கனத்த மழைதான். அவன் வீட்டில் ஜன்னலின் பின்னிருந்து, சரிந்து விழும் மழைக் கம்பிகளையும், ஒடிப் பதுங்கும் மனிதர்களையும், குடை பிடித்து சாவகாசமாக நடப்பவர்களையும், வேடிக்கை பார்த்தபடி பொழுதுபோக்குகிறான். அப்போது ஒரு மாடு நனைந்துகொண்டே வந்தது. ஒரு வீட்டின் ஓரமாக ஒதுங்க முயலுகிறது. அங்கே மழைக்கு ஒதுங்கி நின்றவர்கள் அதை விரட்டுகிறார்கள். அது மிரண்டு பார்வையைச் சுழற்றியபடி மீண்டும் தெருவில் நடக்கிறது.

அதன் அந்தப் பார்வை அவனை என்னவோ செய்கிறது. அந்த மாட்டுக்கு உதவ வேண்டும் என்ற ஆசையும், எப்படி உதவுவது எனத் தெரியாத தவிப்பும் அவன் உள்ளத்தில் கவிகின்றன. அது சிறு வேதனையாய்க் குறுகுறுக்கிறது. அதை அமுக்கிக்கொண்டு வேறொரு வேதனை அங்கே படர—அல்லது பழைய வேதனையே கனத்துப் பெரிதாகிச் சுமையாய் அழுத்த உதவுகிறது வேறொரு காட்சி.

சிறுவன் ஒருவன் தலைகுனிந்து நடந்துபோகிறான். தலை மீது விழும் மழையோ, கைகளில் பாரமாய் இழுக்கும் ஐஸ் ஜாடிகளோ அதற்குக் காரணமாக இருக்கலாம். ஆனால் அதுவே முழுப்பெரும் காரணம் ஆகிவிடாது. மழை பெய்வதனால்—இன்னும் தொடர்ந்து பெய்யும் எனத் தோன்றியதனால்—ஐஸ் விற்க வழி இல்லை; எனவே அவன் பிழைப்பில் மண்தான் என்ற எண்ணமே அவனை அழுத்தி, மண்ணைப் பார்த்துக் குனிந்தவாறு நடக்கச் செய்தது.

ஜன்னலுக்குப் பின்னிருந்து பையனைக் கவனித்த அவனுக்கு அழுகையே வந்துவிடும் போலிருந்தது. ஐஸ் விற்று,

அதில் கிடைக்கும் கமிஷனைக் கொண்டு, பிழைப்பு நடத்தியாக வேண்டிய நிலையிலிருந்த அச்சிறுவனுக்காக அவன் இரக்கப்படாத நாளே கிடையாது. அந்த இரக்கத்தினால் அவ்வப்போது அந்தப் பையனிடம் பத்துப் பைசாவுக்கோ இருபது பைசாவுக்கோ ஐஸ் வாங்கி, தனக்கு ஐஸ் பிடிக்காது, அது தேவையும் இல்லை என்பதனால், அதை ரோட்டின்மீது விசிறி அடித்து அது துகள் துகளாகச் சிதறித் தெறிப்பதைக்கண்டு ரசித்திருக்கிறான். சில சமயம் ஐஸ்—பால் ஐஸ், என்ற குரல் கேட்டு, வாங்கித்தின்ன ஆசை இருந்தும் வசதி இல்லாததனால் அந்தப் பையனையே ஏக்கத்துடன் பார்த்து நிற்கும் யாராவது சிறுவன் அல்லது சிறுமிக்கு, அவன் வாங்கியதைக் கொடுத்துவிடுவதும் உண்டு. அப்போது ஆசை எதிர்பாராராது நிறைவேறப்பெற்ற சிறுவன் அல்லது சிறுமியின் முகத்தில் புது உதயமாய் ஒளிவீசும் மகிழ்ச்சி அவன் உள்ளத்தில் சேர்க்கும் ஆனந்த நிறைவு அவனை கிறுகிறுக்க வைக்கும்.

மழை பெய்யும் வேளையில், ஐஸ் பையனுக்கு உதவி தேவைப்படுகிறபோது, தன்னால் சிறு உதவியும் செய்ய இயலவில்லையே—ஐஸ் வாங்கி உதவத் தன் கையில் பத்துப் பைசா கூட இல்லையே—என்ற உணர்வு அவன் வேதனைச் சுமையில் பளு அதிகம் சேர்த்தது. துயரம் அவன் தொண்டையை அடைத்தது. நெஞ்சில் வலித்தது. கண்களில் நீர் வடிந்தது.

இப்படி எத்தனையோ சந்தர்ப்பங்கள்! அவனை அறிந்தவர்கள் கூட, அவன் வாய் மூலமாக அவனது இதய வேதனையைக் கேட்டறிந்தால், 'என்ன பைத்தியக்காரத்தனம் இது!' என்று எள்ளிச் சிரிக்கும்படி செய்கிற விஷயங்கள்...

அவன் வீட்டின் முன்னே உள்ள தெரு வழியாகத்தான் மயானத்துக்குப் பிணங்கள் எடுத்துச் செல்லப்படும். அப்படிச் செல்கிறவற்றின் இறுதி யாத்திரையில்தான் எத்தனை ஏற்றத் தாழ்வுகள்! கொட்டு முழக்கமும் பூ அலங்காரமும் ஆட்டபாட்டமுமாய்ச் செல்லும் ஊர்வலம். இறந்தவனின் அந்தஸ்தையும் செல்வாக்கையும் காட்டும் விதத்தில் பலரகமான மனிதர்கள் கும்பலாகத் திரண்டுவர,

மெதுவாக நகர்ந்துசெல்லும் ஊர்வலம். சுமாரான கூட்டத்தோடு போகும் சராசரி ஊர்வலங்கள்—

அவற்றை எல்லாம் கண்டிருந்த அவன் ஒருசமயம் ஒரு பிணத்தின் பயணத்தைக் காண நேரிட்டது. கொட்டு முழக்கு, சேகண்டி ஒலி எதுவும் கிடையாது. பூ அலங்காரம், தடபுடல்கள் இல்லவே இல்லை. முன்னும் பின்னும் மவுனமாக நடந்து வரும் ஆட்களும் இல்லை. பாடையைச் சுமந்து செல்லும் நாலுபேர். கொள்ளிச்சட்டி தாங்கி நடக்கும் ஒருவன். வெறும் மூங்கில் பாடையில் பரிதாபமாய்கிடந்த பிணம். அவ்வளவுதான். 'அன்வெப்ட், அன் ஆனர்ட் அண்ட் அன்ஸங்' என்கிற மாதிரி, துக்கம் கொண்டாட எவரும் இன்றி, நேற்றுவரை இருந்தவனின் நினைவை கௌரவிக்கும் பெருமைச் சின்னங்கள் எதுவும் இல்லாமல், அவன் சிறப்பைப் புகழவோ அவன் இழப்பை எண்ணி அழவோ யாரும் இராது, வாழ்வின் வெறுமையை எடுத்துக் காட்டுவது போல் சென்றுகொண்டிருந்த அந்தப் பிணத்தைப் பார்த்து, அதனுடைய அவலநிலைக்காக அவன் மனம் இரங்கி அழுதது.

ஒரு சந்தர்ப்பத்தில் அவன் ஆஸ்பத்திரிக்குப் போனான். அங்கே ஒவ்வொரு பகுதியிலும் நோயாளிகளாய்க் காத்து நின்றவர்களைப் பார்த்ததும் அவனுக்கு என்னவோபோல் ஆயிற்று. கண் நோவினாலும். காது உபத்திரவங்களாலும், சரும வியாதிகளாலும், இன்னும் மனித உடலில் ஏற்படக் கூடிய என்னென்னவோ சீக்குகளாலும் சிரமப்பட்டுக் கொண்டு, சீட்டு வாங்கக் காத்துநின்று, பிறகு உரிய பகுதியில் டாக்டரைக் காணக் காத்து நின்று, பின்னர் பதிவு செய்துகொள்ளும் இடத்திலும், அப்புறம் மருந்துகள் வாங்குமிடத்திலும் காத்து நின்று அவதிப்படுவதைக் கண்டதும், அவன் அவர்கள் எல்லோருக்குமாகவும் அனுதாபம் கொண்டான்.

மழை பெய்கிற நாட்களில், மழையில் நனைகிறவர்களுக்காகவும், ரோடுகளின் ஓரங்களில், நடைபாதைகளில், குடியிருந்து மழைத்தொல்லையால் கஷ்டப்படும் மனிதர்களுக்காகவும் அவன் மனவேதனை அடைவது போலவே வெயிலின்

கடுமையால் பாதிக்கப்படும் அனைவருக்காகவும் இதயவலி அனுபவிப்பது உண்டு.

அழகிகளைப் பார்த்தும் அவன் அனுதாபம் கொண்டான். அதை அறிந்ததும்தான் அவனுடைய நண்பர்கள் அவனுக்கு 'ஸம்திங் இஸ் ராங் ஸம்வேர்' 'மூளையில் ஏதோ கோளாறு' என்றும், 'அவன் மைண்டே கோளாறானதுதான்' 'ஸைக்கலாஜிக்கலி தேர் இஸ் ஸம்திங் ராங் வித் ஹிம்' எனவும் தாராளமாக ஸர்டிபிகேட் வழங்கினார்கள்.

அழகாக விளங்குகிற பெண்ணைப் பார்த்து, அவளது எழில் அம்சங்களை ரசித்து மகிழ்வதற்குப் பதிலாக:

அவன் பட்டினத்தார்த்தனம் பண்ணுவானோ—அது சீழ்க்கட்டி, இது தசை, இது உதிரம், இது அருவருக்கப்பட வேண்டிய குழி எனப் புலம்புவானோ—என்று கேட்டால்,

அப்படிச் செய்தாலாவது பரவாயில்லை; ஒரு வேதாந்தப் பித்து, சாமியார்ப் பைத்தியம் என்று கருதலாமே என நண்பர்கள் குறிப்பிடுவார்கள்.

அவன் விஷயமே வேறு. ஒரு அழகி சிங்காரித்துக் கொண்டோ, சிங்காரிக்காமலோ, 'சிரித்த முகமும் சீதேவியுமாக' அவன் கண்ணில் படுகிறபோது, அவன் உள்ளம் அனுதாபத்தினால் அழுது வழியும். பருவ வயசில் அவளைப் போலவும் அவளை விடவும் அழகாக விளங்கிய சில பெண்கள், இரண்டு மூன்று வருட காலத்திலேயே வாடி வதங்கி, அழகு குலைந்து, மெருகிழந்து ஒட்டி உலர்ந்து வெருளிகள் மாதிரி ஆகிவிட்டது அவன் நினைவில் தோன்றும். அவன் கண்ணெதிரே பளபளவெனத் துலக்கப் பெற்று, பூவிட்டுப் பொட்டுமிடப்பட்ட குத்து விளக்குப்போல் காட்சி அளிக்கிற பெண்ணும் வாழ்க்கைத் தீயில் கருகி வதக்கப்பட்டு எப்படி எப்படியோ மாறிப்போவாளே என்ற எண்ணமும், அவள் அவ்வாறு கோரமாய், கண்ணருவியாய் நிற்கிற தோற்றமும் தான் அவனுள் பளிச்சிடும். அதற்காகவே அவன் உள்ளம் மோனத்துயர் சிந்தி அனுதாபப்படும்.

இதை மற்றவர்கள் புரிந்துகொள்ளவில்லை என்றால் அது அவன் தவறா? இல்லை, அவர்கள் தவறு என்றுதான் எப்படிச் சொல்லமுடியும்?

அவசியம் இல்லாததற்கெல்லாம் அவன் அனுதாபம் கொண்டு வருந்தினான். அவனது அனுதாபத்துக்கு இலக்கானவர்கள் தங்கள் நிலை குறித்து ஒருநாள் ஒரு பொழுதுகூட வருத்தப்படுவதில்லை என்பது அவனுக்கே தெரியும்.

வறுமையினால், பசிக்கொடுமையால், தங்கள் உடலை 'வாடகைக்கு விட்டு'ப் பிழைப்பு நடத்தும் பெண்களுக்காக அவன் நியாயமான அனுதாபம் வளர்த்தான். அதேபோல, ஸ்டைலாக, நாகரிகப் பகட்டுகளோடு, ஜாலியாக நாளோட்டுவதற்குத் தங்கள் உடலையும் கவர்ச்சியையும் பயன்படுத்தத் தயங்காத கல்லூரிக் குமரிகள், உத்தியோக மகளிர், சமூகப் பெண்கள் வகையறாவுக்காகவும், அரசியல் உலகில்—பொது வாழ்வில்—கலைத்துறையில் முன்னேறிப் புகழ்பெறும் நோக்கத்தோடு தங்கள் உடலை முதலாகவும் ஏணியாகவும் துருப்புச்சீட்டாகவும் பயன்படுத்தக் கூசாத துணிச்சல்காரிகளுக்காகவும், அவர்களது போக்குகளுக்காகவும் அவன் வருத்தப்பட்டு அனுதாபம்கொள்வது வழக்கம்.

உல்லாச வாழ்வு வாழும் மேல் மினுக்கிகளும் சிங்காரிகளும் தங்கள் வாழ்க்கை முறையை வெற்றிப் பாதை என்று கருதுகிறார்களேயொழிய, இப்படியும் வாழ வேண்டியிருக்கிறதே என்று கவலைப்படவா செய்கிறார்கள்?

மனம் குமையும் அந்த அப்பாவிதான், 'சே, இதெல்லாம் ஏன் இப்படி இருக்கு? மனித வாழ்க்கை எதற்காக இவ்வாறு அமைந்திருக்கு? இந்த உலகத்தில் எதுவுமே சரியாக இல்லேன்னுதான் தோணுது' என்று குமுறுவான், அவன் மனமும் அடிக்கடி புலம்பும்.

பெரிய ஆறுகள் பொங்கிப் பிரவாகித்து ஊர்களை நாசமாக்கின; மனிதர்களைச் சாகடித்தன... மனிதர்கள் சமரிட்டுச் செத்து விழுகிறார்கள். பிள்ளைகள் சாகடிக்கப்படுகின்றன. பெண்கள் அவமானப்படுத்தப்பட்டு, கொலை செய்யப்படு

கிறார்கள். மக்கள் சொத்திழந்து, வீடிழந்து சொந்த நாட்டை விட்டு அகதிகளாக ஓடிவந்துகொண்டே இருக்கிறார்கள்—இவை போன்ற செய்திகள் அவனை பித்துப் பிடித்தவன்போல் ஆக்கிவிடும்.

தலைமயிரைப் பிய்ப்பதுபோல் கை விரலால் உருவிக் கொண்டு, 'சே, இதெல்லாம் ஏன் இப்படி நடக்கு? இதுக்கு என்ன பண்ணுவது? ஏதாவது பண்ணியாகணுமே!' என்று முணுமுணுத்தபடி இருப்பான். அவ்வேளைகளில் அவன் ஒரு வேடிக்கை மனிதன் ஆகவே மற்றவர்களுக்குத் தோன்றினன்.

மனிதர்களுக்காக மட்டும்தான் அவன் மனம் நொந்தான் என்றில்லை. சாக்கடையில் புரண்டுவிட்டு, தெருவில் அசிங்கக் கோலம் தீட்டியவாறு அசைந்து நடக்கும் பன்றிகளுக்கும், கோபத்தை பல்லில் காட்டி வெறியை உறுமலில் தேக்கி, ஒன்றோடொன்று கவ்விக் கடித்துச் சண்டைபோடும் தெரு நாய்களுக்காகவும் அவன் அனுதாபப்பட்டான். 'இதெல்லாம் ஏன் இப்படி இருக்கு?' என்று வருந்தினன்.

கொடிகளில், செடிகளில், இனிமையாய் குளுமையாய் பூத்துக் குலுங்கவேண்டிய மலர்கள் செடி அருகில் உதிர்ந்தும், காற்றில் அடிபட்டுத் தெருப் புழுதியில் புரண்டும் அலைக்கழிவதைக் கண்டும் அவன் உளம் உருகி வருந்தினன்.

இரக்கத்தின், கருணையின் ஊற்ருக இருந்தது அவன் உள்ளம். அவனே அனுதாபம் எனும் உணர்ச்சியின் உயிர் உருவமாகத் திரிந்து அல்லாடினன். அவனை, அவன் உள்ளத்தை, உணர்ச்சியின் தன்மையை சரியாகப் புரிந்து கொள்ளக்கூடியவர்கள் அவன் வழியில் வந்து சேரவேயில்லை; பாவம்!

அன்று...

காலை நேரம் ரசிக்கப்பட வேண்டிய அற்புதக் காவியமாக மலர்ந்து கிடந்தது. விண்ணும், மண்ணும், இளம் ஞாயிற்றின் பொன்னெளி தொட்ட இடங்களும் பொருள்களும் இனியனவாய், எழில் சேர்ந்தனவாய் மிளிர்ந்தன. பூக்கள்

சிரித்த செடிகொடிகள் தனி அற்புதம். வண்ணமயமான விதவிதப் பூக்கள் குளுமைக் காட்சிகள்.

அவன் உள்ளத்தில் ஒரு கிளுகிளுப்பு. புதிதாய்ப் பிறந்து விட்டவன்போல், அவன் தனியொரு உவகைத் துடிப்புடன் தெருவில் நடந்துகொண்டிருந்தான். எதன் மீதோ ஏறி எங்கோ மிதந்து பறப்பது போன்ற உணர்வுடன் நடந்தான்.

நடு ரஸ்தாவில் ஒரு பூ கிடந்தது.

இரண்டு இலைகளைக்கொண்ட ஒரு அழகு ரோஜா. புதுமையாய் சிரித்தது. ஸ்கூட்டரின் பின்புறம் ஜம்மென அமர்ந்து அவசரமாக எங்கோ சென்ற எவளின் கூந்தலை யாவது அழகுபடுத்திக்கொண்டிருக்க வேண்டிய மலர். அப்படி இருந்து, வேகத்தில்—உலுக்கலில், அவளறியாமலே அது நடுத்தெருவில் விழுந்திருக்க வேண்டும்.

'இந்த அழகுக்கு இப்படி ஒரு முடிவு ஏன்? இது சரி யில்லையே!' என்றது அவன் மனம். அழகின் சிரிப்பு அவனை இழுத்தது.

அதற்காக, அதன் பரிதாப நிலைக்காக, அனுதாபம் கொண்ட அவன் அதை அப்படியே விட்டுவிட விரும்பாதவனாய், பூவை எடுக்கக் குனிந்தான். தனது உணர்வும், தன் கருமமும், தானுமாய் ஆகிவிட்ட அவன் சூழ்நிலை பற்றிய விழிப்புணர்வு கொண்டிருந்தானில்லை.

வெகுவேகமாக வந்த கார் ஒன்று அவனை மோதியது. தள்ளியது. ஏறியது. கோபத்தால் உறுமிக்கொண்டு மேலும் வேகமாய் முன்னேறிப் பாய்ந்தது. புழுதியை வாரி இறைத்துக்கொண்டு சடக்கென ஒரு திருப்பத்தில் ஓடி மறைந்தது.

அதை ஓட்டியவர் அவசர உலகத்தின் மிக அவசரமான பிரதிநிதி. மனிதாபிமானமோ, உயிர்களிடம் இரக்கமோ, ஊறாத வறண்ட நாகரிக இதயத்தில் 'ஆபத்திலிருந்து தப்பி ஓடணும்' எனும் மிருக உள்ளுணர்வு துடிப்பாய் இயங்கிக் கொண்டிருந்தது. அது அவர் இயக்கிய காரையும் பற்றிக் கொண்டதில் வியப்பில்லை.

அவன்—அனைத்துக்காகவும் அனைவருக்காகவும் இதயத்தில் ஈரம் கொண்டிருந்த அனுதாபி—அவனுக்காக அனுதாபப்பட எவரும் இல்லாத வெளியிலே கவனிப்பாரற்றுக் கிடந்தான்.

சூரியனின் பொன்னொளி அவன் உடலையும் தொட்டுப் பளிச்சிட்டது.

'சதங்கை', ஏப்ரல் 1972

# புத்திசாலி

பார்க்கும் போதே தெரியுதே அவன் புத்திசாலி என்று—இப்படிச் சிலர் சொன்னார்கள்.

அவன் மூஞ்சியைப் பார்த்தாலே சரியான முட்டாள் என்று தெரிகிறதே!—இவ்வாறு சிலர் தெரிவித்தார்கள்.

புத்திசாலி மாதிரிக் காட்சி அளிக்கும் மடையன் என்று வேறு சிலர் சொன்னார்கள்.

வெவ்வேறு நபர்களுக்கு அவரவர் நோக்குக்கு ஏற்றபடி தோற்றம் காட்டிய சுயம்புலிங்கம் மற்றவர்களுடைய அபிப்பிராயங்கள் குறித்துக் கவலை கொண்டானில்லை. அவன் கவலைப் படுவதற்கு வேறு எவ்வளவோ விஷயங்கள் இருந்தன.

மற்றவர்களைப் பற்றி, மனிதர்கள், சமூகம், நாடு, உலகம், வாழ்க்கை முதலிய அனைத்தையும் பற்றி அவன் தனி அபிப்பிராயங்களை வளர்த்து வந்தான்.

இப்படி எண்ணங்களை வளர்த்து வருவோரில் பலருக்கு இருப்பது போலவே அவனுக்கும் திடமான கருத்துக்களும் நோக்கங்களும் லட்சியங்களும் இருந்தன.

இந்த உலகம் இருக்கிறதே, அது எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இல்லை. சமூகமும் நாடும் மிக மோசமான நிலையில் உள்ளன. மனிதர்களின் பேச்சிலே சத்தியம் இல்லை. அவர்களது செயலில் சத்தியம் இல்லை. நாட்டினரின் கொள்கைகளில், போக்குகளில், நடவடிக்கைகளில் சத்தியம் இல்லை. 'சத்தியமேவ ஜெயதே' என்கிற சுலோகத்தின் எழுத்துக்களில் தவிர வேறு எங்கும் எதிலும் சத்தியம் இல்லவே இல்லை. இதை எடுத்துச் சொல்லும் ஒன்றிரு குரல்கள் பெருங்கூச்சலில் அமுங்கி விடுகின்றன. ஆகவே, பலர் மவுனமாகவே இருந்து விடுகிறார்கள். நாமும்

அப்படி இருந்து விடுவதா?—சுயம்புலிங்கத்தின் மனக்குரல் ஓயாது கீச்சிட்டுக் கொண்டிருந்தது இப்படி.

அப்படி மன அரிப்பைப் பெறுகிறவர்கள் செய்யக் கூடிய காரியங்கள் மூன்று உண்டு என அவன் தேர்ந்தான். மேடை போட்டுக் கூட்டம் கூட்டி முழக்கம் செய்யலாம். நாட்டு மக்களிடையே அறிவொளி கொளுத்தத் தூண்டி, தன் இதய ஒலியை எடுத்துச் சொல்ல, ஒரு பத்திரிகை நடத்தலாம். தனிக்கட்சி ஒன்று ஆரம்பிக்கலாம். தனி மேடை போட முடியாதவர்கள், தனிக்கட்சி காணப் போதிய பலம் (சகல விதமான பலங்களும்) இல்லாதவர்கள், இதர கட்சிகளின் நிழலில் ஒதுங்கி, தங்கள் கர்ஜனை, முழக்கம், உறுமல், சிம்மக்குரல், இடியோசை வகையராவை உதிர்ப்பதும் இயல்பாக இருக்கிறது.

மேடை, கட்சி, பத்திரிகை, மூன்று சக்திகளையும் ஒரு நபரே நிர்வாகிக்கும் ஆற்றல் பெற்றிருப்பதும் தெரிகிறது.

ஆனால், அப்பாவி சுயம்புலிங்கத்தினால் அப்படி எல்லாம் செய்ய இயலாது.

எனவே, அவன் ஒரு பத்திரிகை ஆரம்பித்தான். எப்படியோ கடன்—கிடன் வாங்கி, 'அண்டாவைத் தூக்கிக் குண்டானிலே போட்டு, குண்டானைத் தூக்கி அண்டாவிலே போட்டு' உருட்டும் புரட்டும் பண்ணி, பத்திரிகை நடத்தப் போதுமான பணம் சேர்த்துக் கொண்டான்.

அவனுடைய பத்திரிகையின் முதல் இதழைப் பார்த்ததும் பலரும் பல விதமாகப் பேசத்தான் செய்தார்கள்.

'நாங்கள் அப்போதே சொல்ல வில்லையா? அவன் சரியான முட்டாள். அதை விளம்பரப்படுத்துகிறது இது' என்று சிலர் சொன்னார்கள்.

'அவன் புத்திசாலி என்பதை இது காட்டுகிறது' என்று சிலர் பேசினார்கள்.

அவன் மகா புத்திசாலியா, 'மாங்கா மடையனா' என்று தீர்மானிக்க முடியாமல் திணறியவர்களும் இருந்தார்கள். எல்லோரும் அவனுக்கு நல்லுரை கூறி உதவினார்கள்.

இந்த நாட்டிலே அதிகமாக, மலிவாக, உற்பத்தியாவது பிள்ளைகள் மட்டுமல்ல; போதனைகள், உபதேசங்கள், பொன் மொழிகள் கூடத்தான் என்று அவன் குறித்துக்கொள்ள அனைவரும் வாய்ப்புத் தந்தார்கள்.

'அப்பனே, இது மாதிரிப் பத்திரிகை எடுபடாது. இந்த நாட்டு மக்களுக்குத் தேவையான தகவல், செய்திகள் சுவையான விஷயங்களே வேறே. சினிமா நடிகை எந்தப் பாலில் குளிக்கிறாள், எப்படிக் குளிக்கிறாள் அல்லது குளியாமல் இருக்கிறாள். எந்த நட்சத்திரம் என்னென்ன செய்கிறார், என்ன உளறுகிறார் என்பன போன்ற, அறிந்துகொள்ளப்பட வேண்டிய அதி அவசரச் சேதிகளைத் தேடிப்பிடித்துச் சுடச் சுடக் கொடுக்கவேண்டும். சிங்காரி, ஒய்யாரி மேனிமினுக்கி வகையறாவின் எடுப்பான போஸ்களைப் படம் பிடித்துப் போட வேண்டும். நகைச்சுவையின் பேரால் வளர்க்கப்படுகிற உளறல்—பேத்தல்—அபத்தம்—கோமாளிக் கூச்சல்களை எல்லாம் தொகுத்துக் கொடுக்கவேண்டும்...' இப்படி அருளுரைகள் வழங்கினார்கள்.

'உங்கள் அலுவல்களை நீங்கள் பாருங்கள், என் காரியத்தை நான் கவனிப்பேன்' என்று அவன் சொன்னான்.

'மடையன். உலகம் தெரியாத முட்டாள். உருப்படத் தெரியாத மண்டூகம்' என்று மற்றவர்கள் குறைகூறிவிட்டு, தங்களுக்குள் அவனைப்பற்றி இஷ்டம்போல் பேசினார்கள்.

'நாங்கள் என்ன சொன்னோம்? அப்பவே சொல்லவில்லையா?' என்று அவர்கள் கொக்கரிப்பதற்குக் காலம் துணைபுரிந்தது.

நடக்க முயன்ற சுயம்புலிங்கப் பத்திரிகை தள்ளாடி விழுந்து, படுத்து, ஒரே கிடையாய்க் கிடந்து முடிந்தது.

அவன் வேறு முயற்சிகள் செய்து புத்தக வெளியீட்டகம் ஒன்று தொடங்கினான். 'சிந்தனைத் தீவட்டி' என்ற பெயரில் சுடர்ப்பொறிகளையும், சத்திய வாக்குகளையும் நூல்களாக உலுப்பித் தள்ளினான்.

பத்திரிகை தொடங்கும் முன்பு அரைப் பட்டினி ஆசாமி போல் தோன்றிய அவன் பத்திரிகை நின்றபோது 'கஞ்சிக்கு இல்லாதவன்'போல் காட்சி அளித்தான். இப்போது பெரும் பஞ்சத்தில் அடிபட்ட நித்திய தரித்திரன்போல் மாறியிருந் தான்.

அவனைப் பார்த்தவர்களுக்கு இப்போது தயக்கம் ஏற் படவேயில்லை. அவன் சரியான முட்டாள் என்று ஓங்கி அடித்துச் சொன்னார்கள்.

ஒருநாள் அவன் புத்தக வெளியீட்டகத்தையும் இழுத்து மூடிவிட்டு எங்கோ போய் மறைந்தான்.

மூன்று வருடங்களுக்குப் பிறகு, சுயம்புலிங்கத்தைப் பற்றி எல்லோரும் பேசலானார்கள். வியப்புத்தான் பல குரல் களின் ஒரே தொனியாக அமைந்தது.

சுயம்புலிங்கம் 'ஆள் அடையாளமே தெரியாதபடி மாறிப் போனான்' என்று சொன்னார்கள். பழைய 'அரிசி அப்பளாம்' தோற்றம் இல்லை. உருத்தங்களி உருண்டை (மேலே எண்ணெய் தடவி, பெரிதாகத் திரட்டப்பட்டது) போல் மினுமினுப்புடன் இருக்கிறான் என்று ஒருவர் சொன்னார். 'தொந்தி போட்டு, குட்டி முதலாளி கணக்கா... எப்படி இருக்கான்கிறீர்!' என்றார் ஒருவர்.

'நாம் அப்பவே சொல்லலியா? அவன் சரியான புத்திசாலி தான்!' என்று பலரும் சொன்னார்கள்.

அவனைச் சந்திப்பதற்காகவே ஒவ்வொருவரும் பக்கத்து நகரத்துக்குப் போய் வந்தார்கள்.

உண்மைதான். சுயம்புலிங்கம் ரொம்பவும் முன்னேறி விட்டான். உலகத்தைப் புரிந்துகொண்டு, நாட்டினரின் தேவையைப் பூர்த்தி செய்யும் சாமர்த்தியசாலியாக வளர்ந் திருந்தான். வாரிவிடாத கிராப்பும், கண்ணாடி அணிந்த முகமும், தொளதொளத்த ஜிப்பாவுமாக, புத்திசாலிக் களையோடு அவன் ஜம்மென்று கொலுவிருந்தான் 'திருவள்ளுவர் பார்மஸி'யில்.

இந்த நாட்டில் தழைத்தோங்கும் 'குடிசைத் தொழில்' ஆகிவிட்ட 'அரிஷ்டம்' உற்பத்தியை, 'பழரசம்' தயாரிப்பை, அவனும் உரிய ஒரு 'வாத்தியார்' மூலம் கற்றுக்கொண்டான். தீவிர உற்பத்தியில் ஈடுபட்டான். தேவையான லைசென்ஸ் வாங்கிக்கொண்டு, முக்கிய இடம் ஒன்றில் 'பார்மசி'யைத் திறந்து வைத்தான்.

'அருமையான பிஸினஸ். தண்டர் ஸேல்ஸ் தான்' என்று அவனே அகமகிழ்ந்து போனான் முதல் வருஷத்தின் ஆரம்ப மாதங்களிலேயே.

அப்புறம் என்ன? கட்டிடம் சொந்தம் ஆயிற்று. இன்னும் சில இடங்களில் பிராஞ்சுகள். இரண்டு பங்களாக்கள்.

'நம்ம ஒய்ஃப் லட்சுமிக்கு ஒண்ணு! லைப் விஜயாவுக்கு ஒண்ணு!' என்று பெருமையோடு பேசினான் அவன்.

காரும் வாங்கி விட்டான்.

'மக்களின் சேவை மகேசனின் சேவை. சும்மாவா சொன்னான்! மக்களுக்கு எது தேவையோ அதைக் கொடுப்போம். மக்கள் நம்மை வாழவைப்பார்கள். திருவள்ளுவர் பார்மசிக்கு இன்னும் சில பிராஞ்சுகள் ஓப்பன்பண்ணியாகணும்' என்று அவன் முழக்கம் செய்வது சகஜமாகி விட்டது.

அவனைக் காணச் செல்லும் நண்பர்களைப் பிரமாதமாக உபசரித்தான். கண்டு பேச வந்தவர்களுக்கு அல்வாவும், மிக்ஸரும், காப்பியும் சப்ளை செய்தான்.

'நீங்க திருவள்ளுவர் தினத்தன்று வந்திருக்கணும், அண்ணாச்சி, ரொம்ப கிராண்டு போங்க! திருவள்ளுவர் முக்தி அடைஞ்ச நாளைக் கொண்டாடணும்னு சில புலவர்கள் சொன்னாங்க. கூடாது; அவர் பிறந்த நாளைத்தான் கொண்டாடணுமின்னு வேறு சில அறிவாளிகள் சொன்னாங்க. மாட்டுப் பொங்கல் நாளை திருவள்ளுவர் தினமாக்குங்கன்னு நாட்டுக்கு அறிவிப்பு விடுத்திருக்குது அரசு. நமக்கெதுக்கு

வீண் பொல்லாப்பு! நான் மூன்று நாளையுமே கொண்டாடு றதை வழக்கமாக்கிப் போட்டேன்' என்று சொல்லி, அட்ட காசமாய்ச் சிரிப்பான் சுயம்பு.

'அபிப்பிராய பேதம் என்பது அபிப்பிராயம் என்கிற ஒன்று இருக்கிற வரை இருந்துக்கிட்டே தான் இருக்கும் அண்ணாச்சி! பேதங்களை ஒழிக்கணும்னு சொன்னா, சகல அபிப்பிராயங்களையும் ஆதரிப்பது ஒன்றுதான் வழி. அதையே தான் நான் செய்வது!' என்று அவன் ஒலிபரப்பத் தவறு வதும் இல்லை.

இப்போது அவனைப் பற்றி அபிப்பிராய பேதங்கள் எழுவேயில்லை. 'சுயம்புலிங்கமா? அவன் தான்யா பிழைக்கத் தெரிந்த புத்திசாலி!' என்றே எல்லோரும் சொன்னார்கள்.

'தீபம்', ஏப்ரல் 1970

# உருப்படாத பயல்

சொக்குப் பயல்தானே! அவன் எங்கே உருப்படப் போறான்?

சொக்கையா என்கிற சொக்கலிங்கம் பற்றி அவனது ஊர்க்காரர்கள் கொண்டிருந்த மேலான அபிப்பிராயம் இது.

'சவத்தைப் போச்சொல்லு சவத்தை! தனக்காகவும் தெரியாது, மத்தவங்க சொன்னாலும் புத்தியிலே ஏறாது; வெறும் புத்திகெட்ட கழுதை!'

சொக்கையாவின் அக்காக்காரிகளும், பெரியம்மா, சின்னம்மா, அத்தை என்று ஏதேதோ உறவுமுறை கொண்ட அம்மாளுகளும் அடிக்கடி உதிர்த்த பொன்மொழிகள் இவை.

அவனுக்கு அந்த ஊரில் உறவுக்காரர்களுக்குப் பஞ்சம் இல்லை. வயிற்றுப் பாட்டுக்குத்தான் சிரமம்.

அவன் தந்தை சிவசிதம்பரம் பிள்ளை இறந்த நாளிலிருந்தே சிரமம் கவியத் தொடங்கிவிட்டது என்று சொல்ல வேண்டும். அவர் செத்தும் ஏழெட்டு வருடங்கள் ஓடி விட்டன.

பிள்ளைவாள் உயிரோடு இருந்த காலத்தில் அந்த வீட்டில் பாலும், மோரும், சோறும், பாயசமும் தாராளமாகப் புழங்கிவந்தன என்று எண்ணவேண்டியதில்லை. அவர் என்ன என்னவோ செய்து—அவரே சொல்லிக்கொண்டபடி, 'யானையைத் தூக்கிப் பானையிலே போட்டு, பானையை எடுத்துச் சட்டியிலே போட்டு'—ஒரு மாதிரியாகக் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தார். அங்கும் இங்கும் பாடுபட்டார். 'கடனைக் கிடனை வாங்கி ஒவ்வொரு நாளையும் ஒப்பேத்தினார். பொதுவாக மத்தியதரத்துக் குடும்பத்தினர் செய்கிற எல்லாச் சித்து வேலைகளையும் செய்து, 'மேனித்தா வாழ்கிற மாதிரி'

வெளிச்சம் போட்டுவிட்டு, அவர் கதையை முடித்துக் கொண்டு போய்விட்டார்.

அப்போது சொக்கையாவுக்குப் பத்து அல்லது பதிஞெரு வயது இருக்கும். அவன் தாய் விசாலாட்சி அம்மாள், சொந்தக்காரர்கள் குற்றம் குறை சொல்லக்கூடாது என்பதற் காகவும், ஊர் மெச்சவேண்டும் என்றும், 'போய்ச் சேர்ந்தவுக நல்லகதி பெறவேண்டுமே' என்ற எண்ணத்தோடும் ஏக அமர்க்களமாக எழவு கொண்டாடிஞள். கடன் வாங்கித் தான். பின்னே பணம் ஏது?

'செய்யும் கட்டைச் செய்தே தீரணும்' என்று பிடிவாத மாக, பதிஞரும் நாள் விசேஷத்தின்போது ஐயர்கள் பலருக்கு அள்ளி வழங்கிஞள். மாதம்தோறும் 'திதிகொடுக்கிறேன்' என்றும், ஒரு வருஷம் நிறைவுற்றதும் 'முதல் திவசம்' என்றும் தாராளமாகவே செலவு செய்தாள்.

அப்புறம், ஏறிவிட்ட கடன்களைத் தீர்ப்பதற்காக இருந்த ஒரு வயலை விற்ருள் அந்த அம்மாள். 'மண்ணை ஆளக் கண்டது யாரு என்கிறுப்போலே, சொத்து இன்னைக்கு ஒருத்தன் கையிலே! சீதேவி ஒரே இடத்திலே நிலேச்சு நிற்க மாட்டா. இப்ப வயலு போயிட்டா என்ன? சொக்கையா படிச்சு, சம்பாத்தியம்பண்ண ஆரம்பிச்சிட்டான்னு சொன்ஞ, இந்த வீட்டுச் சோத்தை நாயும் தின்னு, பேயும் விளையாடும்' என்று பெருமையாகப் பேசுவாள். அந்த ஊர்க் காரர்களுக்கே இப்படி எல்லாம் பேசும் வாக்கு சாதுர்யம் இயல்பாக அமைந்திருந்தது.

இதெல்லாம் சொக்கலிங்கத்துக்கு வெறுப்பு அளித்த விஷயங்கள். வாழ்க்கை கட்டாயத் தேவை ஆக்கிவிட்ட சிக்கனத்தில் ஊறி வளர்ந்தவன் அவன். 'கொடிது கொடிது வறுமை கொடிது; அதனினும் கொடிது இளமையில் வறுமை' எனும் ஞான உரையை ஒவ்வொரு நாளும் அனுபவபூர்வமாக உணர்ந்து பெரியவன் ஆனவன். அதனுல் மத்தியதர வர்க்கத்துக் குடும்பங்களில் காணப்படுகிற போலித்தனங் களையும் பொய்ப் பெருமைகளையும் ஒதுக்கிவிடக் கற்றுக் கொண்டவன்.

அக்கறையாகப் படித்தான். எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்தான். வேலைக்காக அலைந்து திரிந்தான். காத்திருந்தான்.

'அந்த வீட்டுச் சோற்றை நாயும் தின்னு, பேயும் விளையாட'க்கூடிய வளமான நாட்களைக் கண்டு அனுபவிக்கக் காத்திராமலே விசாலாட்சி அம்மாள் ஒருநாள் மண்டையைப் போட்டாள்.

சொக்கையா அரைவயிறும் கால்வயிறுமாக நாளோட்ட நேர்ந்த காலங்களில் பல விஷயங்களைப்பற்றியும் சிந்தித்துச் சில முடிவுகளுக்கு வந்திருந்தான்.

அதில் ஒன்று இந்த மத்தியதர வர்க்கத்துப் பேர்வழிகள் ஜம்பத்துக்கென்றும், சம்பிரதாயம் என்றும், 'முன்னோர்கள் செய்த வழக்கம், அதனால் நாமும் செய்தாக வேண்டும்' என்றும் இன்னும் பல காரணங்களைச் சொல்லியும் வாழ்க்கையில் வீண் தெண்டச் செலவுகளைப் பெருக்கி வருகிறார்கள்.

கையில் பணம் இல்லாவிட்டாலும் கடன் வாங்கியாவது 'செய்யும் கட்டுகளைச் செய்தே ஆகணும்' என்று பிடிவாதமாகச் செய்து, தங்களையும் தங்கள் குடும்பங்களையும் சிறுகச் சிறுகச் சீரழித்துக்கொண்டு, திணறித் திண்டாடுகிறார்கள். பெண் 'பெரிய மனுஷி' ஆகிவிட்டாள் என்று பெருமையாகப் பெரிய அளவில் விசேஷம் நடத்துவது முதல், கல்யாணம் காடேற்று கருமாதி என்று ஊரைக்கூட்டி வாய்க்கு ருசியாகச் சோறு ஆக்கிப் போடுவதிலும் பிற வழிகளிலும் அநாவசியமாகப் பணத்தைக் காலியாக்குவதில் உற்சாகம் காட்டுகிறார்கள்.

அப்புறம் கையிலே பணம் இல்லையே, கடன் வளர்ந்து விட்டதே என்று கவலை வளர்க்கிறார்கள். வாழமுடியாத நிலையில் திணறிக்கொண்டிருப்பவர்கள், தாங்களும் வாழத் தெரியாமல் தங்களை நம்பியிருப்பவர்களையும் வாழ விடாமல்—வாழ வகை செய்யாமல்—நாசமாய்ப் போகிறார்கள்...

இவ்வாறுன தனது எண்ணங்களை சொக்கலிங்கம் நண்பர்களிடமும் மற்றவர்களிடமும் சொல்லத் தொடங்கினுன். ஆகவே எல்லோரும் அவனை 'உருப்படாத பயல்!' 'திமிர் பிடித்தவன்', 'அகம்பாவி' என்றெல்லாம் பழிக்கலானுர்கள்.

அவன் தாய் செத்ததும், சொக்கையா கண்டிப்பாக நடந்துகொண்டான். 'பல விசேஷங்களில் சம்பிரதாயமாகச் செய்யப்படுகிற சடங்குகளில் பெரும்பாலானவை அர்த்தமற்றவை; அநாவசியமானவை. முக்கியமாகச் சாவு வீட்டிலே, செத்த அன்றும், பிறகு மறுநாளும் செய்யப்படுகிற காரியங்களில் அநேகம் துட்டுப் பிடுங்கவும், பொருள்களை வீணடிக்கவும் ஏற்பட்ட கிரியைகள் என்றே தோணுது. அதனுலே அவை தேவையில்லை. அவசியமானவற்றை செய்தால் போதும்' என்று கூறி, பிடிவாதம் காட்டினுன்.

பிணத்தை சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்வதற்கு ஊராரில் சிலபேர் வந்தார்கள். மறுநாள் அவர்களும் வரவில்லை. முக்கியமானவர்கள் ஆறேழு பேர் மட்டுமே தலையைக் காட்டினர். அவர்களை வைத்தே காரியத்தை முடித்தான்.

'செத்த பிணம் சுடுகாடு போய்ச் சேரவேண்டும். அதுக்கு முதல் நாள் நிகழ்ச்சிகள் தேவை. அப்புறம், எரிக்கும் இடம் பிறருக்கு உதவும் வகையில் அந்த இடத்தை சீராக்க வேண்டும். அதற்காக சாம்பல் கரைத்தல் விசேஷம் தேவை தான். அதை ஒட்டி பாலை ஊற்று, எண்ணெயைக் கொட்டு; தயிரை ஊற்று, இளநீரால் குளிப்பாட்டு, தேனைக் கொட்டு, என்றெல்லாம் வீணுன வேலைகள் செய்கிருர்கள். அது அநாவசியம், காகக்குப் பிடித்த கேடு' என்று சொக்கையா லெக்சர் அடித்தான்.

தவிர்க்க முடியாமல் வந்திருந்த சிலரும் 'எல்லாரும் சொல்வது சரிதான். இவன் எங்கே உருப்படப் போருன்!' என்று கூறிவிட்டுப் போனுர்கள்.

'பதினுரும் நாள்' விசேஷம் என்று சொல்லி, நிலைமைக்கும் காலத்துக்கும் ஏற்றபடி பன்னிரெண்டாம் நாளிலும், பத்தாவது அல்லது ஏழாவது அல்லது ஆருவது நாளில்—

அவரவர் சௌகரியப்படி—செய்துமுடிப்பதில் ஆர்வம் காட்டப்படுகிற 'கருமாதி விசேஷ'த்தை, 'அது வேண்டிய தில்லை, தேவை இல்லாத தெண்ட வேலை. பணத்தாசை பிடித்தவர்களின் ஏற்பாடு அது. பணம் மிகுந்தவர்கள் தங்கள் மன அரிப்பை சாந்தி செய்வதற்காக நடத்துவது. அதை நடத்தாமல் விட்டுவிடுவதனால் ஒன்றும் கெட்டு விடாது' என்று சொல்லி நிறுத்திவிட்டான்.

அவனைப்பற்றி உறவினரும் ஊர்க்காரர்களும் தங்கள் மனம் போனபடி கதைப்பதில் இன்பம் கண்டார்கள்.

'யார் என்ன பேசினால் எனக்கென்ன! பிறரது சிரிப்பான வார்த்தைகளோ, சீற்றமான பேச்சுகளோ, பழிப்புகளோ, பாராட்டுகளோ எனக்குச் சோறு கொண்டுவந்து விடப் போவதில்லை, என் தேவைகளை நிறைவேற்றும் சக்தி அவை களுக்கு கிடையா. நானே உழைத்துப் பாடுபட்டால்தான் எனக்குக் காசுகள் கிடைக்கும், சாப்பாடு கிடைக்க வழியும் பிறக்கும்' என்று அவன் சொல்வது வழக்கம்.

மாதச் சம்பளம் கிடைக்கும் வேலை என்ன எளிதில் கிடைத்துவிடுகிறதா?போதிய சிபாரிசுகள் பார்க்க வேண்டிய வர்களைப் பார்த்துக் கொடுக்க வேண்டியவற்றை கொடுத்தல் கள் முதலிய எத்தனையோ வேலைப்பாடுகள் நடந்தாக வேண்டுமே! அப்பாவி சொக்கலிங்கம் அதுக்கெல்லாம் எங்கே போவான்?

'ஆனாலும் அவன் சோர்வடையவில்லை. எந்த வேலை யானால் என்ன? மனசுக்குப் பிடிக்கிற நல்ல வேலை வருகிற போது வரட்டும். அல்லது வராமலே போகட்டும். அதுக்காக காய்ஞ்சுக்கிட்டுக் கிடக்க முடியுமா?' என்று எண்ணினான். டவுனில் ஒரு ஓட்டலில் செர்வராகச் சேர்ந்து உழைக்க முற்பட்டான்.

உண்மை அறிந்த ஊர்க்காரர்கள் அவனை ஏசினார்கள். ஊரின் அம்மாக்கமாருகளும் அக்காக்காரிகளும் 'நம்ம குலப் பெருமை என்ன! குடும்ப கவுரவம் என்ன! அவன் தாத்தா வுக்கு இருந்த மதிப்பு என்ன! இந்தச் சின்னச் சவம் எல்லார்

மானத்தையும் வாங்கும்படியாக் காரியம் பண்ணித் திரியுதே' என்று முன்னுரை கூறித் தனிப் புராணம் படித்தார்கள்.

அதைக் கேள்விப்பட்ட சொக்கையா சிரித்தான். 'நாங்க ராசாக்கள் பரம்பரை. எங்க முப்பாட்டனார், அவருக்கு மூற் பட்ட பாட்டனார் எல்லாம் குதிரையிலே தான் சவாரி போவது வழக்கம்னு சொல்லிக்கிட்டு, இன்னைய அன்னக்காவடிப் பய தன் பின்புறத்தை சுகமாத் தடவிக்கிட்டு நின்னான்னு சொன்னா, அது பெருமைக்குரிய செயலாக ஆகுமா ஐயா! பின்னே போட்டு பேசுதீரே, வாஸ்தவம், அவுகள்ளாம் திசை கட்டி ஆண்டதாக இருக்கட்டுமே. இன்னிக்கு ஐயாவாள் பாடு பட்டு உழைக்கலேன்னா, பட்டினிதானேவே கிடக்கணும்?' என்றான் குறைகூறிய ஊர்க்காரர் ஒருவரிடம்.

'புத்தியாய்ப் பிழைக்கத் தெரியாத கழுதை. உருப் படாத பயல்!' என்று முணுமுணுத்தபடி போனார் அவர்.

காலம் ஓடிக்கொண்டிருந்தது.

சொக்கலிங்கம் தனக்குரிய தேவைகளை தானே பூர்த்தி செய்துகொள்வது என்ற தீர்மானத்துடன் வாழ்க்கைப் பாதையிலே அடி எடுத்து வைத்தவன். அவனை குறை கூறவும், அவன் செயல்களை விமர்சிக்கவும் ஆட்கள் இருந்தார்களே தவிர, அன்போடு அவன் பிரச்சினைகளை ஆராய்ந்து, அவனுக்கு உதவிபுரிவதற்கு எவருமிலர்.

'இதில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை. எங்க தாத்தா அல்லது அப்பா சொத்து தேடி வைத்துவிட்டுப் போயிருந்தால்—நான் பெரிய வீட்டுப் பிள்ளை ஆக இருந்தால்—என்னை கவனிக்க ஆட்கள் வருவாங்க. அதிர்ஷ்ட சீட்டிலோ அல்லது ஏமாற்று வியாபாரத்திலோ, எனக்கு ஆயிரம் ஆயிரமாப் பணம் கிடைக்க வழி ஏற்பட்டிருந்தாலும், ஐயா—ராசான்னு சொல்லிக்கிட்டு பல பேரு வருவாங்க. அத்தைகளும், அக்காள்களும் கல்யாணம் பண்ண வேண்டாமா? அங்கே பொண்ணு இருக்கு; இங்கே பொன்னுயிருக்குன்னு நச்சரிப் பாங்க. வெறும் நபரான என்னை ஏன் அவங்க அணுகப் போறாங்க?' என்று அவன் எண்ணினான்.

இதுக்காகவும் சொக்கையா வருத்தப்படவில்லை.

அவன் பணிபுரிந்துகொண்டிருந்த ஓட்டலில் தண்ணீர் எடுத்து வருவது, பாத்திரங்களைத் துலக்குவது, பெருக்குவது போன்ற அலுவல்களைக் கவனிக்க ஒரு அம்மாள் இருந்தாள். பார்க்க லட்சணமாகத்தானிருந்தாள். அவள் அவனை கவனித்து வந்தாள். அவன் தோற்றமும் பேச்சும் இயல்பு களும் அவளுக்குப் பிடித்திருந்தன. பரிவுடன் பேசிப் பேசி அவன் வரலாற்றை அவள் தெரிந்துகொண்டாள். மெதுவாக 'கல்யாணம் செய்யவேண்டாமா தம்பி? எத்தனை நாளைக்கு இப்படியே இருப்பே?' என்று பேச்சு கொடுத்து அவன் மனசை அறிந்துகொண்டாள்.

ஒருநாள் அவனை தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றாள். ஏழைக் குடில்தான். அங்கே ஆட்டுரலில் தோசைக்கு மாவு ஆட்டிக்கொண்டிருந்த சிறு பெண் அவன் பார்வையில் பட்டாள், 'என் மகள்தான். தங்கம்னு பேரு' என்றாள் தாய்.

இருவரும் பார்த்துக்கொண்டார்கள். சொக்கையா, தங்கம், தாய் மூவருக்கும் பரஸ்பரம் பிடித்துப் போயிற்று.

அதிக தடபுடல் இல்லாமல், சொக்கலிங்கம் தங்கத்தை கல்யாணம் செய்துகொண்டான். இவ்விஷயத்தை அவன் மூடி மறைக்கவும் இல்லை.

அவனுடைய ஊர்க்காரர்கள் மீண்டும் சலசலத்தார்கள். அம்மையார்கள் பொரிந்து கொட்டினார்கள். 'அவ என்ன சாதியோ என்ன எழவோ! இவனுக்கு மூளைபோன போக்கைப் பாரேன்...' வகையரா.

'சாதியாவது சமயமாவது!' என்று சிரித்தான் சொக்க லிங்கம். 'தங்கம் நல்ல பெண். அதுதான் முக்கியம்.'

'வெறுவாக்கெட்ட பய! இவன் மூஞ்சியிலே முழிச்சாலும் ஆகாது. நம்ம குலப் பெருமை என்ன! நம்ம குடும்பம் இருந்த இருப்பு என்ன? இந்தக் கரிமுடிவான் சாதிகெட்டவ எவளோ பெத்ததைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு நிக்கானே!' என்று கொதித்தாள் ஒரு அக்காள்.

'ஆகா, ரொம்பக் கரிசனம்தான்! நான் நல்லாயிருக்கணும்னு நீங்க யாராவது நினைச்சது உண்டா? எனக்குப் பெண் பார்த்துக் கல்யாணம் நடத்தணும்னு எந்த அக்கா அல்லது அத்தை அல்லது பெரியம்மா சின்னம்மா முன் வந்தா? மீனுச்சி அத்தைதான்—அவதான் தங்கத்தோடே அம்மா—பரிவோடு விசாரித்து, செய்யவேண்டியதை தன்னுல் ஆனதைச் செய்தா. எப்பவும் எனக்கு நல்லது விரும்புகிறவ அவதான். அவளிடம் இருக்கிற மனிதாபிமானம் உங்ககிட்டே இல்லையே!' என்று கூறிச் சிரித்தான் அவன்.

'தூ!' என்று காறித் துப்பினுள் அக்காக்காரி.

அது அவனை எதுவும் செய்துவிடவில்லை. அந்த ஊரில் அவனுக்கென்று இருந்த ஒரே உடைமையான சிறு வீட்டை அவன் விற்பனை செய்தான், அங்கிருந்தே போய்விட்டான்.

'அவன் உருப்படுவான்கிறியா? இந்தப் பணத்தை நாசமாக்கிப் போட்டு நடுத்தெருவிலே நிற்கப் போறுன் பாரு!' என்று பேசிக்கொண்டார்கள் அவ்வூர் பெண்மணிகள்.

அவர்களது 'பத்தினி வாக்கு' பலிக்கவில்லை.

சொக்கலிங்கம் வீடு விற்ற பணத்தை முதலாக வைத்து 'சைவாள் சாப்பாட்டுக் கடை' ஒன்று ஆரம்பித்தான். 'காப்பி, டீ, பலகாரமும்' உண்டு. அவனது மீனுச்சி அத்தை சொன்ன யோசனைதான் அது. ஓட்டல் தொழிலில் நல்ல அனுபவமும் தேர்ச்சியும் பெற்றவள் அவள்.

அவர்களுடைய உழைப்பு வீண் போகவில்லை. சொக்கையாவின் வாழ்க்கையில் குறை எதுவும் தலைகாட்டிவிடவில்லை.

சாந்தி, செப்டெம்பர் 1973

# அணைந்த பெருமாளின் மனமகிழ்ச்சி

அப்பாவித் தோற்றமுடைய அணஞ்ச பெருமாள் உண்மையில் ஒரு ரசமான பேர்வழி என்பது அவனோடு பேசிப் பழகினால்தான் தெரியும்.

அணஞ்ச பெருமாள் சிறுவர்களாலும் வேறு சிலராலும் 'டிம் அடிச்ச பெருமாள்' 'ஒளிபோன பெருமாள்', என்றெல்லாம் அவனது பெயர் காரணமாக பரிகசிக்கப்படுவது வழக்கம்.

அவன் பிறந்து வளர்ந்த ஊரில் கோயில் கொண்டுள்ள இறைவனின் திருநாமம் சிவன் அணைந்த பெருமாள் என்பதாம். அதனால் அவ்வூரில் அவ்வப்போது சிலருக்கு அந்தப் பெயர் சூட்டப்படுவது உண்டு. அது நீளமாக இருக்கிறது என்று அணைந்த பெருமாள் எனச் சுருக்கப்படுவதும், பேச்சு வழக்கில் அணஞ்ச பெருமாள் என்று சிதைந்து போவதும் தவிர்க்க முடியாத நியதிகளாக அமைந்துவிட்டன.

வளர்ச்சி குன்றிய உருவம், குள்ளம், ஒல்லி, கறுப்பு நிறம். முகத்தோற்றமும் வசீகரமானதாக இல்லை. சிறப்பாக எடுத்துக்காட்டக்கூடிய செயலாற்றல் எதையும் அவன் பெற்றிருக்கவுமில்லை. அவனுக்கு வயது முப்பது இருக்கலாம். கல்யாணமாகியிருந்தது. தனிக்குடித்தனம்தான். வருமானம் என்று ஏதோ கொஞ்சம் வருவதற்கு வழி இருந்தது. தாராளமாகச் செலவு செய்து, இஷ்டப்பட்டவைகளை வாங்கி, விரும்பியவற்றை நினைத்தபோது செய்து சாப்பிட்டு, உல்லாசமாக உடுத்து, எடுப்பாக ஊரிலே அலைந்து திரிவதற்கு அந்த வருமானம் உதவும் அளவில் இல்லை.

என்றாலும், அணஞ்ச பெருமாள் 'அங்கிங் கெனாதபடி எங்கும்' காணப்பட்டான். பொழுது போகவேண்டுமே!

அவனைப் போன்றவர்கள் கூடி சும்மாயிருந்து சுவையாக வம்பளந்து சோம்பலாகக் காலக் கொலை செய்கிற இடங்களில் எல்லாம் அவனும் ஆஜராகி விடுவான். அவர்களோடு சேர்ந்து ஊர்க்கதைகள் பேசிக் களிப்பான். வேண்டியவர்கள், தெரிந்தவர்கள் வீடுகளுக்குப் போவான். அதையும் இதையும் பேசிப் பொழுது போக்குவான்.

இப்படியாக அவனுக்குச் சுவையான விஷயங்கள் சேர்ந்து விடும்.

அது பட்டிக்காடும் இல்லாத, பட்டணக்கரையும் இல்லாத, ஒரு சுமாரான ஊர். எதுவும் செய்யாமல், முன்னோர்கள் தேடிவைத்த சொத்தை வைத்துக்கொண்டு, சோம்பேறித்தனமாக 'சுகஜீவனம்' என்ற பெயரில் நாளோட்டி வாழ்ந்த மத்தியதர வர்க்கத்தினர் கணிசமாக இருந்தார்கள். உண்பதும், உறங்குவதும், ஊர்வம்பு பேசிக் களிப்பதும்தான் அவர்களுடைய வாழ்க்கை நியதியாக இருந்தது.

எதிரே இருக்கிறபோது ஒருவனை புகழ்ந்தும் வியந்தும் பேசுவார்கள். அந்த இடத்தைவிட்டு நகர்ந்துவிட்டால், இனிக்கப் பேசிய அவனையே பேச்சால் குதறி எடுத்துப் பிய்த்து விளாசுவதில் தனி இன்பம் காண்பது அவ்வூராரின் இயல்பு. பொதுவாக எவனைப்பற்றியும் எவருக்கும் நல்ல அபிப்பிராயம் கிடையாது. ஆனா நேரில் காண்கிறபோது நல்லவன் ஆக மதிக்கப்படுகிறவன், பின்னால் வெறும்பயல், அல்பன், சின்னப்பயல், உருப்படாத பயல் என்ற நிலைக்கு இறங்கிவிடுவான்.

சிவன் அணைந்த பெருமாளும் இதற்கு விதிவிலக்கு அல்ல. 'ஒரு கூடைச் செங்கலும் பிடாரி' என்பதுபோல, 'ஒருங்கு கூடிய ஓரினப் பறவைகள்' போல, அவ்வூர் வாசிகள் எல்லோரும் ஓர் நிறை, ஒரு நோக்கு, ஒரே போக்கு உடையவர்களாகத்தான் வளர்ந்து வாழ்ந்தார்கள். அணைந்த பெருமாள் மட்டும் தனிவழி போக முடியுமா என்ன?

ஆனாலும் அவனிடமும் ஒரு தனி நோக்கு உண்டு. அவன் திருவாயைத் திறந்துவிட்டாலே அது தானாகப் புரிந்து விடும்.

அணைந்த பெருமாள் ஏதோ முக்கிய அலுவல்மீது போகிறவன்போல வேகமாய் நடந்துகொண்டிருந்தான். ஒரு வீட்டின் வாசலில் சும்மா நின்ற நாறும்பூநாத பிள்ளை 'என்னய்யா, ரொம்ப அவசரமோ?' என்று கேட்டு அவனுக்கு திடீர் பிரேக் போட்டார்.

நாறும்பூநாதர் என்பதும் ஒரு 'சாமி பெயர்' தான். அந்தப் பக்கத்து ஊர்களில் தமிழ் மணம் கமழும் அருமையான பெயர்களை சாமிகளுக்குச் சூட்டி, அவற்றையே தங்கள் குழந்தைகளுக்கும் இட்டு மகிழ்கிற வழக்கம் நிலைபெற்றிருந்தது. அதனால் தனி ரகமான பெயர்களை உடைய நபர்கள் அந்த வட்டாரத்தில் காணப்பட்டனர்.

'அவசரம் என்ன அவசரம்! வெயிலுகந்த நாத பிள்ளையை பார்க்கப் போயிருந்தேன். அவாள் வீட்டில் இல்லை. . . . . .' என்று சொன்னான், நின்றான்.

'அவர் மகளுக்குக் கல்யாணம்னு பேச்சு வந்துதே என்ன ஆச்சு? ஒரு ஏற்பாடும் நடக்கிறதாத் தெரியலியே!' என்றார் நாறும்பூ.

'பண விஷயத்திலே தகராறு இருக்கும்போல் தோணுது. இவரு ஐயாயிரம் ரூபாய் நகையும், ரெண்டாயிரம் ரொக்கமும் கொடுக்கத் தயார்தான். மாப்பிள்ளை வீட்டுக்காரங்க மூவாயிரம் ரொக்கம் கேட்டாங்க, கல்யாணமும் பண்ணிவிடணும்னு சொன்னாங்க. ஆகவே அந்த இடம் முடிவாகலே.'

'ஏதோ கட்டையோ, நெட்டையோ பார்த்துச் செய்து விட வேண்டியதுதான். பெண்ணுக்கும் வயசு ஏறிக்கிட்டுப் போகுதில்லே' என்று அக்கறையோடும், பரிவோடும் பேசுகிறவர்போல் 'நாவன்னா' சொல்லி வைத்தார்.

அணஞ்ச பெருமாள் அவர் அருகில் நெருங்கி நின்று, அப்படியும் இப்படியும் தலையைத் திருப்பிப் பார்த்துவிட்டு

மெதுவாகச் சொன்னான். 'வயசு ஆனா என்ன அண்ணாச்சி? கல்யாணம்னு ஒண்ணு ஆனால்தானா எல்லாம்! அந்தப் பொண்ணு அனுபவிக்க வேண்டியதை எல்லாம் அனுபவிச்சுக் கிட்டுத்தான் இருக்கு!'

'அது என்னய்யா விஷயம்?' என்று சுவாரஸ்யமாக விசாரித்தார் மற்றவர்.

'உங்களுக்குத் தெரியாதா? பக்கத்து வீட்டிலே ஒரு பையன் இருக்கான். ரொம்ப ஸ்டைல் மாஸ்டர். எங்கேயோ ஒரு ஆபிசிலே கிளார்க் வேலை பார்க்கிறான். நீங்க கூடப் பார்த்திருக்கலாம் அவனை. சைக்கிளில் போயிட்டுப் போயிட்டு வருவான். அவனுக்கும் இந்தப் பெண்ணுக்கும் காதல்ஸ். நடக்க வேண்டியதெல்லாம் ஒழுங்கா நடந்துக்கிட்டு இருக்குது.'

'அப்படியா! அப்படியா?' என்று அதிசயித்தார்; சந்தேகம் தொனிக்கவும் கேட்டார் அண்ணாச்சி.

'நான் சும்மாவா சொல்றேன்? பல பேருக்கும் தெரிஞ்ச ரகசியமாச்சே. அந்தப் பெண்ணும் இன்னொண்ணும் சினிமாவுக்குப் போகும். தியேட்டர்லே வந்து ரெடியா நிற்பான் ஸ்டைல் மாஸ்டர். இன்னொரு புள்ளைக்கும் ஜோடி சேர ஒரு பையன் உண்டு. ஜாலியா சினிமா பார்ப்பாங்க. ஒரு நாள் இதை நேரிலே பார்த்த ஒருத்தர் தான் என் கிட்டச் சொன்னாரு!' என்று அணஞ்ச பெருமாள் அடித்துச் சொன்னான்.

'அட அப்படியா! இது மாதிரியும் நடக்குதா!'

'இதிலே என்ன அதிசயம் இருக்கு அண்ணாச்சி? இதெல்லாம் இப்போ சகஜம். சின்ன ஊர்களிலும், பெரிய ஊர்களிலும், டவுன் ஸைடிலேயும் நடக்கிறதைப் பார்த்தால் நாமெல்லாம் அசந்து போக வேண்டியதுதான். ரோடிலே நடந்துபோக நியாயமில்லே. பொம்பளைகளும், சின்னப் பொண்ணுகளும் எதிரே வந்தால், விலகி வழி விடுகிறதே கிடையாது. இடிச்சுக்கிட்டுத்தான் போறது, வர்றது. சினிமா பார்த்துவிட்டு வரும்போதும் ஆண்களோடு

இடிச்சு மோதிக்கிட்டுத்தான் வாறாங்க. அதுக்காகத்தான் அவங்க சினிமாவுக்கே போறாங்க. சினிமா முடிஞ்ச பிறகு ஓட்டல், லாட்ஜ்னு தேடிப்போக வேண்டியதுதான். உங்களுக்குத் தெரியுமா, இப்போதெல்லாம் லாட்ஜ்கள் எப்பவும் ஃபுல்தான். இதுமாதிரி ஜோடிகள்தான் வந்து மொய்க்குதே. சாதாரணமானவங்களுக்கு ரூம் கிடைக்கிறதே சிரமமாக இருக்கு.' அணைந்த பெருமாள் இந்த விஷயத்தில் ஒரு 'அத்தாரிட்டி' மாதிரி உறுதியாகப் பேசினான்.

'அது சரி. வெயிலுப்பிள்ளைவாள் மகள் வந்து ...' என்று இழுத்தார் நாவன்னா.

'அம்மையைப்போல் தானே இருக்கும்! அவள் கீர்த்திப் பிரதாபம் ஊரறிஞ்ச விஷயம் இல்லையா?' என்று கூறிச் சிரித்தான் அணைந்த பெருமாள்.

இந்த ரீதியில் மேலும் சிறிது நேரம் பேசிவிட்டு அங்கிருந்து கிளம்பினான் அவன். தெரு முனையில் குழைக்காதர் அவனைக் கண்டு கும்பிடுபோட்டான்.

மகரநெடும் குழைக்காதர் என்பது ஒரு பகவானின் திருநாமம். இந்த நெடும் பெயருடையார் சிலர் உண்டு. வெறும் 'குழைக்காதர்' என்று பெயரை குறுக்கிக்கொள்வோரும் உண்டு.

'என்னவே, நாவன்னா ரொம்ப நேரமாப் பேசிக்கிட்டிருந்தாரே, என்ன சமாச்சாரம்?' என்று அவன் விசாரித்தான்.

'சவத்துப் பயலுக்கு வேலை என்ன! வண்டி மறிச்சான் மாதிரி தெருவிலே நின்னுக்கிட்டு, போறவன் வாறவனை எல்லாம் வழிமறிச்சு, அது என்ன—இது ஏன்—அவன் எப்படி—இவள் இப்படின்னு தொண தொணத்திடுவான் ஐயா. ஊரிலே எங்கே கல்யாணம் வருது, யார் வீட்டிலே புள்ளை பொறந்ததுன்னு விசாரிச்சுத் தெரியலேன்னு சொன்னா, அவனுக்குத் தலை வெடிச்சிடும். பெண்டாட்டிக்குப் பயந்த பயல்!' என்று அணைந்த பெருமாள் அடித்து விளாசினான்.

'அவளை நேற்று டவுணிலே பார்த்தேனே' என்றான் குழைக்காதர்.

'நேற்று மட்டும் தானா? தினம் டவுணில் அவளைப் பார்க்கலாம். குலுக்கி மினுக்கிக்கிட்டு அலைவா. தினம் சினிமா தான். ஓட்டல் தான். ஸ்டூடண்ட்ஸ் சிலபேரு தொடர்பு அவளுக்கு. புருசன் எருமை மாடு மாதிரியிருக்கான். அவளோ நாகரிகம். ஏதோ கொஞ்சம் படிச்சிருக்கா. பின்னே கேட்பானேன்! ஜாலியா கிளம்பிடுறா. இவனை அவள் மதிக்கிறதே கிடையாது. முதல்லே கொஞ்சம் அதட்டி மிரட்டிப் பார்த்தான். போடா பிஸ்கின்னு எடுத்தெறிஞ்சு பேசிட்டாள். இப்படி இருக்கு வீட்டு நிலைமை!'

குழைக்காதர் தலையை ஆட்டினான். 'அநேக இடங்களில் இப்படித்தானிருக்கு' என்றான்.

'ஆமா ஆமா. பொம்பளைக ரொம்பவும் துணிஞ்சிட்டாளுக. சினிமா வேறே அவங்களுக்கு ஏத்தபடி தான் வருது. அதுகளை பார்த்துப் பார்த்து, நாமும் இதுமாதிரி எல்லாம் நடப்போமேன்னு கிளம்பிடுறாளுக' என்று அணைந்த பெருமாள் அளந்தான்.

இருவரும் நின்று பேசிக்கொண்டிருந்த தெரு வழியாக இளம் பெண் ஒருத்தி போனாள். நன்றாக பவுடர் பூசி, கண்ணுக்கு மையிட்டு, சிரத்தையோடு சிங்காரித்துக் கொண்டிருந்த அவள் ஒரு கையில் ரிஸ்ட் வாட்ச்சும், இன்னொரு கையில் வளையல்களும் அணிந்திருந்தாள். அவ் வழியாகத்தான் பஸ்ஸுக்குப் போகவேண்டும்.

'பஸ்ஸுக்குப் போறா போலிருக்கு. ரொம்ப ஸ்டைலா ட்ரெஸ் செய்துகொண்டு வேறே எங்கே போகப் போறா!' என்றான் காதர்.

'ஊம்ங்' என்று இழுத்தான் பெருமாள். 'இவளுக்கு கல்யாணமாகி இரண்டு மாசம்தான் ஆகுது. புருஷன் உடனேயே மெட்றாஸ் போயிட்டான். அவனுக்கு அங்கே வேலை. வீடு பார்த்து, அழைச்சிட்டுப் போறேன்னு சொல்லி யிருக்கான். இங்கே இவள் அவன் தம்பியோடு சிரிச்சுப் பேசி

விளையாடி, புருசன் இல்லாத குறையை போக்கடிச்சுக் கிட்டா.'

'வேண்டியது தானே!' என 'வழிமொழிந்தான்' நண்பன்.

இவ்வாறு பேசி, இவ்வேளைக்கு இவ்வளவு போதும் என்று இருவருக்கும் திருப்தி ஏற்பட்டதும், அவர்கள் பிரிந்து போனார்கள்.

அணைந்த பெருமாளுக்கு மகிழ்வண்ண நாதன் என்றொரு நண்பன். அவன் வீட்டில் போய் இவன் பேசியும் தூங்கியும் பொழுது போக்குவது வழக்கம். உமையொருபாகன், திருப்பாற்கடல்நம்பி, பன்னிருகைப் பெருமாள் என்று இன்னும் சிலரும் வந்து சேர்வார்கள்.

அந்த வீடு ஒரு மடம் மாதிரி. மகிழ்வண்ணனுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை. வீட்டில் பெரியவர்கள் யாரும் கிடையாது. எனவே அவர்கள் சோம்பேறித்தன மாகப் பொழுதுபோக்குவதற்கு ரொம்ப வசதியான இடம் அது.

அவர்கள் எப்போதும் பொம்பிளைகளைப் பற்றித்தான் பேசி மகிழ்ந்தார்கள். அணைந்த பெருமாள் தான் அதிகம் பேசுவது வழக்கம். அந்த ஊரின் ஒவ்வொரு வீட்டிலும் இருந்த பெண்களைப்பற்றி—தாலியறுத்தவள், வாழ்வரசி, கல்யாணம் ஆகாதிருந்தவள், வாழாவெட்டியாக இருப்பவள் பற்றி எல்லாம் விவரங்களோடு பேசுவான். அந்த ஊரில் எவளுமே ஒழுங்கானவள் இல்லை என்ற முடிவுக்கே வர நேரிடும் அவன் பேச்சைக் கேட்கிறவர்களுக்கு.

அதைக் குறிப்பிட்டுக் கேட்டால், 'இந்த ஊரில் மட்டுமா! எல்லா இடங்களிலுமே பொம்பிளைகள் அப்படித் தான் இருக்கிறுங்க. தெருவிலே நடந்துபோகிற ஆண் பிள்ளைகளை இடிச்சுக்கிட்டு அலைகிறவங்க முழிக்கிற முழியே இதைக் காட்டிக்கொடுக்குமே' என்ற ரீதியில் அவன் பேசுவான்.

அனைந்த பெருமாளோடு எப்பவாவது பேசிப் பழகும் திருமலைக்கொழுந்துவுக்கு, 'இவன் ஏன் இப்படி இருக்கிறான்? எல்லாரையும் மட்டம்தட்டிப் பேசுவதிலும், ஒருத்திகூட ஒழுங்கானவள் இல்லை என்று அடித்து விளாசுவதிலும் இவனுக்கு ஏன் இவ்வளவு திருப்தி? யாரிடம் பேச்சு கொடுத்தாலும் இவன் இதே தன்மையில் தான் பேசுகிறான். இது ஏனோ?' என்ற சந்தேகம் எழுந்தது.

அவன் பிறவிக்குணம் அது என்று சுலபமாகச் சொல்லி விடலாம். ஆனால் அதைவிட அந்தரங்கமான—ஆழமான—கோளாறு எதுவும் அவன் உள்ளத்தைப் பற்றிக்கொண்டிருக்கக்கூடும் என்ற எண்ணமும் திருமலைக்கொழுந்துக்கு ஏற்பட்டது.

ஒருநாள் அவன் அனைந்த பெருமாள் வீட்டுக்குப் போக நேர்ந்தது. வீட்டினுள் நுழைவதற்கு முன்பே, பெரும் சத்தம் அவன் காதைத் தாக்கியதால் திருமலை வெளியிலேயே நின்றுவிட்டான்.

அனைஞ்ச பெருமாளின் மனைவி குழல்வாய்மொழி தான் காட்டுக் கூப்பாடு போட்டுக்கொண்டிருந்தாள். மரியாதை இல்லாமல் கத்தினாள். 'நீரு ஒரு ஆம்பளையா? சம்பாதிக்கத் துப்பு இல்லையே. அது என்ன செலவு இது என்ன செலவு என்று கணக்குக் கேட்கமட்டும் வாய் இருக்குதே!' இது திருமலையின் காதில் விழுந்தது. அவள் மேலும் மோசமாக, கண்டபடி, தாக்கிப் பேசினாள். அனைஞ்ச பெருமாள் கீச்மூச் சென்று குரல் கொடுக்கவே இல்லை.

'சரி சரி. இப்போ நிலைமை சரியில்லை' என்று நினைத்து, திருமலைக்கொழுந்து வந்த வழியே திரும்பிவிட்டான்.

அன்று மாலை அவன் பக்கத்து டவுனுக்குப் போயிருந்தான். அங்கே சினிமா தியேட்டர் பக்கம் பார்வையில் பட்ட ஜோடிகளில் ஒருத்தி அவன் கவனத்தைக் கவர்ந்தாள். 'இவள் வந்து அனைஞ்ச பெருமாள் பெண்டாட்டி அல்லவா!' என்று திடுக்கிட்டான். அவளே தான்.

குழல்வாய்மொழி 'குஷி மூடில்' காணப்பட்டாள். அவள் இடித்து உரசி நெருக்கமாகச் சேர்ந்து போக வசதியாக அருகே சென்றவன் அணைந்த பெருமாள் அல்ல, எவனோ ஒரு உல்லாசி.

சூழ்நிலை மறந்த சுந்தரி சுந்தரனாக உலாவிய அவர்களைக் கண்டு 'ஓகோ! இப்படியா சங்கதி!' என்று விசிலடித்துக் கொண்டது திருமலையின் மனக்குறளி.

பிறகு அவனது கண்கள் விழிப்புடன் ஆராய்வதில் ஈடுபட்டன. குழல்வாய்மொழி 'ஒரு மாதிரி'தான்; அவள் கட்டின புருஷனை மதிப்பதே இல்லை என்கிற உண்மை அவனுக்கு வெகு விரைவிலேயே புரிந்துவிட்டது.

'சரிதான், அணஞ்ச பெருமாளின் மனக்கோளாறுக்கு அடிப்படைக் காரணம் இதுதான். தான் திருடி அசல் நம்பாள் என்ற தத்துவத்தை இங்கே உபயோகிக்கலாம். சூடு கண்டு நாக்கு புண்ணாகிவிட்ட பூனை எப்பவும் எங்கும் எதையும் சந்தேகித்துக் கொண்டே திரியும் என்பதையும் பிரயோகிக்கலாம். அவன் மனைவி மோசமானவள்; அவனுக்கு அடங்கி நடக்காதவள். அதனால் அவன் ஊரில் உள்ள எல்லோருமே அப்படித்தான் என்று எண்ணுகிறான். அவ்வாறு உறுதியாக நம்புவதில் அவனுக்கு ஒரு திருப்தி உண்டாகிறது. தன் மனைவி ஒழுங்காக நடக்கவில்லை என்பதனால், அவனுக்கு அவள்மீது ஏற்பட்ட வெறுப்பு. இதர பெண்கள் மீதும் பெரும் மனக்கசப்பாக வளர்ந்து கொழுந்துவிட்டது. உள்ளூற அவன் தன் மனைவியை வெறுக்கிறான். எல்லாப் பெண்களையுமே வெறுக்கிறான். பெண் இனத்தையே கேவலமாக மதிப்பிட்டுப் பேசுவதில் அவனுக்கு ஒரு மகிழ்ச்சி ஏற்படுகிறது. பழி வாங்குகிற சந்தோஷம் அவனுக்கு. அதனால் தான் அவன் சதா இந்த ரீதியில் புலம்பித்திரிகிறான்' என்று திருமலைக் கொழுந்துவின் அறிவு முடிவுகட்டியது.

'பாவம், அணஞ்ச பெருமாள்!' என்று அவன் மனம் அனுதாபப்பட்டது.

# மன மாயம்

அவனுக்கு அந்த நோய் எப்படி வந்தது என்பது அவனுக்கே புரியவில்லை. அப்புறம் அல்லவா மற்றவர்களைப் பற்றிச் சொல்லவேண்டும்!

கைலாசத்துக்கு அப்படி ஒரு விசித்திர வியாதி எவ்வாறு வந்து சேர்ந்தது என்பது கடைசி வரை மற்றவர்களுக்கு விளங்கவில்லை.

அவன் நல்லவனாய், சாதுவாய், தான் உண்டு—தனது வேலை உண்டு என்று ஒதுங்கிப் பிழைப்பவனாய் வாழ்ந்து வந்தான். முறை தவறிய காரியங்கள் எதையும் செய்யத் துணியாதவன். தன்னை மறப்பதற்காகவோ, தன்னிலிருந்து தான் வேறாகி விடுதலைப் பெருவெளியிலே இன்பச் சிறகு விரித்து நீந்திச் சுகானுபவம் பெற வேண்டும் என்ற எண்ணத்துடனோ அவன் போதைப் பொருள்களின் துணையை நாடியது இல்லை: நாடக்கூடியவனும் இல்லை.

ஆனால், முதலில் அந்த நிலையில் அவனைப் பார்த்தவர்கள், 'ஏது, பையன் தண்ணி கிண்ணி போட்டிருப்பானோ?' என்றும், 'மயக்கம் தருவன கஞ்சா கோலி அபினி! இதுகளில் ஒன்றைக் கைலாசம் உள்ளே தள்ளியிருப்பானோ?' என்றும், இன்னும் தங்கள் மனம் போன போக்கிலும் பேச்சுகளை உதிர்த்தார்கள்.

அவ்வாறு பலரது மனசையும் அரிக்கும்படி சந்தேகக் கறையான்களைக் கிளறி விடக்கூடிய நிலையில் தான் இருந்தது அவன் நடவடிக்கை.

அப்போது அந்தி வேளை, ஒளியும் இருளும் கலந்து முயங்கிக்கிடந்தது. கைலாசத்தைப் பார்க்க இரண்டு நண்பர்கள் அவன் அறைக்கு வந்தார்கள்.

அவன் தரையில் எதையோ பரப்பி, இழுத்து, மேலும் இழுத்து இழுத்துப் பரப்பும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான்.

அவர்கள் தரையையும் அவனேயும் பார்த்துவிட்டு, உடனடியாக ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டார்கள்.

'கைலாசம், என்னவே செய்கிறே?' என்று ஒருவன் குரல் கொடுத்தான்.

அவர்கள் அறைக்குள் வந்ததும், அவனுக்குத் தெரியாததுபோலவே தோன்றியது.

'சனியன் இந்தச் சமுக்காளத்தைப் பாரேன்; திடீர்னு இது ஏன் கட்டையாப் போச்சு? இல்லே, திடீர்னு நான் எப்படி நெட்டையா வளர்ந்தேன்? நேற்று வரை எனக்குச் சரியாக அளவாகத் தானே இருந்தது? இப்போ இதிலே படுத்தா, என் தலையும் காலும் தரையிலே படுதே!' என்று முணுமுணுத்தான் கைலாசம்.

அவர்களுக்கு அதை நிரூபிக்க முயல்பவன்போல் படுத்தான். காலையும் தலையையும் தரையில் இடித்துக்கொண்டான்.

நண்பர்கள் திகைப்புடன் பரஸ்பரம் நோக்கினர். அங்கே தரைதான் இருந்தது. விரிப்பு எதுவும் இல்லை. கைலாசம் வெறும் தரையைத்தான் சமுக்காளம் எனக் கருதியும், அது தனது நீளத்துக்குப் பற்ருமல் திடீர் மாற்றம் பெற்றுவிட்டது என நம்பியும் செயல்புரிந்துகொண்டிருந்தான்.

'என்ன கைலாசம் இது? இங்கே துணியோ விரிப்போ இல்லேயே? நீ வந்து...' என்று இரண்டாவது நண்பன் பேசினன்.

கைலாசம் அவனே ஒரு மாதிரி உற்று நோக்கினன். அது இயல்பான பார்வை அல்ல. ஏதோ மயக்கவெறியில் இருப்பவனின் குறிப்பற்ற நோக்கு.

'இல்லேயா? சமுக்காளம் இல்லேயா? திடீர்னு எங்கே போயிட்டுது அது?...'

அவன் முழங்கால்களிலும் கைகளிலும் நாய் மாதிரி நின்றும் நகர்ந்தும், மோப்பம் பிடிப்பதுபோல் 'ஹும்ப்... ஹூம்ப்ப்' என்று மூச்சிழுத்தும் மூச்சை உதறியும், அங்கும் இங்கும் அலைந்தான். பிறகு ஒரு இடத்தில் மவுனமாக உட்கார்ந்துவிட்டான்.

நண்பர்கள் கூப்பிட்டதற்குப் பதில் எதுவும் சொல்லவே இல்லை.

அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. என்ன செய்வது என்றும் தெரியவில்லை. கதவை இழுத்துச் சாத்திவிட்டு, வந்ததுபோல் போய்விடலாமா என்றொரு நினைப்பு, ஐயோ பாவம் என்றொரு அனுதாப உணர்வு. இவனுக்கு என்ன வந்தது. திடீர்னு இப்படி? இதுக்கு என்ன செய்யலாம்? யாரிடம் கேட்கலாம்? இவ்விதமான குழப்பம் வேறு, காலைத் தேய்த்துக்கொண்டு நின்றார்கள்.

அவர்களுக்கு உதவிபுரியவே வந்தவர்போல் வீட்டுக்காரர் வாசுதேவ், 'என்ன ஸார், உங்க ஃபிரண்டுக்கு என்ன ஆச்சு?' என்று கேட்டபடி வந்தார்.

'என்னன்னே தெரியலியே!'

'பாட் அல்லது ஆஸிட் வேலை செய்யுதோ என்னமோ?'

இது என்னவோ புரியாத பாஷையாக இருக்குதே என்று மற்ற இருவரும் முழித்தார்கள்.

வாசுதேவ் ரொம்ப முன்னேறியவர். அப்படிக் காட்டிக்கொள்ள ஆசைப்படுகிறவர். ஏகப்பட்ட புத்தகங்கள், அயல் நாட்டுப் பத்திரிகைகள் படிப்பதில் ஆர்வம் உடையவர். தனது படிப்புவலையில் வந்து சிக்குகிற மீன்கள், முத்துச் சிப்பிகள், கிளிஞ்சல்கள் அனைத்தையும் தாறுமாறாகச் சிதறிக் கொட்டுவதில் ஆனந்தம் கொள்பவர். தன் பேச்சு பிறர்க்குக் குழப்பம் விளைவித்தால் தனக்கு வெற்றிகிட்டிவிட்டதாக மகிழ்ந்துபோகும் சுபாவம் உடையவர்.

கைகளை உவகையோடு தேய்த்துக்கொண்டு சிரித்தார் அவர். 'பாட் தெரியாது? பீ—ஓ—டி. POT. மாரிஜூவானு

வுக்கு மறு பெயர் அது. ஆஸிட் என்பது எல்—எஸ்-டி. LSD லைஸெர்ஜிக் ஆஸிட் டைதிலாமைட். இப்போ இளைஞர் உலக முற்போக்குவாதிகள், ஹிப்பிகள், மண்ணகத்தில் விண்ணின்பம் பெற—விட்டு விடுதலையாகி விண்வெளியிலே பறக்கும் சுகத்தை அனுபவிக்க—இதுகளைத்தான் உபயோகிக்கிறார்கள். அதை உபயோகித்தவர்கள் மாதிரியே நம்ம பிரதரும் நடந்துகொள்கிறார். அது தான் கேட்கிறேன்' என்று உற்சாகமாகப் பேசினார்.

'நம்ம கைலாசம் அதுமாதிரிச் சரக்குகள் பக்கத்திலேயே போகமாட்டானே!' என்றான் நண்பர்களில் ஒருவனான சோமு.

இன்னொருவன் மூர்த்தி: 'அப்படியே இருந்தாலும், இங்கே எல் எஸ் டி இவனுக்கு எங்கே கிடைக்கும்?' என்று இழுத்தான்.

வாசுதேவ் துப்பாக்கி மாதிரி வெடித்துச் சிரித்தார். 'ஏன் கிடைக்காது? இதுவும் தான் பெரிய ஸிட்டி ஆக வளர்ந்துட்டுதே. நம்ம ஸிட்டியிலும் எல்லாம் கிடைக்கும். எத்தனையோ ஹிப்பிகள் வாறாங்க, போறாங்க. எவனையாவது புடிச்சு, டீயும் டிபனும் வாங்கித் தந்தால், அது கிடைச்சிட்டுப் போகுது' என்றார்.

'நம்ம கைலாசம் அந்த மாதிரி வழிக்கெல்லாம் போகக் கூடியவன் இல்லையே' என்று சோமு சொன்னான்.

'எந்தப் புத்திலே எந்தப் பாம்பு இருக்குமோ? ஒரே ரக வாழ்வு அலுத்துப் போயிருக்கலாம் பிரதருக்கு! லைஃப்லே புது எக்ஸ்பெரிமெண்ட் பண்ணிப் பார்க்கலாமேன்னு துணிஞ்சிருக்கலாம். மனுஷங்களைப்பற்றி திட்டவட்டமாக எதுவும் சொல்ல முடியாது. யாரு எந்த நேரத்திலே எப்படி நடந்துக்குவாங்க? எவன் இன்ன வேளையிலே என்ன செய்வான் அல்லது செய்யமாட்டான் இன்னு எதையுமே கட் அன்ட் ரைட்டா சொல்லிப்போட முடியாது...'

'ஸார் ஸார், கைலாசத்தைப் பாருங்க' என்று மூர்த்தி கத்தவும், மற்றிருவரும் அங்கே கண் திருப்பினார்கள்.

அவன் தரைமீது கிடந்து நெளிந்து வளைந்து குறுகி நீண்டு, ஏதோ வேதனையினால் துயருறுபவன் போல், உருண்டு கொண்டிருந்தான். கைகளை உடல்மீது தடவியும் தேய்த்தும் எதையோ அகற்றுபவன்போல் செயல்புரிந்தான்.

'கைலாசம், உடம்புக்கு என்ன? உனக்கு என்ன செய்யுது?' என்று சோமு பரிவுடன் விசாரித்தான்.

கைலாசம் அவனைக் குத்தும் பார்வையால் நோக்கி, சீறினான்; 'பாம்பு மட்டும்தான் தோலுரித்துக் கொள்ள ணுமோ? பாம்பு மட்டும்தான் சட்டையைக் கழற்றிவிட்டுப் புதுசாக இருக்கமுடியுமோ? நானும் என் பழைய தோலை அகற்றிவிட முயற்சி செய்கிறேன். புதுசா, இளமையா, மினு மினுப்பா மாறிவிடுவேன். பார்த்துக் கிட்டே நில்லு!'

மேலும் பேச விரும்பாதவனாய், அவன் தன் உடம்பைத் திருகி முறுக்கி நெளிந்து புரளலானான்.

சோமு பெருமூச்செறிந்தான்.

'நல்லாயிருந்தானே, இவனுக்கு ஏன் இப்படி...' என்று இழுத்தான் மூர்த்தி. 'எப்போதிருந்து ஸார் இது மாதிரி?' என்று வாசுதேவிடம் கேட்டான்.

'எனக்கும் தெரியாது' என்று சொன்ன அவர் விவரித்தார்—

'இரண்டு நாளா பிரதர் ஆபீசுக்கும் போகலே. ரொம்ப நேரம் படுத்தே தான் கிடந்தாரு. உடம்புக்குச் சரியில் லேன்னு சொன்னாரு. இன்னிக்கு மத்தியானம் நான் ஓட்டலுக்குப் போகிறபோது இவருக்கும் காப்பி கீப்பி தேவைப்படுமா பார்க்கலாமேன்னு எட்டிப் பார்த்தேன். அவரு தானாகவே சிரிச்சுக்கிட்டிருந்தாரு. என்னய்யா ஹ்யூமர்; எனக்கும் சொல்லுமேன், நானும் சிரிக்கிறேன்னு சொன்னேன். நான் லட்டு, தெரியுமா? லட்டாக்கும், குஞ்சாலாடுன்னு அவர் முணமுணக்கவும் எனக்கு விஷயம் புரியலே. என்ன, உமக்கு லட்டு வேணுமா? ஜுரம்னு சொல்றீர், லட்டு தின்னலாமான்னேன். அப்போ பிரதர் ஒரு

கூச்சல் போட்டாரு பாருங்க! ஹோரய், டெரிபிள்! டே மண்டூ கங்களே, மடச் சாம்பிராணிகளே! ஏன், கவலே பிச்சுப் பிடுங்கும் மனுஷப் பயலுகளாக இருக்கிறீர்கள்? ஆப்பிளாய், ஆரஞ்சாய், மல்கோவாப் பழமாய், குஞ்சாலாடுகளாய், குடமிளகாய்களாய், முட்டகோஸாய், எதுவாகவும் மாறிவிடுங் கள். நீ என்ன நினைக்கிறயோ அதுவே ஆகின்றய். நான் லட்டு, இனிப்பான குஞ்சாலட்டு என்று நினைக்கிறேன். அதுவே ஆகின்றேன்னு பிரசங்க தோரணையில் கூச்சலிட்டார்.

'லட்டாக இருக்கணுமின்னு இருந்துட்டுப் போமேன்; அதுக்கு ஏன் கத்துறீர்னேன். நீரு மட்டும் அந்த இந்திரா லட்டு மாதிரி இருக்கிறு; விஜயா ஆப்பிள்னு ஆப்பிள் தான்; வசந்தா சரியான டொமடோன்னில்லாம் சொல்லலாமோ? அவளுக மட்டும்தான் அப்படி இருக்கமுடியுமோ? நானும் லட்டு ஆகிவிட்டேன், குஞ்சாலட்டு என்று பிரதர் சொன்னர். சீரியஸாகத்தான் பேசினர். இது ஏதடா வம் பாப் போச்சுன்னு பதறினேன். பிரதருக்கு மைண்டு சரி யில்லே! ஸம் திங் ராங்னு என் மனம் சொல்லிச்சு. ஓய், லட்டுன்னு ஜாக்கிரதையாக இரும். யாராவது கடிச்சுத் தின்னுடப் போறுங்க. அல்லது எலி கிலி கடிச்சுப்போடும். அல்லது, உதிர்ந்து போகப் போறீர்னேன். சும்மா தமாஷுக்குத்தான் சொன்னேன். உடனே பிரதர் அழ ஆரம்பிச் சிட்டார். 'ஐயோ, இங்கே யாரோ புட்டுப்புட்டுத் தின்றுங் களே; இந்தப் பக்கம் எலி கடிக்குதே; ஐய்யய்யோ நான் உதிர்றேன், உதிர்ந்தே போறேனே'ன்னு பயந்து அலறி மூலேப் பக்கம் போயி ஒண்டிக்கிடவும்தான், சரி, கைலாசமாக இல்லே; அவருக்குள்ள ஸம்திங் புகுந்துக்கிட்டு அவரை பாடாய்ப் படுத்துதுன்னு எனக்குத் தோணிச்சு. நான் வெளியே போயிட்டேன். திரும்பி வந்த பிறகும், ஆளு அப்படியேதான் இருக்கார்ங்கிறது தெரிஞ்சுது...'

வாசுதேவ் விரிவாகவே பேசினர்.

'ஏன் இப்படி ஆச்சு?' என்று மற்றவர்கள் குழம்பினர்கள். ஒரு டாக்டரை அழைத்து வந்து காட்டினர்கள். 'ஏதாவது ஷாக் ஏற்பட்டிருக்கலாம். மென்ட்டல் டிஸ்டர்பன்ஸ் ஏற்

பட்டிருக்கும், எதுக்கும் தூக்க மருந்து கொடுக்கிறேன், ஒரு இன்ஜெக்ஷனும் போடுறேன்' என்ருர். அவ்விதமே செய்தார், போனுர்.

அவன் கிறங்கிப்போய்க் கிடந்தான். மெது மெதுவாய்த் தூக்கத்தில் ஆழ்ந்தான். அவனைப்பற்றியே மற்றவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

கைலாசம் உணர்ச்சிமயமானவன், உணர்ச்சிவசப்படுகிறவன். உணர்ச்சிகளால் அலைக்கழிக்கப்படுகிறவன். புற நிகழ்ச்சிகளால் எளிதில் பாதிக்கப்படுபவன். அக உளைச்சல் அதிகம் பெறுபவன், மன தைரியம் இல்லாதவன். வேதனைகளை, துன்பதுயரங்களை, வறுமையை, வெறுமையைக் கண்டு கண்டு குமைந்தவன். சிறுமைகளை, சிதைவுகளை, சீரழிவுகளைப் பார்த்து, எண்ணி, உளைந்து, விரக்தி கொண்டவன். வாழ்வில் நம்பிக்கை இழந்தவன். சூழ்நிலையிலிருந்து, சுற்றிலும் உள்ள வெறுமை வறுமை வேதனைகளிலிருந்து, விடுபட்டு வெளியேறித் தப்பி ஓடவேண்டும் என்று ஆசை வளர்த்தவன், அவ்வாறு தப்பிப்போக வழியும் வகையும் அறியாது தவித்தவன்.

'இப்படிப்பட்டவர்கள் தான் பாட்ஐயும் ஆஸிட்ஐயும் இதர ட்ரக் (drug)குகளையும் கைக்கொள்கிருர்கள்' என்று வாசுதேவ் குறிப்பிட்டார். அவற்றைத் தேடிப்பெறும் திறமையும் உபயோகிக்கும் துணிச்சலும் இல்லாதவன் கைலாசம். அவனுக்கு வசதியாக அமைந்த—கை கொடுத்த நழுவல் மார்க்கம் கனவில் ஆழ்வது ஒன்றுதான். அவன் சுபாவங்களுக்குக் கனவுதல் ஒத்திருந்தது. அவன் மனசுக்கு அது ரொம்பவும் பிடித்திருந்தது.

அப்படி இருந்தால் நல்லாயிருக்கும்; இது நடந்தால் அழகாயிருக்கும்: இப்படி இப்படி நிகழ்ந்தால் ஜோராக இருக்குமே என்று தனித்திருந்து கனவினுன். நண்பர்களோடு பேசும்போது கனவுகளாக உதறினுன். விழிப்பு நிலையில், தூக்கத்தில், கனவுகளை வளர்த்து, ரசித்து, இன்புற்ருன். தன்னை ஒரு ஹீரோவாக, தேவமகனுக, அற்புத வல்லமைகள் பெற்ற

அதிமனிதனாக, அரக்கனாக, சித்துகள் புரிவதாகக் கனவுகள் ஆக்கிக் களித்தான். அலாவுதீனின் 'ஜீனி' அவனுக்குத் தோழனாய்க் கிடைத்து விட்டதாக—விக்கிரமாதித்தன் வேதாளம் ஏவலாளாக வந்து வாய்த்துவிட்டதாக— தேவ மகள் ஒருத்தி காதலியாக வந்துசேர்ந்ததாக—இனிய தேவதை தனக்கு நற்றுணையாக —வந்து குடிபுகுந்ததாக—இந்தவிதச் சுகமான கனவுகளை ஆக்கி, இனிய நிகழ்ச்சிகளை சித்திரித்து, தன்னுள் தான் சொக்கிக் கிடக்கும் போக்கும் அவனிடம் வளர்ந்து வந்தது. சில சமயம் அவையே நிஜம் போலும், எதிரே காண்பன நடப்பன எல்லாம் வெறும் மாயைகள்போலவும் அவன் எண்ணவும், சில சமயங்களில் நம்பி மயங்கவும் செய்தான்.

இம் மனநிலை நிலைபெற்றுவிடும்படி — மயக்குத் தோற்றத்தையும் நிஜங்களையும் பகுத்துப் பிரிக்கும் உணர்வுத் திறன் சேதமுற்றுப் போகும்படி—ஏதோ ஒரு அதிர்ச்சி அவனை தாக்கியிருக்க வேண்டும்.

வாசுதேவின் இந்த விளக்கம் பொருத்தமாக இருப்பதாகவே மற்றவர்களுக்கும்பட்டது.

மறுபடியும் வந்து பார்த்த டாக்டர், வாசுதேவனது விளக்கத்தைக் கேட்டு விட்டு பெருவிரலாலும் நடுவிரலினுலும் மோவாயை வருடியபடி நின்றார். தீவிர யோசனையில் இருப்பது போல் காட்டிக் கொண்டார். பிறகு நிதானமாகப் பேசினர்—

'இருக்கலாம். எல்லாம் எஸ்கேப்பிஸம் தான். கனவுகளில் வாழ முயல்வது, நீங்கள் குறிப்பிடுகிற போதைச் சரக்குகள் மூலம் அல்லது குடிவகைகள் மூலம், தன்னையும் பிரத்தியட்ச உலகையும் அன்றாடத் தொல்லைகளையும் பிச்சுப்பிடுங்கல்களையும் விட்டு விலகி நிற்க முயற்சிப்பதே எஸ்கேப்பிஸம் தான். வாழும் துணிச்சல் இல்லாத—உண்மைகளை எதிர்கொள்ளும் திராணி குன்றிப்போன—மனேதைரியத்தை இழந்துவிட்ட ஒரு போக்கு தான் இது எல்லாம். பைத்தியம் பிடித்து அலைவது கூட ஒரு வகை

எஸ்கேப்பிஸம் தான். அது ஒருவன் தானாக விரும்பி ஏற்றுக் கொள்ளாததாக இருக்கலாம். ஆயினும், ஓர்ரீஸ் அன்ட் பிராப்ளம்ஸினால் திணறிக் குழம்புகிற மனசுக்கு இயற்கையே ஒரு போக்காகக் காட்டிவிடுகிற எஸ்கேப்பிஸம்தான் மென்ட்டல் அபெர்ரேஷன்ஸ் என்று சொல்லவேண்டும். நம்ம யங் ஃபிரண்டுக்கு அப்படித்தான் என்று நினைக்கிறேன்.

அன்றாடச் சிக்கல்களால், நித்தியப் பிரச்சினைகளினால் திணறித் திண்டாடிய—வாட் இஸ் ஹிஸ் நேம்?—திஸ் யங் ஃபெல்லோ—ஓ எஸ், கைலாசம், அமைதியற்று, கனவுகளைப் பின்னியவாறு, சரியாகச் சாப்பிடாமல், நெடுக அலைந்திருக்க வேண்டும். சில தினங்களாக வெயில் கடுமை என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே. மென்ட்டலி அன்ட் பிஸிக்கலி வீக் ஆன நிலையிலே கடுமையான வெயிலில் திரிந்த இவரை வெயில் பாதிச்சிருக்கு. ஸன் ஸ்ட்ரோக் ஏற்பட்டிருக்க வேண்டியது. நல்ல காலம், தெருவிலே விழுந்து கிடக்கலே, வீட்டிலே வந்து கிறங்கிப் படுத்திட்டார். செத்தவன் மாதிரி சில மணி நேரம் கிடந்திருக்கணும். யாரும் கவனிச்சிருக்க மாட்டாங்க. பிறகு வெறும் காப்பி, மோருன்னு யாராரோ தந்ததைச் சாப்பிட்டிருக்கார். அப்பவே அவர் அவராக இல்லை. மென்ட்டல் ஸிஸ்டம் பாதிக்கப்பட்டு விட்டது. அவருடைய எஸ்கேப்பிஸ நினைவோட்டம் வலிமை உடையதாகி விட்டது, இவரை மனநோய் மருத்துவ மனைக்கு அனுப்புவதுதான் நல்லது. அதுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வோம்.'

டாக்டர் போய்ச் சேர்ந்தார்.

அவரோ, வாசுதேவோ, நண்பர்களோ கைலாசத்தை மனநல மருத்துவத்துக்காக ஒரு ஸ்பெஷலிஸ்டிடம் அல்லது உரிய ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவைக்க வேண்டிய அவசியமே ஏற்படாமல் போய் விட்டது.

. . .

**அவனுடைய எஸ்கேப்பிஸம் அவனுக்குத் துணைபுரிந்தது!**

கைலாசம் எழுந்து நின்றான். ஒரு சிட்டுக்குருவி உல்லாசமாகத் திரிவதை, கத்திக்கொண்டு துள்ளித் துள்ளிப் பாய்வதை, ஜிவ்வெனப் பறப்பதை வேடிக்கையாகப் பார்த்தான்.

'விட்டு விடுதலையாகு! சின்னஞ் சிறு சிட்டுக்குருவி போலே!' என்று கத்தினான். 'நான் குருவி. ஜாலியான சிட்டுக்குருவி' என்று தவ்வித் தவ்வி, மாடிப்படிகளில் குதித்துக் குதித்து மேலே போனான். மொட்டை மாடிக்கே போய்விட்டான்.

அங்கே கைப்பிடிச்சுவர்மீது ஏறி நின்று கீழே பார்த்தான். வெயில் பளபளத்தது. உலகம் ஒளியில் குளித்தது. பக்கத்து வீட்டில் குளுகுளு என வளர்ந்து நின்ற பூச்செடிகளும் பிறவும் ஜில்லென மிளிர்ந்தன. எல்லாம் இனிமைகளாய், அற்புதங்களாய், அழகுத் துளிகளாய் அவனைத் தாக்கின, சிரித்தன.

'நட்சத்திர ஜிகினாக்கள் சிமிட்டுகிற பச்சை மெத்தை! அதோ எனக்காக விரித்து வைத்திருக்கிறது. எனக்காகக் காத்திருக்கும் இன்பராணி அங்கே பதுங்கிக்கொண்டு கண்ணா மூச்சி விளையாடுகிறாள்' என்று அவன் சந்தோஷமாகச் சொன்னான்.

அவனைக் கண்காணித்தபடி பின்னாலேயே வந்த வாசுதேவ் புன்முறுவல் பூத்தார். அவர் வாய் திறப்பதற்குள், கை நீட்டி எட்டிப் பிடிப்பதற்குள், காரியம் நிகழ்ந்து விட்டது—

கைலாசம் கீழே குதித்து விட்டான். தரையில் அவன் மண்டை மோதி பலத்த காயம். மூக்கில் சரியான அடி. அவன் ஒரே அடியாக 'நழுவி ஓடி' விட்டான்.

'ஐயோ பாவம்!' சோகமூச்செறிந்து, கண்கலங்கி நின்றார் வாசுதேவ்.

'சிவாஜி', ஆண்டு மலர் 1970

# புரியாத விஷயம்

'ஏய் ஏய்!' என்று பதறிப்போய் அலறினர் சிவானந்தம். 'பிடிடா... பிடிடா... அடே அடே!' என்று தொடர்ந்து கத்தினர்.

அவர் வீட்டினுள் புகுந்து யாரோ எதையோ கொள்ளையடிப்பதைக் கண்டுவிட்டுப் பதறியவர்போல் சிவானந்தம் கத்திய கதறல் வீட்டில் இருந்தவர்களையும், தோட்டத்தில் வேலை செய்துகொண்டிருந்த முத்துசாமியையும் சுண்டி இழுத்தது. கையிலிருந்த வேலைகளை அப்படி அப்படியே போட்டுவிட்டு, சத்தம் எழுந்த இடம்நோக்கி 'அரக்கப் பறக்க' ஓடி வந்தார்கள் அவர்கள்.

சிவானந்தம் அவரது அறைக்குள், தோட்டத்தைப் பார்த்து அமைந்திருந்த சன்னல் அருகில் நின்றுதான் அப்படிக் கத்திக்கொண்டிருந்தார். வேறு என்ன செய்வது என்று விளங்காதவராய் அவர் கூச்சல் கிளப்பி நிற்பதாகத் தோன்றியது.

விரைந்து வந்தவர்கள் தோட்டத்து சன்னல் பக்கம் தான் வந்தார்கள். 'என்ன, என்ன விஷயம்?' என்று கேட்டார்கள். அங்கே மாடோ, மனிதரோ நின்று நாசவேலை செய்ததாகவும் அவர்களுக்குப் படவில்லை.

'அதோ பாரு'... அந்தக் குரங்கு செடிகளை பாழாக்குது. இலைகளை பிச்சுப் பிச்சுப் போடுதே. ஏய் ஏய், விடாதே! பிடிடா' என்று பெரியவர் உணர்ச்சி மிகுதியோடு மீண்டும் அலறினர்.

மெய்யாகவே குரங்குதான் போலும் என்று கண்களை ஏவினர் பலரும்.

சிவானந்தம் சுட்டிய இடத்தில் ஒரு சிறு பெண்தான் நின்றது; தோட்டவேலை செய்யும் முத்துசாமியின் மகள் செல்லம்.

அந்த ஆறு வயசுக் 'குரங்கு'தான் சும்மா ஒரு செடியின் இலைகளை கிள்ளிப் போட்டிருந்தது. அதுக்கு ஒரு விளையாட்டு; செடியில் பூக்கள் இல்லை. பூக்களை வெளிச்சமிடாத, சில சில வர்ண விஸ்தார இலைகளைக்கொண்ட, அழகுச் செடிகளே அந்தப் பகுதியில் நின்றன. பூக்கள் வசீகரமாகச் சிரித்துக் குலுங்கினால், அச்சிறுமி அவற்றை கொய்திருக்கும்!

அப்போதும் அதன் விரல்கள் ஒரு செடியைப் பிடித்து இழுத்தபடிதான் இருந்தன. பெரியவர் சத்தம் போட்டதும், திமு திமு என்று ஆட்கள் வந்ததும், தனது விளையாட்டால் வந்த விளைவுகளை என்பதை உணராமலே அது நின்றது. வீட்டுப் பெரியவர் கூப்பாடு போடுவதும், மற்றவர்கள் பரபரப்பாக வந்து நிற்பதும் அக்குழந்தைக்கு ஒரு வேடிக்கை யாகத்தான் தோன்றியது. ஆகவே அது சிரித்தது.

'பாருடா; எவ்வளவு திமிரு! செடிகளைப் பாழ்படுத்துறதும் இல்லாமே, பல்லை வேறே காட்டுதே. கொழுப்புப் புடிச்ச கழுதை!' என்று சிவானந்தம் உறுமினார்.

அவருக்குத் தெரியும் அச் செடிகளின் உயர்வும் அருமை யும்! தோட்டத்தில் உள்ள ஒவ்வொரு செடியும் அவருக்குக் குழந்தை மாதிரி. வீட்டுத் தோட்டத்தைக் கலை உணர் வோடும் ரசனை ஈடுபாட்டுடனும் கண்ணும் கருத்துமாகப் போற்றிப் பாதுகாக்கும் பண்பாளர் அவர். செடி கொடி களின் மதிப்பை அறியாத 'சின்னச் சவம்' குரங்குத்தனம் பண்ணுவது என்றால்?

அவர் உடல் பதறியது. உணர்வுகள் கொதிப்புற்றன. மீண்டும் கத்தினார். 'என்னடா பாத்துக்கிட்டே நிக்கிறே?.

முத்துசாமி முன் வந்தான். 'ஏ செல்லா, உனக்கு தோட்டத்திலே என்னட்டீ வேலை? செடிகிட்டே ஏன் சேட்டை பண்ணுதே? ஏன் இலைகளை இப்படிப் பிச்சுப்

போட்டிருக்கே?' என்று கூச்சலிட்டான். சிறுமியின் முதுகி லும் தலையிலும் அறைகள் கொடுத்தான்.

சிங்காரச் செடிகள் அருகே சிரிக்கும் பூச்செண்டுபோல் காட்சி அளித்த சிறு பெண், தந்தையின் தாக்குதலால் நிலை குலைந்து முகம் விகாரமாக, கோரக் குரலெடுத்து அழுது கொண்டே ஓடியது.

பெரியவருக்கு அப்போதுதான் ஓரளவு மன அமைதி ஏற்பட்டது. 'அந்தக் கழுதைக்குத் தோட்டத்திலே என்ன வேலை? அதை இனிமே இங்கே வரவிடாதே' என்று எச்சரித்து விட்டு, உள்ளமும் உணர்வுகளும் சமன் உறுவதற்காக ஈஸி சேரில் சாய்ந்தார். அதற்கு முன்னதாக, கத்திய தொண்டை இதமடைய, ஒருபாட்டிலில் தயாராக இருந்த 'ஆப்பிள் ஜூஸ்' ஐ கண்ணாடித் தம்ளரில் ஊற்றி மெது மெதுவாக உறிஞ்சிக் குடித்தார்.

மற்றவர்கள் அவரவர் அலுவல்களைக் கவனிக்கப் போய் விட்டார்கள்.

பங்களாவாசி சிவானந்தம் அவர்களது வீட்டுத் தோட்டம் அந்தப் பெரிய நகரத்தில் பெருமைக்குரிய ஒரு சில தோட்டங்களில் ஒன்று. சுத்தமாகவும் நவீன முறையிலும் பேணப்பட்டு வந்தது அது. பலரகமான பூச்செடிகளும், பூக்காத வெறும் இலை விசேஷச் செடிகளும், கொடிகளும், இதர தோட்டங்களில் இல்லாத அற்புத இனங்களும் அங்கு செல்லப் பிள்ளைகள்போல் வளர்க்கப்பட்டு வந்தன. பெரியவர் செடிகள்மீது மிகுந்த பாசமும் பற்றுதலும் கொண்டிருந்தார் என்றே சொல்லவேண்டும்.

ஆறு வயசுப் பிள்ளை செல்லத்துக்கு அது எங்கே புரியும். பாவம்! அவளுடைய அப்பா முத்துசாமி தோட்டத்தில் சதா பாடுபட்டுக்கொண்டிருந்ததுதான் தெரியும். செடிகளுக் கெல்லாம் தண்ணீர் பாய்ச்சுவது, மண்ணைக் கொத்துவது, புதிது புதிதாகச் செடிகளை நட்டு வளர்ப்பது—எல்லா வேலை களையும் அவன்தான் கவனித்து வந்தான்.

பொழுது போகாத வேளைகளில், விளையாட்டுத் துணை இல்லாமல் சும்மா தானே ஆடிக் களித்து அலுத்த சமயங்களில், செல்லம் தோட்டத்தினுள் வந்து சுற்றித் திரிவாள். செடிகளை பார்ப்பாள். ஒன்றிரண்டு பூக்களைப் பறிக்கவும் செய்வாள்.

முத்துசாமி பார்த்தால் சத்தம் போடுவான். வீட்டுப் பெரியவர் அன்றுவரை அந்தச் சிறுபிள்ளையின் குரங்குத் தனத்தைக் கண்டதில்லை. முதல் தடவையாகப் பார்த்த போது ஆத்திரம்கொண்டுவிட்டார், பாவம்!

அதன் பிறகு சில நாட்கள்வரை செல்லம் தோட்டத்தின் பக்கம் எட்டிப் பார்க்கவில்லை. அப்புறம் ஒருநாள், உலகத்தையே விலைக்கு வாங்கிவிட்ட ராணி மாதிரி சுதந்திரமாக உல்லாசமாகக் குதித்துக்கொண்டு வந்துசேர்ந்தாள்.

தண்டனை, கண்டிப்பு எல்லாம் சர்வ சகஜமானவை அவளது வாழ்க்கையில். வீட்டில் படாத அடியா? 'தோளுக்கு மேலே தொண்ணூறு அடி; துடைத்துவிட்டால் ஒண்ணுமில்லே!' என்ற உணர்வு அவளுள் படிந்துகிடந்தது. மேலும், விளையாட்டுப் புத்தி அதிகம். தோட்டம் இனிமையான தோழி மாதிரி, 'வா வா' என்று ஆசைகாட்டிக் கூப்பிட்டு நிற்கிற போது அவள் எப்படி ஒதுங்கி இருந்துவிட முடியும்?

வந்தாள். அவள் அப்பா செய்துகொண்டிருந்த காரியத்தைப் பார்த்ததும், பதறிப்போனாள். 'ஐயோ' எனக் கூறி, சிறு கையால் தன் வாய் புதைத்து நின்றாள் செல்லம்.

'என்னட்டீ?' என்று சிடுப்புடன் திரும்பி மகளைப் பார்த்தான் கருமமே கண்ணாயிருந்த முத்துசாமி. செடிகளின் தலைகளை வெட்டி ஒழுங்குபடுத்திக்கொண்டிருந்தான் அவன். முதிர்ந்துவிட்ட 'கன்னாவாழை'ச் செடிகளைப் பிடுங்கிப் போட்டிருந்தான்.

'என்ன இப்படிப் பண்ணுதே? பெரிய ஐயா கோபிக்கப் போறாரு!' என்றாள் மகள். 'செடியை எல்லாம் ஏன் இப்படி நாசமாக்குறே? பூவும் இலையுமா இதுகளை இப்படியா புடுங்கிப் போடுவது? அன்னைக்கு அஞ்சாறு இலைகளை கிள்ளிப் போட்

டேன்னு என்னமாச் சத்தம் போட்டாரு! இன்னிக்கு உன்னை போலீஸ்காரன்கிட்டேதான் புடிச்சுக் கொடுப்பாரு. ஆமா' என்று நீட்டி நீட்டிப் பேசினுள் அவள்.

முத்துசாமி சிரித்தான். 'உனக்கு ஒண்ணும் தெரியாது, போ. செடிகளும் தோட்டமும் அழகாயிருப்பதுக்கு இப்படி எல்லாம் செய்யவேண்டியது அவசியம். ஐயா தான் இதை எல்லாம் செய்யச் சொல்லியிருக்காரு...'

'இப்படி மொட்டை மொட்டையா வெட்டிவிடவா? பூச்செடிகளைப் புடுங்கிப் போடவுமா சொன்னாரு' என்று வியப்புடன் மகள் விசாரித்தாள்.

'ஆமா ஆமா. நீ இங்கே நிற்காதே. ஓடிப்போ. இப்ப ஐயா வருவாரு' என்று அவளை துரத்தினுன் அவன்.

'இது என்ன இது!' என்று அதிசயித்தாள் செல்லம். 'நான் இம்புட்டுப்போலே இலைகளை பிச்சுப் போட்டதுக்கு அவரு பெரிசா கத்தினரே. இன்னிக்கு நிறைய நிறைய, கொப்பு கொப்பா, வெட்டிப் போடுறதினலே, புடுங்கிப் போடுறதுனலே, செடி எல்லாம் நாசமாகலியாக்கும்? நான் அஞ்சாறு இலைகளை கிள்ளினதனலே செடி பாழாயிட்டு துன்னரே!...'

அந்தப் பிஞ்சு மனசால் இந்தப் பெரிய விஷயத்தைப் புரிந்துகொள்ள இயலவேயில்லை. திரும்பத் திரும்ப, அதன் நோக்கிலே, நியாயமற்ற இந்தப் போக்கை எண்ணிக் குமையத்தான் முடிந்தது. விளையாட்டில் மனம் செல்லாமல், சோர்வுற்று வெளியேறினுள் செல்லம்.

ஒரு மாதம் சென்றிருக்கும். அந்தப் பெரிய வீட்டின் தோட்டம் விசேஷ கவனிப்புக்கு உரியதாக விளங்கியது. பெரிய மனிதர்கள் பலர் தோட்டத்தைச் சுற்றி வந்தார்கள். அனைத்தையும் கண்டுகளித்தார்கள். வியந்து ரசித்தார்கள். பாராட்டிப் புகழ்ந்தார்கள்.

அந் நகரத்தில் அழகாகவும் சிறப்பாகவும் போற்றி வளர்க்கப்படும் வீட்டுத் தோட்டங்களில், உயர்திருவாளர்

சிவானந்தம் அவர்களின் தோட்டமே ஆகச் சிறந்தது; அழகானது; புதுமைப் பொலிவுடன் திகழ்வது; வளமாய் சீருடன் பேணப்படுவது என்று சான்றுரையும், முதல் பரிசான வெள்ளிக் கேடயமும் வழங்கினார்கள், அதற்கென அமைந்திருந்த குழுவினர்.

சிவானந்தம் பெருமையோடும் மகிழ்ச்சியோடும் அவற்றை ஏற்றுக்கொண்டார். தோட்டக்கார முத்துசாமி அடக்க ஒடுக்கமாய் கையை கட்டிக்கொண்டு, ஒரு ஓரத்தில் நின்றான்.

தற்செயலாக தோட்டத்தினுள் வந்திருந்த செல்லம் இதை எல்லாம் பார்த்தபடி நின்றாள்; பெரியவர்கள் பார்வையில் படாதவாறுதான்.

அப்புறம் அவள் தந்தையிடம், 'அதெல்லாம் என்ன? அவங்க ஐயாகிட்டே என்னமோ கொடுத்தாங்களே, அது என்ன' என்று ஆவலோடு விசாரித்தாள்.

'இந்தப் பட்டணத்திலேயே இந்தத் தோட்டம்தான் உசந்தது; ரொம்ப நல்லா இருக்கு; கவனிச்சு பாதுகாக்கப் படுதுயின்னு சொல்லி பாராட்டிஞங்க. அதுக்காக ஐயாவுக்கு பரிசு கொடுத்தாங்க—கேடயமும் சர்டிபிட்டும்' (சர்டிபிகேட்) என்று சொல்லி மகிழ்ந்து போனான் முத்துசாமி.

'இது என்னப்பா இது!' என்று ஆச்சர்யப்பட்டாள் செல்லம்.

சுற்றும் முற்றும் பார்த்தபடி, 'எதுடீ? என்ன விஷயம்?' என்று திகைப்புடன் கேட்டான் தந்தை.

'இல்லே... வந்து... தோட்டத்திலே ஓயாமப் பாடு பட்டது நீதானே? தண்ணி பாய்ச்சி, செடிகளை வாடாமல் காப்பாத்தி, அழகா நட்டுவெச்சு நீதானே கவனிச்சு வளர்த்தே? தோட்டம் நல்லாயிருக்கும்படி செய்யறது நீதானே? உனக்குத்தானே பரிசு தரணும்? ஐயா என்ன செஞ்சாரு? என்ன செய்ருரு? ஒரு இலையைக்கூட கிள்ளிப் போடுறதில்லே; மண்ணை கொத்துறது இல்லே. அப்படி இருக்கையிலே,

தோட்டத்தை நல்லா வச்சிருக்காருங்கிற பரிசை அவருக்கு எப்படிக் கொடுக்கலாம்?"

தனக்கு விளங்காத ஒரு விவகாரத்தை அறிந்துகொள்ள வேண்டும் என்ற இயல்பான குறுகுறுப்போடுதான் அந்தச் சிறுமி கேட்டாள்.

'சீ வாயாடிக் கழுதை! என்ன திமிரு உனக்கு?' என்று ஆத்திரத்தோடு கத்தினன் முத்துசாமி. 'ஐயா காதிலே இது விழுந்தா என்ன நினைக்கமாட்டாரு?' என்றும் முணுமுணுத்தான்.

அவன் அடித்தாலும் அடிப்பானே என அஞ்சி அவனது கைக்கு எட்டாத தூரத்துக்கு விலகி ஓடிய செல்லத்துக்குப் பெரியவர்களின் போக்கே பெரும் புதிர் ஆகத்தான் தோன்றியது.

'சிகரம்', ஆகஸ்டு 1975

# பார்வை பேதம்

மூக்கபிள்ளைக்கு வயது என்ன இருக்கும் என்பது அவருக்கே தெரியாத சங்கதி.

'எழுபது எழுபத்தொண்ணு இருக்குமா?' 'எழுபத்தஞ்சை நெருங்கியிருக்கலாம்', 'எழுபத்தாறு முடிஞ்சிருக்குமோ?'—இப்படி ஒவ்வொருவர் ஒவ்வொன்றைக் கூறும் போது, 'உம் உம்...இருக்கும் இருக்கும்...இருக்கலாம்' என்பதில் எதையாவது அவர் சொல்லிவைப்பார். அவருக்கே திட்டவட்டமாக எதுவும் தெரியாததுதான் காரணம்.

அவரிடம் ஜாதகக் குறிப்பு எதுவும் இல்லை, அவருடைய வயதைத் துல்லியமாகக் காட்டக்கூடிய ஆதாரங்களும் ஒன்றுமில்லை. அவர் அநேக வருஷங்களாக 'வயது எழுபது' என்று சொல்லிக்கொண்டிருந்தவர்தான். அவருக்கே அது அலுத்துப் போகவும், 'எழுபத்தஞ்சு' என்று சொல்ல ஆரம்பித்தார். இப்படிச் சில வருடங்கள் சொல்லிக்கொண்டிருப்பார். பிறகு ஒரே தாவு. 'எண்பது' என்று கூற ஆரம்பித்துவிடுவார். அவரது வயதுக் கணக்கைப் பொறுத்தவரையில், அவர் 'வைத்தால் குடுமி, சிரைத்தால் மொட்டை' என்ற நியாயம் தான். அவர் எழுபதையும் அதற்கு மேற்பட்ட எண்ணையும் தொடவிரும்பாமல், 'அறுபத்தாறு, அறுபத்தெட்டு' என்று எதையாவது சொல்லிக்கொண்டிருந்தால், அது சரியில்லை என்று யார்தான் மறுத்துவிட முடியும்? இல்லை; அப்படி மறுப்பதற்கு, மறுத்துப் பேச விரும்புகிறவரிடம், ஆதாரம் தான் என்ன இருக்கிறது? பின்னே என்ன! பேச்சை விட்டுத் தள்ளும்!

மூக்கபிள்ளை புதுப்பட்டி என்கிற கிராமத்தில் வசித்து வந்தார். அவர் பிறப்பதற்கு முன்பிருந்தே—ஏன், அவர்

தாத்தா காலத்திலிருந்தே—அந்த ஊர் புதுப்பட்டி ஆகத் தான் இருந்து வருகிறது. அதற்கு அக்கம் பக்கத்தில் இரண்டு மூன்று புதூர்கள் தோன்றிவிட்டன. ஒரு ஊர் 'சிவநகர்' என்றுகூடப் பெயரைப் பெற்றுவிட்டது. (அது நகரம் ஒன்று மில்லை. முப்பது நாற்பது குடிசைகளைக் கொண்ட சிற்றூர் தான். என்றாலும், அதற்குப் புதுமையான பெயர் வேண்டும் என்று அநேக இளவட்டங்கள் தீர்மானித்தார்கள். அது 'நகர்' ஆய்விட்டது!) இருந்தாலும், பிள்ளை அவர்களின் ஊர் இன்னும் பழைய பட்டி ஆகிவிடவில்லை, பெயரளவில்.

மூக்கபிள்ளை இன்னும் நிமிர்ந்துதான் நடந்தார். கை தடிக்கம்பை 'கொண்டா' என்று கேட்கவில்லை. கண்களுக்குக் கண்ணாடியின் உதவி தேவைப்படவில்லை. அவர் வாயில் பற்கள் இருந்தன. 'அவர் சிடை முறுக்கு பொருவிளங்காய் எல்லாம் வெண்கலப் பானையில் ஸ்டாக் பண்ணியிருக்கிறார். ராத்திரி ஒன்பது மணிக்கு மேலே, யாரும் வீடுதேடி வர மாட்டாங்க என்று உறுதிப்பட்டதும், இருட்டில், கட்டிலில் படுத்துவாறே, கடமுடான்னு கடித்துத் தின்பார். தனியாகத் தின்பதிலே அவருக்கு எப்பவுமே இன்ட்ரஸ்ட்!' என்று ஊரில் வாலிபப் பிள்ளையாண்டான்கள் பேசுவது வழக்கம்.

'சவத்துப் பயலுகளுக்குப் பொறந்த வெறும் பயலுக. அவனுகளையும் யாரு திங்கவேண்டாமுன்னு?' என்று மூக்க பிள்ளை முணமுணப்பதும் வழக்கம்தான். மற்றவர்கள் பேசுவது அவர் காதுகளையும் எட்டத்தான் செய்யும். அந்த ஊரில் ரகசியம் என்று எதுவும் கிடையாது.

'பெரியபிள்ளை இந்த வயசிலும் சீடை முறுக்குகளை எல்லாம் வெளுத்துக் கட்டுறாரே? அவர் பல்லு நெசமான பல்லுதானு; இல்லே, கட்டிக்கொண்ட பொய்ப் பல்லா?' என்றொரு சந்தேகம் ஒரு சமயம் சில பேருக்கு ஏற்பட்டது. அது உண்மையான பல்லேதான் என்ற உறுதியும் பின்னர் அவர்களுக்கு ஏற்பட்டுவிட்டது.

'இது அந்தக் காலத்து மண்ணுடேய்...வைரம் பாய்ஞ்ச கட்டையாக்கும்!' என்று மூக்கபிள்ளை அடிக்கடி பெருமை யாகப் பேசுவார்.

'சன்னத் தீவனமா தின்னுருக்கான் மனுசன்! உண்டவன் உரம் செய்வான்கிறது சும்மாவா? சனிக்கிழமைதோறும் எண்ணே தேய்ச்சுக் குளிப்பு. அன்று அருமையா உளுத்தங் களி. களி இன்னு சொன்ன அதுதான் களி! பிரமாதமா இருக்கும். அதிலே நல்லெண்ணெய் மினுமினுண்ணு வழியும். பாலும் தயிரும் நெய்யுமா தினம் உள்ளே போய்க்கிட்டே இருக்கு. காப்பி, புகையிலை விவகாரம் எதுவும் கிடையாது. அப்புறம் உடம்பு ஏன் வைரம் பாய்ஞ்சு தளதளன்னு இருக்காது?' என்று, அவரோடு சேர்ந்து வம்பளந்து பொழுதுபோக்கும் பாக்கியம் பிள்ளை பாட்டையா ஒரு தடவை சொன்னர்.

அதை மூக்கபிள்ளை மறுக்கவும் இல்லை. அவரே பெருமையாகச் சொன்னதும் உண்டு: 'ஏ, காப்பி என்னடே காப்பி! நீத்தண்ணி (நீராகாரம்) பக்கத்திலே அது நிற்கமுடியும்? காலையிலே எழுந்திருச்சதும், பெரிய தம்ளருக்கு ஒரு தம்ளர் நீத்தண்ணி தினம் குடிச்சிட்டு வா. அப்புறம் உடம்பு எப்படி இருக்குன்னு நீயே பாரு. மரவையிலே பழையச் சோறு போட்டு, கட்டித் தயிரையும் ஊத்தி, திருகப் பிசைஞ்சு, சுண்டக்கறி அல்லது சுண்டல் கீரை வச்சுக்கிட்டு முன்னலே உட்காரு. ஒரு வெட்டு வெட்டிப்போடுவே நீயே. ஏ, மசால் தோசை, பெசலு ரோஸ்டு அது இதுங்கிறதுல்லாம் டவுனுகள்ளே ஓட்டலிலே சும்மா பேருக்குத்தான். அதுலே என்ன சத்து இருக்குங்கேரு?' என்று ஆரம்பித்தாரானல், சாப்பாட்டு புராணத்தை எளிதில் ஏறக்கட்டிவிடமாட்டார்.

'அந்தக் காலத்திலே பார்க்கணும். சாப்பிடதுக்கு முன்னடி, நெய்யை கைநிறைய வாங்கிக் குடிப்பேன். சோத்திலும் பெரிய கரண்டிக்கு ஒரு கரண்டி நெறைய ஊத்தணும். சும்மா நானும் நெய் ஊத்திக்கிடுதேன்னு கரண்டியைக் காட்டிட்டு இழுத்துக் கொள்ற விசயமே அப்போ கிடையாது. அந்தக் காலத்திலே பாலு, தயிரு, நெய்யி எல்லாம் தாராளமாவும் சகாயமாவும் கிடைச்சுது. இப்பதான் பட்டி தொட்டிகளிலே, துட்டுக் கொடுத்தாலும், பாலு, மோரு,

நெய்யி எல்லாம் கிடைக்கேன்குதா? கிராமங்க ரொம்பவும் வறண்டு போச்சு!' என்றும் அவர் சொல்வார்.

மூக்கபிள்ளையின் ஊரான புதுப்பட்டியே அதற்குச் சரியான உதாரணமாக இருந்தது. குட்டிச் சுவர்களும், இடியும் வீடுகளும், ஊரைவிட்டு வெளியேறும் குடும்பங்களும், பிழைப்புக்காக வெளியூர் போகிறவர்களின் எண்ணிக்கையும் வருஷம் தோறும் அதிகரித்துக்கொண்டிருந்தன. ஊரைப் புதிதாகப் பார்க்கிறவர்கள் பார்வையில் பெரிய பெரிய வீடுகள் படும். அவை வெறுமையாய் நிற்பதுபோல் தோன்றும். 'இதில் எல்லாம் ஆள்கள் குடியிருக்கலையோ?' என்ற சந்தேகம் இயல்பாகவே உண்டாகும்.

குறுகலான, நீண்ட, தெருக்கள் எப்போதும் வெறிச் சோடிக் கிடக்கும். ஆட்களின் நடமாட்டம் சிறிதும் இல்லாததுபோல் காட்சிதரும். அவற்றின் வெறுமை முன் னிரவிலேயே மனசை உறுத்தும். எப்போதாவது தெருவில் தென்படுகிற உருவங்கள்—வயது முதிர்ந்தவர்கள், சீக்காளி கள், மெலிந்து உலர்ந்து வதங்கிக் காணப்படும் பெண்கள், போதுமான போஷாக்கின்றித் தவிக்கும் சிறுவர் சிறுமியர்—நிரந்தர வறுமையின் குரூப சித்திரங்களாகக் கண்களை உறுத்துவர்.

இரவு ஏழு மணிக்கே ஊர் ஓசையற்று, இயக்கமற்று, உயிர்த்துடிப்பு குன்றி, மிக அமைதியாகத் தோற்றம் காட்டும். அதன் வெறுமையை, வறுமையை, சவத் தன்மையை வெளிச்சமிட்டுக் காட்டுவதற்கே போலும் மின் விளக்குகள் எரிந்துகொண்டிருக்கும்.

எனினும், மூக்கபிள்ளைக்கு அந்த ஊரை வெகுவாகப் பிடித்திருந்தது. 'இது ரொம்ப அழகான இடம். இங்கே இருக்கிற அமைதி வேறே எங்கேயும் கிடைக்காது. பக்கத்திலே ஆறு ஓடுது, ஒரு மைல் தூரம் நடந்து போகணு மேங்கேரா? நடப்பது உடம்புக்கு நல்லது. காலை நடை காலுக்குப் பலம்; மாலை நடை மனதுக்கு நலம்! ஆற்றிலே குளிச்சிட்டு, ஆண்டவனை தரிசித்துப்போட்டு, வீட்டிலே

வந்து வேண்டியதைச் சாப்பிட்டுவிட்டு உட்கார்ந்தால், மனசிலே ஆனந்தமும் அமைதியும் நிறைந்துவிடும்...' இவ்வாறு உற்சாகமாகப் பேசிக்கொண்டே இருப்பார் அவர்—கேட்பதற்கு ஆள் இருந்தால்.

மூக்கபிள்ளை அந்த ஊரைவிட்டு அதிகமாக எங்கும் போனவர் அல்லர். 'வட்டச் சம்மணம் போட்டு' ஒரே இடத்தில் அசையாமல் உட்கார்ந்துவிடும் பிள்ளையார் மாதிரித்தான் அவரும். 'ஊர்வழி போறது வாறதுங்கிற தெல்லாம் சும்மா வீண்வேலை!' என்பது அவரது ஆணித்தர மான கருத்து. 'மதுரை பாராதவன் கழுதை' என்று அவர் ஊர்ப்பக்கத்துப் பெரிய மனிதர்கள் அடிக்கடி சொல்லி வந்ததனால் ,அப்படி அந்த ஊரிலே என்ன அதிசயம் இருக்குது பார்க்கலாமே என்று அவர் ஒருதடவை மதுரை போய் வந்தார். அந்த யாத்திரை அவருக்கு உற்சாகம் அளிக்க வில்லை. அவ்வூர் அவருள் பெரும் பாதிப்புகளை ஏற்படுத்தி விடவும் இல்லை. அதன் பிறகு அவர் எந்த ஊருக்கும் போக வேண்டும் என்று ஆசைப்படவுமில்லை.

'திருச்செந்தூரில் திருவிழா நடக்குது, வாருமேன்' என்று பாக்கியம் பிள்ளை அவரை எத்தனையோ தடவைகள் கூப்பிட்டுப் பார்த்தார். கடைசியாக வெற்றியும் பெற்றார். இரண்டுபேரும் போனார்கள். திரும்பி வந்ததும் மூக்கபிள்ளை தீர்மானமாகச் சொல்லிவிட்டார்:

'திருவிழா என்ன திருவிழா! ஒரே கும்பலும் நெருக்கடி யும்தான். ஊருக என்றால் எல்லாம் ஒரே மாதிரித்தான். தெருக்கள், வீடுகள், ஆளுகள்! சின்ன ஊரிலே இதுக குறை வாகவும், பெரிய ஊரிலே அதிகமாகவும் இருக்கும். அவ்வளவு தானே!'

அதிலிருந்து பாக்கியம் பிள்ளையோ, வேறு யாருமோ அவரை எங்கும் அழைப்பதில்லை என்றாகிவிட்டது. அதனால் மூக்கபிள்ளைக்குத் திருப்திதான் உண்டாயிற்று.

'எங்க தாத்தா இந்த ஊரிலேயேதான் இருந்தார். இங்கேயே கடை வைத்துச் சம்பாதித்தார். இந்த வீட்டைக்

கட்டினார். தாம் வசதியாக இருந்து, சாவதற்கு நல்ல இடம் வேணுமே என்று எண்ணித்தான் வசதியாய், பெரிசாய் இதைக் கட்டினார். இதில்தான் மனநிறைவோடு செத்தார். அவர் எந்த ஊருக்கும் போனதில்லை எங்க அப்பாவும் இங்கேயே இருந்து, பல வழிகளிலும் சம்பாத்தியம் பண்ணி, வயல்கள் வாங்கினார். அவர் கல்யாணம் விசேஷம் என்று சொந்தக்காரங்க வீட்டுக்குப் போய்வருவாரே தவிர, வீணாக ஊர் சுற்றியது கிடையாது. சந்தோஷமாகத்தான் செத்தாரு. நானும் இங்கேயே இருந்து, வயல்களை கவனிச்சுக்கிட்டு, நிம்மதியாக இருக்கேன். மனநிறைவோடு சாவேன்' என்று அவர் எப்போதாவது சொல்வது உண்டு.

அவருக்கு உள்ளூரிலேயே கல்யாணம் ஆயிற்று. அதனால் மாமனார் வீடு, அங்கே இங்கே என்று அயலூர் போக வேண்டிய அவசியம் தலைகாட்டாது போயிற்று. அந்த விஷயத்திலும் பிள்ளைக்கு ரொம்ப திருப்தியே.

அந்த ஊரிலேயே அவரைப்போன்ற நோக்கு பெற்றிருந்தவர்கள் வேறு சிலரும் இருந்திருக்கக்கூடும். இருந்தார்கள். அவர்கள் மூக்கபிள்ளைக்கு முன்பே தங்களது 'நெடும் பயண'த்தை மேற்கொண்டு விட்டார்கள். எனவே மூக்க பிள்ளையின் அபிப்பிராயம் அந்த ஊரின் புதிய தலைமுறையினருக்கு விசித்திரமானதாகவும், 'கிணற்றுத்தவளை மனோபாவம்' ஆகவும் ஒலித்தது.

முதலில், அவருடைய மகனுக்கே அது பிடிக்கவில்லை.

செல்லையா டவுன் பெரிய பள்ளிக்கூடத்தில் படித்தான். ஊரிலிருந்து ஆற்றங்கரைப் பாதையாக அநேக பையன்கள் போய்ப் படித்துவிட்டு வந்த பள்ளியில்தான் அவனும் படித்தான். ஆனால், இரண்டு மைல் நடந்து 'ரயில் கெடி'யை அடைந்து காத்திருந்து ரயில் வந்ததும் ஏறிப்போய், பிறகு சாயங்காலம் ரயிலில் வந்து இறங்கி, பழையபடி நடந்து, இருட்டுகிற சமயத்தில் வீடு வந்து சேர்ந்து கொண்டிருந்த சில பையன்களோடுதான் அவனும் போய்வந்தான்.

அவன் கெட்டிக்காரப் பையன். படித்து முன்னேற வேண்டும் என்ற ஆர்வம் மிகுதியாகப் பெற்றிருந்தான். அதனால் சிரமங்களைப் பொருட்படுத்தாது, படிப்பையே கருமமாக ஏற்று, அந்தக் கருமமே கண்ணாக இருந்தான்.

அவன் அம்மா பர்வதம் இருந்தவரை அப்படி நடந்தது. அவள் இறந்த பிறகு அவன் டவுனில், ஹாஸ்டலிலேயே தங்கிப் படிக்கும்படி மூக்கபிள்ளை ஏற்பாடு செய்துவிட்டார். விடுமுறை காலத்தில்தான் ஊருக்கு வருவான். அவனுக்குப் 'பொழுதே போகாது.' அந்த ஊரின் 'பின்தங்கிய நிலைமை' களும், அங்கு வசிப்பவர்களின் குறைபாடுகளும் அவனுக்கு மனக்கசப்பை உண்டாக்கி வந்தன.

அவன் கல்லூரியில் படித்துத் தேறி, உத்தியோகத்துக்கு வலை வீசி, ஒரு வேலையும் தேடிக்கொண்டான். சில வருடங்களுக்கு ஒருமுறை வெவ்வேறு ஊர்களுக்கு மாறுதல் அளிக்கும் ஒரு உத்தியோகம் அது. நல்ல சம்பளம் கிடைத்தது. ஊர் மாற்றங்கள் அவனுக்கு அலுப்புத் தரவில்லை. மகிழ்ச்சியே அளித்தது.

மூக்கபிள்ளை தான் அலுத்துக்கொள்வார்: 'இதென்ன பிழைப்பு! ஒரு இடத்திலே தங்கியிருக்க முடியாமல், அடிக்கடி குடிசையைத் தூக்கிக்கிட்டு, ஊர் ஊராக அலையிற வேலை! என்னமோ அவனுக்குப் புடிச்சிருக்கு. பின்னே நமக்கென்ன!'

அவர்கள் சமூக நியதிப்படி, பெண்ணைப் பெற்ற புண்ணியவான்கள் தேடிவந்தார்கள். 'பையன் பி. ஏ. படிச்சிருக்கான். நல்ல வேலை பார்க்கிறான். தங்கக் கம்பி; இடமும் நல்ல பெரிய இடம்' என்று நற்சான்றுகள் கூறி, 'நகை ஐயாயிரம் ரூபாய்; ரொக்கம் மூவாயிரம் தாறோம்; கல்யாணமும் நடத்திவிடுகிறோம்' என்று ஏலம் கூறிக் கொண்டு நெருக்கினார்கள். பிள்ளைவாள் பிகுப் பண்ணினார். அதனால் 'நகை ஏழாயிரம் ரூபாய், கையிலே ரொக்கமா ஐயாயிரம் தாரோம். கல்யாணத்தையும் சிறப்பா நடத்தி வைக்கிறோம். சீர்வகைகளையும் நிறையவே செய்வோம்' என்று வாக்களித்த இன்னொரு 'பெரிய இட'த்தின் மகளை

மூக்கபிள்ளை, மகன் செல்லையாவுக்கு வாழ்க்கைத் துணை ஆக்கினார். தமது கடமை முடிந்தது என்ற திருப்தியில் மிதந்து களித்தார்.

செல்லையாவின் மனைவியும் எஸ். எஸ். எல். சி. படித்தவள். நாகரிக நோக்கு கொண்டவள். அதனால் 'அந்தப் பட்டிக்காட்டுப்பய ஊருக்கு ஏன் போகணும்?' என்று நினைத்தாள். அவள் சொல்படி செல்லையா நடந்துகொண்டான். ஆகவே, புதுப்பட்டிக்கு அவர்கள் 'எப்பவாவது' வந்துபோவதுகூட, ஒன்றிரு வருடங்களுக்குப் பிறகு நின்றேவிட்டது.

அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்தன. 'பேரன் பேத்திகளைப் பார்க்க வரும்படி' மகன் தந்தைக்கு அவ்வப்போது எழுதிக்கொண்டுதான் இருந்தான்.

ஆனால் மூக்கபிள்ளைக்கு இந்த ஊரைவிட்டு அசைய மனம் இல்லை. 'கோயில் மாதிரி' அவருக்குத் தோன்றிய தனது வீட்டைவிட்டு வெளியே எழுந்தருள அவருடைய திருவுளம் இசையவில்லை. ஆகவே, வயல் சோலி, அது இது என்று ஏதேனும் காரணங்கள் கூறித் தட்டிக் கழித்துக் கொண்டிருந்தார். மகன் மருமகள் எல்லோரும் 'தூரா தொலைவில்' இருந்ததும் அவருக்குச் சௌகரியமாயிற்று. ஆறு மாதங்களுக்கு ஒரு தடவை, அறுப்பு முடிந்ததும், நெல்லை அவித்து, அரிசியாக்கி, மூட்டைகளாக லாரியில் ஏற்றி பத்திரமாக மகனுக்கு அனுப்பிவிடுவார். அதில் அவருக்கும் திருப்தி; மகனுக்குப் பெருமை; மருமகளுக்குச் சந்தோஷம்.

அநேக வருடங்களுக்குப் பிறகு, புதுப்பட்டிக்கு அருகில் உள்ள பெரிய நகரம் ஒன்றுக்கு மாறுதல் பெற்று, செல்லையா வந்து சேர்ந்தான். சௌகரியமான வீடும் கிடைத்திருந்தது. அவன் புதுப்பட்டி வந்து அப்பாவையும் நகருக்கு வருமாறு அழைத்தான், 'இங்கே தனியாக, சமையல்காரி சமையல் செய்து போட, உதவிக்கு ஆள் இல்லாமல் கஷ்டப் படுவானேன்? இத்தனை காலமும் இருந்தது சரிதான். இனிமேல் கொஞ்சம் வசதியாக, பேரன் பேத்திகளைக் கொஞ்சிக்

கொண்டு, ஓய்வாக இருக்கலாம் அல்லவா?' என்று சொன்னான்.

மூக்கபிள்ளை அதற்கு இணங்காமல் போகவே, 'சரி' உங்க இஷ்டம். இருந்தாலும் ஆசையாகக் கூப்பிடுறேன். ஒரு மாசத்துக்காவது அங்கே வந்து தங்கியிருங்கள். உங்களுக்கு எல்லா வசதிகளும் கிடைக்கும்படி நானும் ராசம் மாளும் கவனித்துக்கொள்கிறோம். குழந்தைகள் தாத்தா தாத்தா என்று உங்களைப் பார்க்கும் ஆவலில் இருக்கிறார்கள். நீங்கள் மறுக்கக்கூடாது' என்று கோரினான்.

பெரிய பிள்ளை யோசித்தார். பின்னர், 'பெரிய மனசு பண்ணி' இணங்கினார். ஒரு நாளும் குறித்து மகனை அனுப்பி வைத்தார்.

அதன்படியே மூக்கபிள்ளை நகரத்துக்கு, மகன் வீட்டுக்கு போய்ச் சேர்ந்தார்,

வீடு கலகலப்பாக இருந்தது. குழந்தைகள் ஏதோ பூதத்தைக் கண்டதுபோல் மிரண்டும் வெட்கப்பட்டும் ஒளிந்து கொண்டிருந்தார்கள்.

கொஞ்ச நேரத்திற்குத்தான் அப்படி. பிறகு அவர்களது இயல்பின்படி கத்திக் கூப்பாடு போட்டுக்கொண்டு, அங்கு மிங்கும் ஓடி ஆடினார்கள், குதித்தார்கள், பொருள்களைப் போட்டு உடைத்தார்கள். ஒருவரை ஒருவர் குறைகூறியும், அடித்தும், சண்டை முற்றியதும் அழுதும் பொழுதுபோக் கினார்கள். அம்மாக்காரி பிள்ளைகளை அடக்குகிறேன் என்று ஓயாமல் சத்தம் போட்டுக்கொண்டே இருந்தாள். எப்போதும் கர்ணகடூரமான ஓசைகளை எழுப்பிக்கொண் டிருப்பதில் அந்த வீட்டில் எல்லோருக்குமே உற்சாகம் அதிகம் என்று மூக்கபிள்ளைக்குத் தோன்றியது.

அவர் வெகுநேரம் வரை பொறுமையாக இருந்து பார்த் தார். வந்த அன்றைக்கே பிள்ளைகளைக் கண்டிக்க வேண்டாம் என்று எண்ணினார். வரவர 'அதுகள்' பிள்ளைகளாகத் தோன்றவில்லை அவருக்கு. குரங்குகளாகவே தோன்றினர். அவருக்கே பொறுமை போய்விட்டது. 'ஏ குரங்குகளா, ஏன்

இப்படிக் கத்திக் குதிச்சுக்கிட்டு கலாட்டா பண்ணுறீங்க? அமைதியா ஒரு இடத்திலே உட்கார்ந்து விளையாடுங்களேன்" என்று எரிந்து விழுந்தார்.

அப்புறம் அடிக்கடி அதட்டல்களும், போதனைகளும், கண்டனங்களும், குறைகூறல்களும் அவரிடமிருந்து சிதறிக் கொண்டிருந்தன.

பிள்ளைகள் அவற்றைப் பெரிதுபடுத்தவில்லை. அவர்கள் இஷ்டத்துக்கு, வழக்கம்போல், கூச்சலிட்டும் சண்டை போட்டும் அழுதும் அமர்க்களப்படுத்தினார்கள்.

'சே, இதென்ன வீடா இது! ஒரே காட்டுக் கூச்சலா இருக்கிறதே எப்ப பார்த்தாலும்!' என்று பெரியவர் அடிக்கடி அலுத்துக்கொள்ள நேரிட்டது.

வீட்டில் அமைதி இல்லை; கொஞ்சநேரம் வெளியிலே போய்வரலாம் என்று கிளம்பினார் மூக்கபிள்ளை.

தெருவில் எப்பவும் கூட்டம்தான். சிறு தெருவைக் கடந்து பெரிய தெருவில் அடியெடுத்து வைத்தால், உயிருக்கே ஆபத்து வந்துவிடும் போலிருந்தது. சைக்கிள்கள், மோட்டார்கள், பஸ்கள். சைக்கிள் ஓட்டுகிற பயல்கள் அவனவன் இஷ்டத்துக்குக் குறுக்கும் நெடுக்குமாகப் போறானுக. எந்தப் பக்கமிருந்து கார் வருமென்று தெரியவில்லை. எங்கே போனாலும், ஓரம் போ! ஏ, ஓரமாப் போ... மரியாதை தெரியாத பயல்கள்...ஒருவன், 'ஏ கெழவா, என்ன சாகணும்னு ஆசையா? அதுக்கு என் காருதானா அகப்பட்டது?' என்று சத்தம் போட்டான்.

இவ்விதம் பெரிய பிள்ளையின் எரிச்சலை அதிகப்படுத்தும் எத்தனையோ நிகழ்ச்சிகள். வெளியிலும், கூச்சல்களையும் ஓசைகளையும் கிளப்புவதில் ஆர்வம் உடையவர்களாகவே ஜனங்கள் காணப்பட்டார்கள். 'சே, இதுவும் ஒரு ஊரா!' என்று காறித் துப்பியது மூக்கபிள்ளையின் மனம்.

நகர மக்களின் நாகரிகமும், வாழ்க்கை முறைகளும் மூக்கபிள்ளைக்குச் சம்மதமாக இருக்கவில்லை. 'என்ன எழவு

நாகரிகமோ!" என்று அலுத்துக்கொண்டார் அவர். நகர நாகரிகப் பழக்க வழக்கங்கள் தன் மகன் வீட்டிலும் நிலையாக வேரூன்றி வளர்வதை அவர் ஒவ்வொரு கணமும் உணர்ந்தார்.

காலையில் எழுந்ததுமே பல் விளக்காமல், காப்பி குடிக்கும் நாகரிகம் அக்குடும்பத்தில் எல்லோரிடமும் படிந்திருந்தது. 'இது என்ன வழக்கம்! சீ, இது நல்லதில்லே!' என்று அவர் உபதேசித்தார்.

குழாய் தண்ணீரில் ஒன்றரை வாளி பிடித்து, குளித்தேன் என்று பெயர் பண்ணுவதும் அவருக்குச் சரிப்பட்டு வரவில்லை. ஐந்தாறு வாளிகள் தண்ணீர் பிடித்துக் காலி பண்ணினால், மருமகள் முணுமுணுத்தாள்.

அவர் காலையில் 'நீராகாரம்' கேட்கிறபோதும்; தோசை வேண்டாம், பழையச்சோறு வேண்டும் என்று கோருகிற போதும், அவள் முனகினாள். 'இங்கே பழையதும் கிடையாது, நீத்தண்ணியும் இல்லே' என்று அவள் சொல்வது அவருக்குச் சிடுசிடுப்பதுபோல் தோணும்.

முன்னிரவில் அவர் 'கோயிலுக்குப் போகலாம், வாங்க' என்று பேரன்களை அழைத்தபோது, 'நாங்க சினிமாவுக்கு போகப்போகிறோம், கோயில் என்ன கோயில்!' என்று அவர்கள் கூச்சலிட்டார்கள்.

இவ்வாறு, மூக்கபிள்ளைக்கும் பிந்திய தலைமுறையினருக்கும் ஒவ்வொரு சிறு விஷயத்திலும் அபிப்பிராய பேதம் எழுந்துகொண்டே இருந்தது. 'சே, நான் இங்கே வந்தது தப்பு. இங்கே அமைதியும் இல்லே; வசதிகளும் இல்லே. அதனால் மனசில் நிம்மதியும் சந்தோஷமும் இல்லே' என்று அவர் தனக்குத்தானே அநேக தடவைகள் சொல்லிக்கொண்டார்.

'விருந்தும் மருந்தும் மூணுநாள் என்பாக. இந்த நகர வாசத்தையும் மூணு நாளைக்கு மேலே என்றால் சகித்துக்கொண்டிருக்க முடியாது' என்று அவர் தீர்மானமாகக் கருதினார்.

ஆகவே, நான்காம் நாள் காலையில் மூக்கபிள்ளை புதுப்பட்டி என்கிற தனது சொர்க்கத்தை நாடிக் கிளம்பி விட்டார்.

'என்னப்பா நீங்க...இன்னும் ஒரு வாரமாவது... என்று இழுத்தான் மகன்.

'நல்லவேளை. பொசுபொசுப்பும், புழுபுழுப்பும் விட்டு வழியாகுது, எதுக்கெடுத்தாலும் நொள்ளாப்பு. இது சொத்தை, அது சொள்ளையின்னு வக்கணை கொழிச்சுக் கிட்டு...சீக்கிரம் கிளம்பினதே நல்லது' என்று மருமகள் மனசினுள் கருதினாள். ஆயினும் வாய் வார்த்தையாக 'என்ன மாமா இப்படி, வந்த நாலாம் நாளே புறப்பட்டுட்டீங்களே?' என்று குறைபட்டுக் கொண்டாள்.

பேரன்கள் 'டா-டா, பை-பை, சீரியோ!' என்று கூச்சலிட்டு வழியனுப்பினார்கள்.

'மரியாதை தெரியுதா பாரேன்! வணக்கம், போய் வாங்கயின்னு சொல்லக் கத்துக்கிடலே. என்னென்னவோ கத்துறாங்க!' என்று மூக்கபிள்ளையின் மனம் புலம்பியது. புதுப்பட்டியை நினைத்துக்கொண்டது. 'என்ன அழகான அமைதியான ஊரு! அதை விட்டுப்போட்டு இங்கே வந்தேனே!' என்று அனுதாபப்பட்டது.

அவர் கால்கள் வேகமாக நடக்கலாயின.

'எழுத்தாளன்' மலர் 1973

# அவள் சொர்க்கம்

செல்லம்மாளுக்கு என்ன வயசு இருக்கும் என்பது அந்த ஊரில் யாருக்குமே தெரியாது. அவள் வயசு அவளுக்கே தெரியாது. அதைத் தெளிவுபடுத்தக்கூடிய ஜாதகமோ, குறிப்போ எதுவுமே கிடையாது.

அவள் வயசை திட்டமாகத் தெரிந்து வைத்திருந்தவர் ஒருவர்தான்; அவளுடைய அண்ணாச்சி பரமசிவம் பிள்ளை. ஆனால், அந்த விஷயத்தை எதிலும் குறித்து வைக்காமலே அவர் இறந்து போய்விட்டார். அவர் போயும் வருஷங்கள் பல ஆகிவிட்டன. அந்தக் கணக்கும் அவளுக்கு மறந்து விட்டது.

செல்லம்மாளுக்கு வயசு எழுபது இருக்கலாம், எண்பதாகவே இருந்து விடலாம் அல்லது, எழுபதுக்கும் எண்பதுக்கும் இடைப்பட்ட எதுவாக வேண்டுமாயினும் இருக்கலாம். அது அவளுக்கே நிச்சயமாகத் தெரியாததனால், 'ஏளா, உனக்கு வயசு என்ன இருக்கும்?' என்று அவளிடம் யாராவது அவ்வப்போது விசாரிக்கிறபோது, அந்த நேரத்தில் தனக்குத் தோன்றியதை அவள் சொல்லி வைப்பாள்; எழுபதுக்கும் எண்பதுக்கும் இடைப்பட்ட ஏதாவது ஒரு எண்ணாகத்தான் இருக்கும் அது.

அவள் இப்படி ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு எண்ணைச் சொல்வதனால், தனது வயசு விஷயத்தில் செல்லம்மா பொய் சொல்கிறாள் என்று நினைக்கக் கூடாது. அப்படி நினைத்தால் அது முழுத் தவறுதான். எழுத்து—படிப்பு வாசனை இல்லாமல், ஞாபகசக்தியும் திடமாக இராது. தங்கள் வயசைக் கூடச் சரியாகத் தெரிந்துகொள்ள இயலாத நிலையிலே இன்னும் எத்தனையோ பேர்—குறைந்த வயசுக்காரர்கள் கூட—இருக்கிறார்கள். ஆகவே, வயசு முதிர்ந்து, தள்ளாமை

யில், 'பொழுது எப்ப விடியும்? நாள் எப்ப கழியும்?' என்று காலத்தைச் சுமையாகத் தாங்கிக்கொண்டு, செயல் இழந்து—செயல் திறம் எதுவுமற்று—எப்படியோ வாழ்ந்துகொண்டிருக்கிற பென்னம் பெரிய மனுஷியை 'பொய்சொல்லி' என்று மதிப்பிடவே கூடாது.

கைலாசத்தின் நினைப்பு அதுதான்; அவன் அவளுக்கு ஏதோ ஒரு வகையில் உறவு. அவள் முதுமையில் அவனுக்கு ஒரு மரியாதை.

பொதுவாக எல்லோருக்கும் செல்லம்மாளிடம் தனி மதிப்பும் மரியாதையும் உண்டு. அவள் ரொம்ப வயசான பெரிய மனுஷி. 'கோயில் மாதிரி' அவளிடம் பணிவும் பக்தியும் காட்ட வேண்டும் என்றொரு நினைப்பு. இதுபோக, அவள் பெரிய இடத்திலே பிறந்து வளர்ந்தவள் என்பதற்காக ஒரு மரியாதை. அவள் கல்யாணமாகி வாழவந்த வீடும் குடும்பமும் அந்த ஊரிலே பெரியவை, கௌரவம் உடையவை என்பதனால் மேலும் அதிகமான மதிப்பு. அவள் கணவன் செயலாக வாழ்ந்து, 'செயம் செயம் என்று கட்டி அடித்தவர்' என்ற பெருமை பெற்றுத் தந்த தனி மதிப்பு—இப்படியாக அந்த ஊரார் அவளை கௌரவித்துக் கொண்டுதான் இருந்தார்கள்.

ஆனாலும் செல்லம்மாளுக்கு அந்த ஊர் மீது நல்ல அபிப்பிராயம் கிடையாது. 'இதுவும் ஒரு ஊரா?'... 'ஒரு ஊரோடு சேர்த்தியா இது!' என்று அவள் அடிக்கடி சொல்லுவாள். அங்கு வசிக்கிற—வசித்த—மனிதர்களைப் பற்றியும் அவள் பெருமையாகப் பேசமாட்டாள். 'இவனும் மனுஷனா?'... 'சீ இவங்களும் மனுசங்க மாதிரி!' என்று கசப்புடன் அவ்வப்போது குறிப்பிடுவாள்.

இதற்காக அந்தஊர்க்காரர்கள் அவளிடம் சண்டைக்குப் போவது கிடையாது. 'கோயிலு போல இருக்கிற ஒரு பெரியவள்தானே சொல்கிறா? சொல்லி விட்டுப் போகட்டுமே!' என்று பேசாமல் இருந்துவிடுவார்கள்.

ஆனால், செல்லம்மா அந்த ஊரைக் குறைவாகப் பேசுவதோடு திருப்தி அடைவதில்லை. 'எங்க ஊருலே அப்படி .. எங்க ஊரிலே இது என்ன மாதிரி நடக்கும்' என்று பேச்சுக்குப் பேச்சு புகழுரை தூவிக்கொண்டே இருப்பாள்.

அவள் வசித்து வந்த கானப்பாடி என்கிற ஊர் அவளுக்கு எவ்வளவுக்கு எவ்வளவு மட்டமானதாகத் தோன்றியதோ அவ்வளவுக்கு உயர்ந்ததாக, குறைகள் எதுவும் இல்லாததாக, வளங்களும் நலன்களும் நிறைந்ததாக இருந்தது, அவள் பிறந்த ஊரான நல்லூர்—இதுதான் அவள் எண்ணம். அவள் பேச்சில் தீட்ட விரும்பிய சித்திரமும் இதுவே.

இது கானப்பாடிக்காரர்களுக்குப் பிடிப்பதில்லை; அவர்களுக்கு மனவருத்தமும் தந்தது. அவளோடு பேசிக்கொண்டிருக்கிறபோது, இதற்காகக் கோபப்படாமலும், எதிர்த்துப் பேசாமலும் இருந்துவிட்டாலும், பிறகு தங்களுக்குள் வருத்தப்பட்டு, குறை கூறிக்கொள்வார்கள். சிலர் அவளோடு சேர்ந்து பேசுவதுபோல் பேசி, அவளிடமே கிண்டலாகவும் கேலியாகவும் அவளது ஊரைக் குறித்து ஏதாவது சொல்லி வைப்பார்கள். அவள் பாவம், அவர்களுடைய குறும்புப் பேச்சைப் புரிந்துகொள்ளாமல் மேலும் மேலும் நல்லூர் புராணத்தை வர்ணித்துக்கொண்டிருப்பாள்.

கானப்பாடிக் கோயிலில் திருவிழா நடந்துகொண்டிருந்தது. ஏதோ பேருக்கு நடத்துகிற திருவிழாதான். சப்பரம் என்று ஒன்றைத் தூக்கிக்கொண்டு, கோயில் சிப்பந்திகளும் பட்டரும் முன்னே செல்ல, கூலிக்கு அமர்த்தப் பட்ட ஆட்கள் குடுகுடு என ஓடுவார்கள். பூ அலங்காரம் நிறைய இராது; சும்மா இரண்டு சரங்கள் சாமி கழுத்தில் கிடக்கும். 'முன்னொரு காலத்தில்' சிறப்பாக எல்லாம் நடந்திருக்கும். இப்பொழுது 'அப்படி அப்படித்தான்.' ஊரே அழுதுவடிகிறபோது, தூங்கி வழியும் கோயிலில் உறங்கிக் கிடக்கும் சாமிக்கு இவ்வளவாவது நடைபெறுகிறதே என்று உள்ளூர் பக்தர்கள் திருப்திப்பட்டுக்கொள்வார்கள்.

ஆனால், செல்லம்மா அவ்வாறு திருப்தி அடையவில்லை. 'இப்படித் திருவிழா நடத்துவதைவிட, சாமியை சும்மா கோயிலிலேயே இருக்கும்படி விட்டு விடலாமே!' என்றாள். அத்துடன் வாயை மூடிக்கொண்டாளா? வழக்கம்போல் 'எங்க ஊரிலே பார்க்கணுமே ஒவ்வொரு திருவிழாவையும்' என்று நீட்டி நீட்டிப் பேசலானாள்.

'இந்த ஊரிலே சாமிக்கு பூவுக்குக்கூடப் பஞ்சம் வந்துட்டுதே! பாவி மட்டை ஊரிலே அரளிப்பூவும் மஞ் சணத்தி இலையும் கூடவா இல்லாமப் போச்சு? அதுகளைக் கட்டி சாமி கழுத்து நிறையப் போட்டால் என்னவாம்? எங்க ஊரிலே இப்படித் தரித்திரம் கொண்டாட மாட்டோம் அம்மா. கோயில் பிராகாரத்திலே நந்தவனம் இருக்கு. ரோசாப்பூ மாதிரி அடுக்கு அரளி—ஒவ்வொரு பூவும் எவ் வளவு அழகா, பெரிசா இருக்கும் தெரியுமா?—பிச்சிப் பூ, இருவாச்சி, ரோசா—எல்லாப்பூக்களும் எப்பவும் கிடைக்கும். சாமிக்கு நிறைய மாலைகள் போட்டு, அலங்காரம் செஞ்சு... இங்கே தீவட்டிக்குக்கூட தட்டுப்பாடு வந்துட்டுதே. ஒரு தீவட்டி ஒரு அரிக்கன் லாந்தல், ஒரு பெட்ரோமாக்சு லயிட்டு இந்த மூணும் தானே சப்பரத்து முன்னாலே போகுது? எங்க ஊரிலே சாமி புறப்பட்டா—ஏ அம்மா, ரெண்டு கண்ணு கொண்டு பாக்க முடியாது. எத்தனை தீவட்டிக! பெரிய சக்கரத் தீவட்டி வேறே, எவ்வளவு கியாஸ் லயிட்டுக!....'

இப்படி வர்ணித்து, அந்தக் காட்சியை மனக் கண்ணால் கண்டு, அகம் மகிழ்ந்து போனாள் அவள். ஒவ்வொரு தடவை யும் இப்படித்தான். கல்யாணம் நடந்தாலும் சரி, இழவு விழுந்தாலும் சரி அல்லது எந்த நிகழ்ச்சியாயினும் சரியே—அவை செல்லம்மாளைத் திருப்திப்படுத்தும் விதத்தில் அமை வது கிடையாது. அமையவும் முடியாது.

விவசாய விஷயம், வேலைக்காரர் பிரச்சினை. வீட்டு வசதி, கடைச் சாமான்கள், காய்கறிகளின் தரம்—இப்படி எந்தப் பேச்சு வந்தாலும் செல்லம்மா 'எங்க ஊரிலே' என்று ஆரம்பித்து, உயர்வாகப் பேசாமல் இருக்கமாட்டாள். அவள் பேச்சின்படி பார்க்கப்போனால், அந்த ஊரில்

எல்லாருக்கும் எல்லாம் தெரியும்: எல்லாம் முதல் முதலாக அங்கு வந்து, அனுபவிக்கப்பட்டுவிட்டன என்றுதான் கருத வேண்டியிருக்கும். மற்றவர்கள் நம்புகிறார்களா, நம்புவார்களா என்று எண்ணாமலே, செல்லம்மா தனக்குத் தோன்றுவதையெல்லாம் தயங்காது சொல்லிச் சொல்லிப் பழகிவிட்டாள். தான் சொல்வதை அவள் நம்பவும் செய்தாள்.

'இந்த ஊர் பண்ணையார் தோட்டத்தில் தக்காளி பயிர் செய்திருக்கிறாங்க. ஒவ்வொரு பழம் எவ்வளவு பெரிசாக இருக்கு தெரியுமா?' என்று கைலாசம் அவளிடம் சொன்னான்.

'இதிலே ஆச்சர்யப்படறதுக்கு என்ன இருக்கு? நான் எங்க ஊரிலே வீட்டோடு இருக்கையிலே தோட்டத்திலே தக்காளி நட்டு வளர்த்தேன். ஒவ்வொரு செடியிலும் ஏகப்பட்ட காயி காய்ச்சுது. ஒவ்வொரு காயும் ஒரு சொம்பு தண்டி இருந்துதே...' என்றாள் அவள்.

அவள் சின்னப் பெண்ணாக வீட்டோடு இருந்த காலத்தில் அந்த வட்டாரத்திலே ஒரு இடத்தில்கூட தக்காளிப் பயிர் எட்டிப் பார்த்ததில்லை; அவள் ஊரில் அது வளர்ந்திருக்கவே முடியாது என்று கைலாசத்துக்கு நிச்சயமாக மனசில் பட்டது, ஆயினும் அவன் அவளை மறுத்துப் பேசவில்லை. 'நீ ஏன் இப்படிப் பொய் சொல்கிறே?' என்று அவளிடம் கேட்கத் துணியவில்லை அவன். எழுபதுக்கும் எண்பதுக்கும் இடைப்பட்ட ஏதோ ஒரு வயசை எட்டிப் பிடித்து, வாழ்க்கைப் பாதையில் தன்னந் தனியாக நடந்து, காலத்தைச் சுமையாகக் கொண்டு தள்ளாடிச் செல்கிற அந்தப் பெரிய மனுஷியை 'ஒரு பொய் சொல்லி' என்று மதிப்பிடுவதற்கு அவன் மனம் இடம் தரவேயில்லை.

செல்லம்மா வெவ்வேறு சமயங்களிலும், வெவ்வேறு நபர்களிடமும் சொல்லி வந்த—ஓயாது சொல்லிக்கொண்டிருந்த—நல்லூர் பெருமைகளைக் கைலாசம் கேட்டு வந்திருந்ததனால், அவனுள்ளத்தில் அவனை அறியாமலே நல்லூர் மீது ஒரு பற்றுதல் ஏற்பட்டுவிட்டது. ஆச்சி சொல்கிற அளவுக்கு இல்லாதுபோனாலும், ஓரளவுக்கேனும்

அது பசுமையான, வளமான, நயமான, நலமான சூழ்நிலையாக இருக்கலாம் என்று அவன் எண்ணினான். ஆச்சியின் மனசில் நிலையான உயர்ந்த அந்தஸ்தைப் பெற்றிருந்த நல்லூரரை ஒரு தடவையாவது பார்த்துவிட வேண்டியதுதான் என்றொரு ஆசையையும் அவன் வளர்த்து வந்தான். அது நிறைவேறுவதற்கு உரிய 'வேளையும் பொழுதும்' ஒத்து வராமல், காலம் ஓடிக்கொண்டிருந்தது.

திடீரென்று, அவன் எதிர்பாராத ஒரு சமயத்தில், அந்த 'வேளை' அவனை நெருங்கியது. எத்தகைய விசித்திரமான, வேதனைமயமான சந்தர்ப்பம் அது!

ஒருநாள், கைலாசம் செல்லம்மாளை ஊருக்கு வெளியே ரஸ்தாவில் சந்தித்தான். 'ஆச்சி இந்தப் பக்கமெல்லாம் வரமாட்டாளே? ஏது இன்னைக்கு இப்படி...' என்று அவன் மனம் குறுகுறுத்தது. அவளை அணுகி, 'என்ன ஆச்சி, ஏது இவ்வளவுதூரம்?' என்று பரிவுடன் விசாரித்தான்.

அவள் குறைகூறும் குரலில் பேசினாள்: 'எனக்கு இந்த ஊரிலே என்ன இருக்கு? நான் எங்க ஊருக்குப் போறேன். சாகிற வரை அங்கே எங்கியாவது ஒரு திண்ணையிலேயோ, குச்சிலேயோ விழுந்துகிடந்தால் போச்சு. இல்லேன்னு சொன்னா, கோயில் மண்டபம் இருக்கவே இருக்கு!'

'ஏன் ஆச்சி, நீ இப்படிப் பேசும்படியா என்ன நடந்தது? நீ ஏன் வீட்டைவிட்டு ஊரை விட்டுப் போகணும்? ராசாவுக்குத் தெரியுமா?' என்று கைலாசம் கேள்விகளை அடுக்கினான்.

'எனக்கு வீடும் இல்லே. ஊரும் இல்லே. நான் பிறந்து வளர்ந்த ஊருதான் எங்க ஊரு. அங்கேதான் நான் சாகணும்' என்று சொன்ன முதியவள் கசந்துகொண்டாள்: 'ராசா! ஊம்ங்! வீட்டுக்கு ராணி அவன் பெண்டாட்டிதான். பெண்டாட்டியாத்தா பெரியாத்தான்னு, அவள் சொல்லைக் கேட்டு நடக்கிறவன் என்னை ஏன் மதிக்கப் போறான்?'

கைலாசம் அவள் கையைப் பிடித்து, 'வா ஆச்சி. வீட்டுக்குப் போகலாம். ராசாகிட்டே நான் விசாரிக்கிறேன்'

என்று சொல்லவும், அவளுக்குக் கோபம் வந்துவிட்டது. 'சீ போ!' என்று சீறிக் கையை உதறினாள். 'எனக்கு இந்த ஊரிலே ஒட்டும் இல்லே, உறவும் இல்லே. நான் எங்க ஊருக்குப் போறேன்' என்று கூறி முன்னே நடந்தாள்.

என்ன செய்வது என்று புரியாமல் திகைத்து நின்ற அவன் பார்வையில், சிறிது தொலைவில் வந்த ராசா அங்கேயே நின்று தன்னை அழைப்பது பட்டது. கைலாசம் அவனிடம் போனான்.

'அம்மாவுக்கு கொஞ்ச நாளாகவே மனசு சரியாயில்லே. இரண்டு நாளா வீட்டிலே ஒரே ரகளை. இன்னிக்கு ரொம்ப முத்திட்டுது. நான் எங்க ஊருக்குப் போறேன்னு கிளம் பிட்டா. அங்கே சோலையும் சுனையும் குளுகுளுன்னு இருக் கிறமாதிரித்தான்! பாலும் தேனும் பெருகி ஓடுகிற மாதிரித் தான்! போகட்டும், போகட்டும். அங்கே இருக்கற நிலே மையை நேரிலே தெரிஞ்சுக்கட்டுமே என்று செல்லம்மாளின் மகன் ராசா புலம்பினான். பிறகு, 'கைலாசம், நீ எனக்கு ஒரு உதவி செய்யணும். அம்மா தனியாப் பயணம் போக முடியாது. நீயும் அவளோடு போயிட்டு வா. இந்தா ரூபாய்' என்று பத்து ரூபாயை அவனிடம் கொடுத்தான்.

'ரூபாய் எதுக்கு? என் கிட்டே பணம் இருக்கு' என்றான் கைலாசம்.

'இதுவும் இருக்கட்டுமே' என்று சொல்லி அவனை அனுப்பிவைத்தான் ராசா.

மெதுவாக நடந்துகொண்டிருந்த செல்லம்மாளை எட்டிப் பிடிக்கக் கைலாசத்துக்கு நேரமோ சிரமமோ தேவைப்பட வில்லே. அவளிடம் 'நானும் கூட வந்து, உன்னை ரயிலில் ஏற்றி விடுகிறேன்...டிக்கட் எடுத்துக்கொண்டு, ரயிலில் ஏறுவது உனக்குச் சிரமமாக இருக்குமே?' என்று சொன்னான்.

அவள் அலட்சியமாகச் சிரித்தாள். 'என்ன சிரமம்? நான் ஆத்தங்கரை வழியாகவே எவ்வளவு தூரம் நடந்திருக் கேன்! எங்க ஊரிலேயிருந்து ரயில் கெடிக்கு அஞ்சு மைலு.

அந்தப் பாதையைக்கூட நடந்தே கடந்திருக்கேன்!' என்றாள்.

'அப்போ உனக்கு இவ்வளவு வயசு ஆகியிருக்காதே! உடம்பிலே பலம் இருந்திருக்கும்' என்று அவன் கூறவும், அவள் ரோஷத்துடன் 'இப்பவும் எதுவும் குறைஞ்சு போகலே' என்றாள்.

தனது பிறந்த வீட்டைப் பற்றியும், தான் வளர்ந்த நல்லூர் பற்றியும், தன் உறவினர் பற்றியும் அவள் பெருமை பெருமையாகப் பேசியவாறே நடந்தாள். ரயிலில் போகிற போதும் அந்தப் பெருமைகளையே கூறிக்கொண்டிருந்தாள்.

கைலாசம், வழக்கம்போல் பொறுமையாய்க் கேட்டு வந்தான். தாங்கள் பிறந்த வீடும், 'கன்னியராய்க் கனவுகள் கண்டு' காலம் கழித்த இடமும் பெண்களுக்கு எப்பொழுதும் பெருமைக்குரிய விஷயங்களாகவே இருக்கின்றன. அநேகருக்கு அந்தப் பெருமை அளவுக்கு அதிகமாக இருந்து விடுகிறது. பொதுவாகவே, பெண்கள் தாங்கள் பிறந்த வீட்டைச் சேர்ந்தவர்களையும், அவ்வூர்க்காரர்களையும் உயர்வாகக் கருதுவது இயல்பாக இருக்கிறது. பல பெண்களிடம் இந்த உணர்ச்சி அளவில் பெரிதாகி வளர்கிறது. அவர்கள் தாங்கள் வாழ வந்த இடத்தையும் அங்கே இருப்பவர்களையும் மட்டமாக மதிப்பதும், குறைவாகப் பேசுவதும் சுபாவமாகி விடுகிறது. செல்லம்மா ஆச்சியும் இந்த ரகத்தைச் சேர்ந்தவள்தான்—இப்படி எண்ணினான் கைலாசம்.

'நீ ஏன் என் கூடவே வாறே?' என்று செல்லம்மா அவனிடம் கேட்டாள்.

'உங்க ஊரைப் பார்க்கணுமின்னு எனக்கு ரொம்ப நாளாவே ஆசை. இப்போ உன் கூடவே வந்து பார்ப்பது விசேஷம் இல்லியா? அதனாலே தான்' என்றான் அவன்.

அவள் அவன் முகத்தைப் பார்த்தாள். ஒன்றும் பேசவில்லை. தனக்குத் துணையாக அவன் வருவது நல்லதுதான் என்று அவள் எண்ணியிருக்க வேண்டும். இருந்தாலும் அவள் சுபாவம் சும்மா இருக்கவில்லை!

'ரயிலடியிலே மூக்கத்தேவன் வண்டி காத்துக் கிடக்கும். என்னைக் கண்டதுமே, 'ஆச்சி வாங்க, ஆச்சி வாங்க'ன்னு ஓடி வருவான். என் கிட்டே காசு கூடக் கேட்கமாட்டான். 'வண்டி தயாரா இருக்கு'ம்பான்...'—இந்த விதமாகக் கனவை—அல்லது முன்னொரு காலத்தில் நிகழ்ந்ததன் நினைவை—அவள் சொல்லாக்கி மகிழ்ந்தாள்.

அவர்கள் ரயிலை விட்டு இறங்கும்போது நடுப்பகல் மணி 12.10. வெயில் கடுமையாகக் காய்ந்துகொண்டிருந்தது. சுற்றிலும் வறண்ட பொட்டல் காடு. அது ஒரு காட்டுப்புற ஸ்டேஷன். இங்கிருந்து சில மைல் தூரம் போய்த்தான் எந்த ஊரையும் அடைய வேண்டும். நல்லூரைச் சேர ஐந்து மைல் கடக்க வேண்டும்.

பஸ் போக்குவரத்து சிலந்தி வலைபோல் சகலவிதமான ஊர்களையும் தொட்டுப் பரவிக்கிடக்கிற இந்த நாட்களிலே கூட நல்லூருக்கு நேரடியான பஸ் தொடர்பு கிடையாது; வேறு எங்கோ போகும் 'ரூட் பஸ்'ஸில் இடம் பிடித்து, நாலாவது மைலில் இறங்கி, ஒரு மைல் தூரம் நடந்தே தீர வேண்டும் என்பதை அறிந்ததும் கைலாசத்துக்குப் பகீர் என்றது. 'ஒரு மணிக்குத்தான் பஸ் வரும்' என்று கேள்விப் பட்டதும் அவன் குழப்பம் அதிகரித்தது.

அதுவரை என்ன செய்வது? சாப்பாடு? குடிக்கக்கூட நல்ல தண்ணீர் கிடைக்காத இடமாக இருந்தது அது. ஸ்டேஷனில், ஒரு தகர டப்பாவில் வைத்திருந்த 'குடி தண்ணீர்' வெயிலில் கொதிப்பேறியிருந்தது. 'அதைக் குடித்தால் தாகம் தணியாது; தொண்டை கட்டிக்கொள்ளும்' என்று செல்லம்மா சொன்னாள்.

அங்கு வண்டி எதுவும் கண்ணில் படவேயில்லை. 'இப்ப வெல்லாம் வாடகை வண்டிங்க ஸ்டேஷனுக்கு வர்ரதே யில்லே. முன்னாடியே சொந்தக்காரங்களுக்குக் கடுதாசி போட்டிருக்கணும். அவங்க ரயிலுக்கு வண்டி கொண்டு வருவாங்க' என்று ஒருவன் சொன்னான். 'இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே தான் காரு வந்திடுமே!' என்றும் தைரியம் கூறினான்.

'அதுவரை இங்கியே காத்துக்கிடப்பானேன்? மலையாள ஓடு போட்டிருக்கு, வெக்கை ஜாஸ்தி. இங்கே உக்காந்து கிடக்கறதைவிட, மெதுமெதுவா நடந்தே போயிடலாம்' என்று செல்லம்மா சொன்னாள். கடுமையான வெயிலில், நிழலே இல்லாத பாதையில், வெறுங் காலோடு நடக்க முடியாது என்று கைலாசம் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் அவள் பிடிவாதமாக நடக்கத் தொடங்கினாள்.

வெயில் தலையைத் தீய்த்தது. புழுதிமண் ரஸ்தா கால்களைப் 'பதம் பார்த்தது.' கானல் அலை அலையாய்ப் பறந்து கொண்டிருந்தது. தள்ளாமை, பசிக்கிறக்கம் எல்லாம் கூடி அவளைத் தகித்தன. அவளுக்குக் கண்கள் சரியாகத் தெரியவில்லை. 'இங்கே மரநிழல் கூட இல்லியே!' என்று முனகினாள் அவள்.

அங்கங்கே சிற்சில முள் மரங்களும், ஒற்றைப் பனைகளும் தான் நின்றன.

செல்லம்மாவினால் நடக்க முடியாது என்று நிச்சயமானதும், கைலாசம் அவளை மெதுவாகத் தாங்கி, ஒரு பனை மரத்தடியில் படிந்திருந்த சிறு நிழலில் கொண்டு சேர்த்தான். அவள் அங்கேயே உட்கார்ந்துவிட்டாள்.

'ரொம்ப ரொம்ப நேரமாக் காத்திருக்கிறோமே' என்று எண்ணத் தூண்டிய அளவு காலம் ஊர்ந்து நகர்ந்த பிறகு, பஸ் வந்தது. இந்த இடத்தில் நிறுத்துவானோ, மாட்டானோ என்ற சந்தேகம் கைலாசத்துக்கு.

பஸ்ஸில் கூட்டம் எதுவுமில்லை. இடம் நிறைய இருந்தது. அதனால்தானோ என்னவோ, அவன் கையைக் காட்டியதும், டிரைவர் பஸ்ஸை நிறுத்திவிட்டார். அவன் சிரமத்துடன் ஆச்சியை பஸ்ஸில் ஏற்றினான். அவள் ஒரு ஸீட்டில் சோர்ந்து முடங்கிப் படுத்துக்கொண்டாள்.

பஸ் ஓடிய பாதை வறண்ட பாலை நிலம் போல் தானிருந்தது. 'இந்த வழியிலே இவ நடக்கவா? சுருண்டு விழுந்திடுவா' என்று கைலாசம் எண்ணினான். 'இவளுக்கு ஏன் இந்த வம்பு? உள்ளதைத் தின்னுக்கிட்டு வீட்டோடு

கிடக்கிறதுக்கு இல்லாமே?' என்று அவன் மனம் முணு முணுத்தது.

இறங்க வேண்டிய இடம் வந்ததும் கைலாசம் செல்லம்மாளை மெதுவாக பஸ்ஸிலிருந்து பிடித்து இறக்கினான்.

அந்த இடம் வெறிச்சோடிக் கிடந்தது. நடக்க வேண்டியதுதான்; வேறு வழி இல்லை. 'ஆச்சி!' என்று தயக்கத்துடன் அவள் முகத்தைப் பார்த்தான் அவன்.

'உம். எங்க ஊரு இன்னும் கொஞ்ச தூரத்திலேதான். நடந்து போயிடலாம்' என்று, தலைமீது சேலை முந்தானையைப் போட்டுக்கொண்டு நடக்கலானாள் அவள். ஊரை அணுகிவிட்ட உற்சாகம் அவளிடம் காணப்பட்டது.

வழியில் ஒரு சிறு கடை தென்பட்டது. அதில் பசியைத் தீர்க்கக்கூடிய உணவு வகை இல்லாது போயினும், வாழைப் பழமும் வேர்க்கடலையும் சோடாவும் கிடைத்தன. கைலாசம் திருப்தி அடைந்தான். செல்லம்மா இரண்டு பழம் மட்டும் போதும் என்று சொல்லிவிட்டாள்.

வேர்த்து விறுவிறுத்து அவர்கள் ஊர் எல்லையை அடைந்தபோது இரண்டு மணிக்கு மேலேயே இருக்கும். 'நான் இந்த அம்மன் கோயில் மண்டபத்தில் இருக்கேன். நீ நடுத்தெருவுக்குப் போயி, மஞ்சக் காவி அடிச்ச பெரிய வீடு ஒண்ணு இருக்கும். அங்கே எங்க பெரியம்மை மகன் பாண்டியன் பிள்ளை இருப்பாரு, அவரை உங்க அக்கா கூப்பிடுறாள்னு சொல்லி, கோயில் திறவுகோலையும் எடுத்துக்கிட்டு வரச் சொல்லு. ஒரு தம்ளரிலே பாலும், ஒரு செம்பிலே தண்ணீயும் கொண்டுவரச் சொல்லு' என்று செல்லம்மா அவனிடம் கூறினாள்.

அவன் நடந்தான்.

தமிழ் நாட்டின் தெற்குக் கோடியில் உள்ள, வறுமை கொலுவிருக்கும் பலப்பல குக்கிராமங்களைப் போல்தான் அந்த ஊரும் இருந்தது. சில வீடுகள் இடிந்து பாழடைந்து

காணப்பட்டன; இன்னும் சில இடிந்துவிழத் தயாராக நின்றன. கோயிலும் விழிப்புடன் காட்சி தரவில்லை. கோயில் தேர் கறையான் பற்றி, கவனிப்பாரற்றுச் சிதைவுற்று நின்றது. தெப்பக்குளம் பாசி பிடித்த அழுக்கு நீருடன் நாறிக் கிடந்தது. மேலத் தெரு, நடுத்தெரு, கீழத் தெரு என்று பெயர் பெற்றிருந்தவை ஒழுங்கான தெருக்களாகவே இல்லை.

'தெப்பக்குளத்தில் குளிப்பது பற்றியும், கோயில் பெருமை பற்றியும் ஆச்சி எவ்வளவோ சொன்னாளே!' என்று கைலாசம் எண்ணினான். 'இந்த ஊரைப் பற்றியும்தான்!' என்றது அவன் மனம் 'இதைவிட கானப்பாடி எவ்வளவோ பெரியது. வசதிகள் உடையது...'—அவன் உள்ளம் எடை போட்டுக்கொண்டிருந்தது.

பாண்டியன் பிள்ளை வீட்டில்தான் இருந்தார். அவருக்கு ஐம்பது வயசுக்கு அதிகமாகவே இருக்கும் என்று தோன்றியது. கைலாசத்தைக் கண்டதும், யார்—என்ன என்று விசாரித்தார். அவன் விஷயத்தைச் சொன்னான்.

'அக்கா இங்கியா வந்திருக்கா? ஏன் வீட்டுக்கு வரலே?' என்று பதட்டம் காட்டினார் அவர்.

'அவளால் நடக்க முடியலே, கோயிலில் இருக்கிறா. நீங்க பாலும், கோயில் திறவுகோலும் எடுத்துக்கிட்டு...'

அவர் வறண்ட சிரிப்பு சிரித்தார். 'இந்த ஊரிலே இந்த நேரத்திலே பாலுக்கு எங்கே போறது? நல்ல காலத்திலேயே பாலு ஒழுங்காக் கிடைக்காது. பக்கத்து ஊருக்குப் போயி வாங்கியாரணும். சாயங்காலம் ஆறு மணிக்குமேல் தான் பாலைப் பார்க்க முடியும்' என்றார். 'இருக்கட்டும், கடுங் காப்பி போட்டு எடுத்துக்கிட்டுப் போகலாம்...கொஞ்ச நேரம் திண்ணையிலே இரியும், தம்பி' என்று கைலாசத்திடம் சொன்னார். தலையைச் சொறிந்தார்.

'அக்கா ஏன் இப்ப திடீர்னு புறப்பட்டு வந்தா? தள்ளாத வயசிலே? ஊம்ங்... அவ எப்பவும் பழைய காலத்தையே மனசிலே வச்சுக்கிட்டு இருக்கிறா. ஊரும் காலமும் ரொம்ப

மாறிப் போச்சு. இந்த ஊரு குட்டிச் சுவராயிக்கிட்டு வருது. கிழடு கட்டைகள் தான் வேறே வழியில்லாம இங்கே கிடக்குதுக. இளவட்டங்க எல்லாம் டவுனு, பட்டண மின்னு எங்கெங்கியோ போயிட்டுதுக. இந்தப் பட்டிக் காட்டிலே, இருக்கிற ஏழெட்டு வீடுகளுக்குள்ளேயே மூணு கட்சி, 'உன்னை எனக்குப் பிடிக்காது. என்னை உனக்குப் பிடிக்காது; அவன் வீட்டை எங்க ரெண்டு பேருக்குமே பிடிக்காது'னு! கோயில் விஷயத்திலும் தகராறுதான். இப்ப ஒரு மாசமா அம்மனுக்குப் பூசையே நடக்கலே. போட்டியும் பொறாமையும்தான் காரணம்...'

அவர் குறைகளை அடுக்கிக்கொண்டிருந்தார். அந்த வட்டாரத்தில் உள்ள அநேகம் கிராமங்களையும் சுற்றிப் பார்த்திருந்த கைலாசம், 'ஒண்ணுக்கு ஒண்ணு அண்ணனாகத் தான் இருக்கு. கிராமங்க உருப்படா நிலையிலே இருக்கறதிலே அதிசயமேயில்லே' என்று எண்ணினான். 'ஆச்சிக்கு இந்த ஊரு அதிசயப் பூமியாகப் பட்டிருக்குது!' என்று அவன் மனம் சிரித்தது. 'இப்போ அவ என்ன செய்துக்கிட்டிருக்காளோ?' என்றும் தவித்தது.

செல்லம்மா கோயிலில் தனியாக விடப்பட்டதும், மண்டபத்துத் தூணில் சாய்ந்துகொண்டு, சௌகரியமாகக் காலை நீட்டி உட்கார்ந்தாள். அருகில் நின்ற வேப்பமரம் குளுமையும், மென்காற்றும் பரப்பிக்கொண்டிருந்தது. வெயிலில் வந்த களைப்புக்கு அது அருமையான பரிகாரமாக இருந்தது.

அவள் சும்மா வெறித்துப் பார்த்தபடி இருந்தாள். தானாகவே சிரித்துக்கொண்டாள். 'யாரு, மூக்கத் தேவனா? ஏன் ரயிலடிக்கு வண்டி கொண்டாரலே?' என்று உரக்கக் கேட்டாள். 'அங்கே அது யாரு? ஓகோ எல்லாரும் ஆச்சியைப் பார்க்க வந்திருக்கிங்களா? வராம இருக்க முடியுமா? இந்தக் கையினாலே எவ்வளவு சோறு ஆக்கிப் போட்டிருக்கிறேன். உங்க எல்லாருக்கும்? இன்னும் போடத்தானே போறேன்! அம்மனுக்குப் பூசை நடத்தணும், செவ்வரளிப் பூ மாலை நிறைய வேணும். இளநி, பாலு, தயிரு எல்லாம்

வாங்கிட்டு வாங்க...' அவள் வாய் ஓயாது அடுக்கிக் கொண்டே இருந்தது.

'அம்மா லோகநாயகி! உன்னைத் தேடி வந்துட்டேன். நீ என்னை மறக்கலே; நானும் உன்னை மறக்கலே' என்று அடைத்துக் கிடந்த கதவுகளுக்குப் பின்னால் குடியிருந்த அம்மனை நோக்கிப் பேசினாள். 'இந்தக் கைலாசம் என்ன, போனவன் ஓரே போக்காப் போய்ட்டான்? தம்பியைக் கூட்டிக்கிட்டு வர இத்தனை நேரமா?' என்று முனகினாள். 'எனக்கு என்னமோ ஒரு படியா வருது. சித்தெ நேரம் தலையைக் கீழே சாய்க்கிறேன்' என்று படுத்தாள். 'அம்மா லோகநாயகி, காப்பாத்து, தாயே!' என்பதுதான் அவளுடைய கடைசிப் பேச்சாக ஒலித்தது.

கைலாசம், பாண்டியன் பிள்ளையோடு வந்தவன், ஆச்சி கிடந்த கோலத்தைக் கண்டு பதறிப் போனான். 'ஆச்சி! ஆச்சி!' என்று கூவியவாறு அவளைத் தொட்டு உலுக்கினான். மூக்கருகே கை வைத்துப் பார்த்தான். 'ஆச்சி, இதுக்குத் தானா இந்த ஊருக்கு வந்தே?' என்று அலறினான்.

செல்லம்மாளைத் தொட்டுப் பார்த்த பாண்டியன் பிள்ளையும் உண்மையைப் புரிந்துகொண்டார். 'உம். அக்கா ஆயுசு இப்படி முடியணுமின்னு இருந்திருக்கு, பாருமேன். பிறந்த மண்ணிலே வந்து மண்டையைப் போடணுமின்னு உசிரைப் புடிச்சி வச்சிருந்திருக்காளே!' என்று அவர் புலம்பினார். அவருக்கு ஒரு பெரிய வருத்தம்— தன்னைப் பார்த்துப் பேச வேண்டும் என்று ஆசைப்பட்ட அக்காவை உயிரோடு பார்த்துப் பேச முடியாமல் போய்விட்டதே என்று.

மனிதர்களையும், அவர்களுடைய வாழ்வின் போக்கு களையும், ஒவ்வொருவரையும் படாதபாடு படுத்தி எப்படி எப்படியோ ஆட்டிவைக்கிற மனம் என்கிற விஷயம் பற்றியும் எண்ண அலைகள் கைலாசத்தின் உள்ளத்தில் எழுந்தன; புரண்டன; குழம்பின. பல பேர் நிகழ் கால வாழ்க்கையைச் சரியாக அனுபவிப்பதே இல்லை; அவர்களை அனுபவிக்க விடுவதில்லை அவர்களுடைய மனம். இன்றும் பலர் சென்றுபோன காலத்தின் இனிய நினைவுகளில் மட்டுமே வாழ்க்கையைக்

காண்கிறார்கள். வேறு பலர் இனி வரக்கூடிய எதிர்காலக் கனவுகளில் வாழ்வின் குளுகுளுப்பைக் காண்கிறார்கள். இவர்களுக்கெல்லாம் நிகழ்காலம் சுட்டெரிக்கும் கோடை வெயிலாகவே படுகிறது என்று நினைத்தான் அவன். ஒரு வேளை, நிகழ்காலத்தின் வெறுமையும் வறட்சியுமே இவர்களை நினைவுலகத்துக்கும் கனவுலகத்துக்கும் துரத்தி அடிக்கிறதோ என்னவோ?—இப்படியும் ஒரு எண்ணம் புரண்டு கொடுத்தது.

நிகழ்கால வெறுமையில் இதயம் வெதும்பிய செல்லம்மா ஆச்சியின் மனம், இறந்துபோன காலத்தின் நினைவுகளில் இன்பம் கண்டது. அவற்றை மோகனமாகவும் பசுமையாகவும் காண்பதற்கு அவளுடைய கற்பனை துணை புரிந்தது. வெயிலில் திரியும் பிரயாணி பசுஞ்சுனைகளையும் குளிர் சோலைகளையும் மாயைத் தோற்றமாகவும், மயக்கு நிழல்களாகவும் கண்டு, உண்மை என நம்பித் திரிவதுபோலவே ஆச்சியும் நடந்துகொண்டாள்.

'தமிழ் ஐயா ஒருவர் சொன்னாரே, கஸ்தூரி மான் இனிய நறுமணத்தை நுகர்கிறது. அது தனக்குள்ளிருந்தே கிளம்புகிறது என்பதைப் புரிந்துகொள்ளாமல், மான் அந்த வாசனையைத் தேடி ஓடுகிறது. ஓடி ஓடிச் சாகிறது என்று. அதே மாதிரித்தான், ஆச்சியின் நல்லூர் அவள் மனவெளியில்தான் இருந்திருக்கிறது. அதை அவள் புரிந்துகொள்ளவில்லை. தான் பிறந்து வளர்ந்த நல்லூர் கிராமத்தில் அந்த சொர்க்கம் இருக்கிறது என்று நம்பி, வீணாக வந்து சேர்ந்தாள். அதனாலும் நஷ்டமில்லை. அவள் ஆத்மா திருப்தி அடைந்திருக்கும்!' —இப்படி அவன் மனம் கருதியது.

'என்னய்யா, இப்படி இடிஞ்சு போயி உட்கார்ந்துட்டா? உம். மேலே நடக்க வேண்டிய காரியங்களைக் கவனிப்போம்' என்று தன்னைத்தானே தேற்றிக்கொண்டு பாண்டியன் பிள்ளை கைலாசத்தையும் முடுக்கினார்.

'ஆமா. முதல்லே ராசாவுக்குச் சொல்லியனுப்பணும்' என்று பரபரப்பு காட்ட ஆரம்பித்தான் கைலாசம்.

சுதேசமித்திரன், தீபாவளி மலர், 1967.

# ‘கள்ளபார்ட்காரி’

அந்த ஊர் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அழகும் அமைதியும் நிறைந்த இடம். எதிரே, சற்று தூரத்தில், கம்பீரமாக நின்ற மலையின் தோற்றம். முன்னே, மழை நீர் நிறைந்து கிடந்த ஏரியின் பரப்பு. எங்கும் பசுமையும் எழிலும் பூசியவாறு நின்ற மரங்கள், செடிகள், இனிய காற்றும், அடிக்கடி சிலு சிலுவென்று பூ உதிரல்போல் படிந்து மறையும் இளம் தூறலும் இதமாக இருந்தன.

ஒரு பாலத்தின்மீது அமர்ந்து மன நிறைவுடன் ரசித்துக் கொண்டிருந்தபோது, என் எண்ணத்தை நண்பர் சிதம்பரத்திடம் தெரிவித்தேன். அவரது நீண்ட நாளைய அழைப்பை ஏற்று, அவர் அதிதியாக வந்திருந்தேன். ஊரையும் சூழ்நிலையையும் பார்த்த பிறகு, ‘முன்னரே வராமல் இருந்துவிட்டேனே!’ என்ற வருத்தம்கூட எனக்கு ஏற்பட்டது.

‘இந்த ஊருக்கு இன்னொரு பெருமையும் உண்டு’ என்றார் நண்பர்.

‘என்ன பெருமையோ!’ என்று அலட்சியமாகக் கேட்டேன்.

‘கள்ளபார்ட் காமாட்சியின் ஊர் இதுதான்!’

கள்ளபார்ட் காமாட்சியா? நான் அறிந்த வரையில் அப்படிப் புகழ் பெற்றிருந்த நடிகை ஒருத்திதான் இருந்தாள். முப்பது வருஷங்களுக்கு முன்பு, தென் ஜில்லாக்களில் அவள் பெயர் ‘கொடிகட்டிப் பறந்துகொண்டிருந்தது.’ அப்போது ‘புகழேணியின் உச்சிக்கு விறுவிறு என்று ஏறிவந்த அவள் திடீரென்று மறைந்து விட்டாள். அதாவது, நாடக உலகிலிருந்து ஒதுங்கிக் கொண்டாள். அந்தச் சமயத்தில் அவளுக்கு வயது இருபதுக்குள்தான் இருக்கும். ஏன் அவள் திடீர் ஓய்வு

பெற்ருள் என்பது யாருக்கும் தெரியாது. அவள் என்ன ஆளுள், எங்கே போளுள் என்பதும் தெரியாது. இடைக் காலத்தில் செத்துப்போயிருக்கவும் கூடும்.

இதை சிதம்பரத்திடம் சொன்னேன்.

அவர் புன்முறுவல் பூத்தார். 'அதே காமாட்சிதான். அவள் இந்த ஊர்க்காரியே. அவள் சாகவும் இல்லை; வேறு எங்கும் போய்விடவும் இல்லை; இங்கேயேதான் இருக்கிருள்' என்ருர்.

'இதே ஊரிலா? இப்பகூடவா?' நான் ஆச்சர்யமாகக் கேட்டேன்.

'ஆமாம்.'

'கிழவியாகி இருப்பாளே?'

'கிழவி என்று சொல்வதற்கில்லை. வயசு ஐம்பது இருக்கும். ஆளுல், பார்வைக்கு அது தெரியாது. ஒழுக்கத்தோடு கட்டுப்பாட்டுடனும் மன நிறைவோடு வாழ்ந்து வந்திருப்பதளுல், அவள் தோற்றத்திலும், முகத்திலும் இனிய பொலிவு குடிகொண்டிருக்கிறது' என்று வர்ணித்தார் நண்பர். அது என் வியப்பை வளர்த்தது.

'அவள் ஏன் நாடகத் தொழிலை திடீரென்று விட்டு விட்டாள்? இந்த ஊரில் எவ்வளவு காலமாக இருக்கிருள்? இப்போது என்ன செய்கிருள்?' என்று கேள்விகளை அடுக்கினேன்.

நண்பர் சொன்னுர்: 'இதில் எல்லாம் யாரும் அக்கறை காட்டுவதில்லை. அவள் நாடகக்காரியாக இருந்தாள். கள்ளபார்ட் வேஷத்தில் புகழ்பெற்றவள் என்பதுகூட இந்தப் பக்கத்துக்காரர்களுக்கு மறந்துவிட்டது. அவள் ஒதுங்கி, எதிலும் ஒட்டாமல் பூஜை விரதம் என்று காலத்தைக் கழித்து வருகிருள். சாப்பாட்டுக்கு மயக்கமில்லை. அந்தக் காலத்திலேயே அவளுக்குப் போதுமான நிலமும் தோட்டமும் சேர்ந்திருந்தது. சொந்த வீடும் உண்டு. ஒற்றை மனுஷி தானே!'

'அவளைக் கண்டு பேச முடியுமா?' என்று ஆவலோடு விசாரித்தேன்.

'பேசலாமே. நாளைக்குப் பார்த்தால் போச்சு!' என்று முடிவு கட்டினார் அவர். அப்புறம் வேறு எதையோ பேசிக் கொண்டிருந்தார்.

ஆனாலும், என் மனம் கள்ளபார்ட் காமாட்சியின் நினைவாகவே அலைபட்டுக்கொண்டிருந்தது.

சினிமாவும் சினிமா தியேட்டர்களும் மக்களின் வாழ்வில் முக்கிய இடத்தைப் பிடித்துக்கொண்டிராத காலம் அது. அநேக முக்கிய நகரங்களில்கூட, பெயருக்கு ஒரு சினிமாத் தியேட்டராவது இருந்ததில்லை அப்போது. மக்களின் பொழுதை போக்கடிப்பதற்கு உதவிபுரியும் திருப்பணியை நாடகக் குழுவினரும் சர்க்கஸ் கம்பெனிகளும் மேற்கொண்டு நாட்டின் பல பகுதிகளிலும் சுற்றித் திரிந்து தொழில்புரிந்து வந்த காலம் அது.

அந்தக் காலத்தில் தென் ஜில்லாக்களில் அடிக்கடி வந்து போன நாடகக் கம்பெனிகள் பலவும் நீளநீளமான பெயர்களைத் தாங்கியிருந்தது போலவே, மதுரையை மூலஸ்தானமாகவும் கொண்டிருந்தன. அது ஏனோ தெரியாது. 'மதுரை ஸ்ரீ மீனலோசனி வித்துவ ரத்தின நாடக சபா', 'மதுரை ஸ்ரீ சந்தான கிருஷ்ண சங்கீத விநோத நாடக சபா' என்கிற தன்மையில்தான் அந்தக் குழுவும் பெயர்சூட்டிக்கொண்டிருந்தது. 'மதுரை ஸ்ரீ மனமோகன முத்தமிழ் கலா வித்வ சங்கீத நாடக சபா' என்று.

எல்லா நாடக சபைகளும் நீடித்த காலம் வெற்றிகரமாகவும் லாபகரமாகவும் தொழில்புரிந்தன என்று சொல்வதற்கில்லை. 'மனமோகன சபா'வுக்கும் ஜீவ மரணப் போராட்ட நிலைதான். ஒவ்வொரு கம்பெனிக்கும் ஒன்றிரு நடிகரால் புகழும் பெயரும் கிட்டின. இந்தக் கம்பெனியின் ஒளிச்சுடராக இருந்தவர் கள்ளபார்ட் காத்தலிங்கம்.

கறுப்பில் சட்டையும் கால்சட்டையும் அணிந்து, காலில் சலங்கை கட்டிக்கொண்டு, பம்பையாய்ச் சிலிர்த்து நிற்கும்

பரட்டைத் தலைமுடி தனி ஆட்டம்போட, அவர் மேடைமீது திங்குதிங்கென்று குதித்துப் பாட்டுப் பாடித் துள்ளிப் பாய்வது பிரமாதமாக இருக்கும். ஆர்மோனியக்காரர் முன்னால் போய்க் குதித்துக்கொண்டே, கோட்டைக் கொத்தளம் மீதிலேறிக் கூசாமல் குதிப்பேன்... பலபா குதிப்பேன்... ஐஸா குதிப்பேன்... ஐலக்கா... பலபா... ஐஸா... என்று அடுக்கி உருட்டி ஆர்மோனியஸ்டுக்கு 'தண்ணிகாட்டுகிற வேலை' ரசிகமகா ஜனங்களின் கைதட்டலையும் ஆரவாரத்தையும் தட்டி எழுப்பும். இப்படி குதிப்பேன் என்பதைத் துவையலாக்கி திருப்திப்பட்ட பிறகுதான் அவர் 'காவலர் கண்டுபிடிக்க வந்தால் கத்தியால் குத்திடுவேன்' என்று அடுத்த அடிக்குத் தாவுவார். 'ஒரு நீச்சல் கப்பலைப் பிடிப்பேன், கல்கத்தா துறைமுகம் பார்ப்பேன்' என்று அவர் மேலேறுவதற்குள் ஆர்மோனியஸ்ட் பாவம், திணறித் திண்டாடிப்போவார்.

இந்த ஒரு பாட்டுக்கே அரை மணி நேரம் எடுத்துக் கொள்வார் அவர். 'ஆர்ப்பாட்டக் கள்ளன் காத்தலிங்கத்தின் அமர்க்களமான நடிப்பைக் காணத் தவறாதீர்கள்' என்று நோட்டீசில் விசேஷ அறிவிப்பு அச்சிடப்பட்டிருக்கும். சில சமயம் அவர் கைகளில் சிறு தபேலாக்களை இடுக்கிக்கொண்டு, அவற்றில் அடித்து ஓசை எழுப்பி அட்டகாசம் பண்ணுவார். அவர் குதிக்கிற குதியில் மேடைமீது தூசி கிளம்பிப் படலமாய்ப் பரவி நிற்கும்.

நள்ளிரவில் திருட வருகிறவன் இப்படித்தான் ஆடி அட்டகாசம் பண்ணுவானுக்கும்? பாட்டுப்பாடி குதியாட்டம் போட்டு கலாட்டா செய்வானுக்கும்? இந்த நடிப்பில் ரியலிசம் இல்லையே!—இப்படி எல்லாம் விமர்சனம் பேசக் கூடிய மனோபாவமோ, ரசனையோ அந்த நாட்களில் தலையெடுத்திராத காரணத்தினாலே, கள்ளபார்ட் காத்தலிங்கம் ஜமாய்த்துக்கொண்டிருந்தார். அப்பவே அவருக்கு வயது நாற்பதைத் தொட்டிருந்தது.

ஒருசில வருஷங்களில் அவரது மூப்பு முன்னைப்போல் குதியாட்டம் போட்டு நடிக்கவிடாதவாறு அவரைத் தடுத்து

விட்டது. ஏதோ வியாதிவந்து பலவீனப்படுத்தியது என்றும் கேள்வி. அதனல் புகழ் கொஞ்சம் 'டிம்' அடிக்கத் தொடங்கியது. நாடக வசூலும் பாதிக்கப்பட்டது.

காத்தலிங்கம் தோல்வியை ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை. அவர் மூளையில் ஒரு மின்வெட்டு ஏற்பட்டது. அதைச் செயல்படுத்தியதன் மூலம் கம்பெனியைக் காத்த அருளாளர் ஆகவும் மாறி நின்றூர் அவர்.

அப்படி அவர் என்னதான் செய்தார்? முதன் முதலாக நாடகமேடையில் 'பொம்பிளை கள்ளபார்ட்'டை அறிமுகம் செய்துவைத்தார். கவர்ச்சி அம்சங்கள் நிறைந்திருந்த இளம் பெண் ஒருத்தியை அட்டகாசக் கள்ளி ஆகப் பயிற்றுவித்து, 'ஏ ஒன் கள்ளபார்ட்காரி' என்று மேடைக்குக் கொண்டுவந்த பெருமை கள்ளபார்ட் காத்தலிங்கத்துக்கே உரியது. அவரால் டிரெயினிங் கொடுக்கப்பட்டு, அறிமுகமானவள்தான் கள்ளபார்ட் காமாட்சி.

அவள் காத்தலிங்கத்தின் உறவுப் பெண் என்று சொன்ஞர்கள். 'சொந்த அத்தை மகள்தான்' என்று சிலர் அறிவித்தார்கள். 'அதெல்லாம் இல்லை. ரயிலில் பாட்டுப் பாடி காசுப் பிச்சை கேட்டுத் திரிந்த எவளோ ஒருத்தி. அவளைப் பிடித்து, பட்டைதீட்டிய வைரம் ஆக்கிவிட்டார் காத்தலிங்கம்' என்று சிலபேர் சொன்ஞர்கள். 'கழைக் கூத்தாடிகள் கோஷ்டி ஒன்றிலே அவர் இந்தப் பெண்ணை பார்த்தார், அவருக்குப் பிடிச்சிருந்தது. கூத்தாடிகளுக்குக் கொஞ்சம் ரூபாய் கொடுத்து, அவர் அவளை சேர்த்துக்கொண்டார். நல்லாப் பழக்கி நாடகக்காரி ஆக்கிவிட்டார்' என்றும் பேச்சு அடிபட்டது.

உண்மை எதுவாக இருந்தாலும் சரியே. கள்ளபார்ட் காத்தலிங்கத்தின் செலக்ஷனும் டிரெயினிங்கும் சோடை போகவில்லை. காமாட்சி 'ஜிஞ்சாமிர்த கள்ளபார்ட்காரி' ஆகத் திகழ்ந்தாள்.

இரண்டு பேரும் ஒன்ருகவே மேடைமீது தோன்றிஞர்கள். காத்தலிங்கம் 'கோட்டைக் கொத்தளம் மீதிலேறி'

அடியைக்கொன்று மிதித்து அமர்க்களம் செய்து முடித்ததும், காமாட்சி துள்ளிப்பாய்வாள். 'அடுத்த அடிகளைப் பாடி வேலைத்தனங்கள் செய்து காட்டுவாள். நூலேணியில் நேராக ஏறுவதும் தலைகீழாக இறங்குவதும் அவள் செய்து காட்டும் சாதனைகளில் ஒன்றாக அமைந்தது, கம்பெனி பிழைத்தது. புகழ் எங்கும் பரவியது. மனமோகன நாடக சபாவின் 'ஜில் சதாரம்' நாடகத்துக்கு ஏகப்பட்ட பணம் வசூலாகும். அதே நாடகத்தைத் திரும்பத் திரும்ப நடிக்கவேண்டிய அவசியமும் ஏற்படும். அதில்தான் காமாட்சியின் நூலேணி சர்க்கஸ் இடம்பெற்றிருந்தது.

மூன்று வருட காலம் இப்படி 'போடு போடு என்று போட்டு நொறுக்கிய' காமாட்சி திடீரென்று ஒரு நாள் இருளில் பதுங்கிவிட்டாள். காத்தலிங்கம் மட்டும் நடித்துக் கொண்டிருந்தார். அவரும் மேடை வாழ்வை விட்டு ஒதுங்கி யிருந்தால், 'சரி இரண்டு பேரும் சேர்ந்து வாழ எங்கேயோ போய்விட்டார்கள்' என்று முடிவு கட்டியிருக்கலாம். அப்படி நடக்கவில்லை.

கள்ளபார்ட் காத்தலிங்கத்தின் அட்டகாசங்களோ, இதர நடிகர்களின் திறமையோ, சங்கீத சரமாரிகளோ, ஆர்மோனியச் சக்கரவர்த்தி அங்கப்பாவின் கைவரிசையோ, கோடையிடி கொல்லம் குமரப்பாவின் மிருதங்க முழக்கங் களோ, 'மதுரை ஸ்ரீமன மோகன முத்தமிழ் கலாவித்வ சங்கீத நாடக சபா'வின் வீழ்ச்சியை தடுத்து நிறுத்தித் தாங்கிக் காப்பாற்ற முடியவில்லை. நலிந்து மெலிந்து மரணம் எய்தியது அது. அதன் பிறகு காத்தலிங்கம் பற்றிய செய்தி களும் காதில் விழவில்லை.

கள்ளபார்ட் காமாட்சி இந்த ஊரில் இருக்கிறாள், அவளைக் கண்டு பேச வாய்ப்புகிட்டும் என்று தெரிந்ததும், அவளிடம் அவளது திடீர் நாடக மேடை துறவுபற்றியும் காத்தலிங்கம் பற்றியும் விசாரித்து அறியவேண்டும் எனும் ஆசை எனக்கு ஏற்பட்டது. அவள் திடுமென நடிக்க வந்ததில் அதிசயம் எதுவும் இல்லை. பிழைப்புக்காக நாடகத் தொழிலை ஏற்றிருப்பாள்.

ஆனால் அப்படி நடிக்கவந்தவள் உச்சகட்டத்தில், திடீரென தன்னைத்தானே இருட்டடிப்பு செய்துகொண்டது ஏன்? இதில் ஏதோ மர்மம் இருக்கிறது என்ற சந்தேகம் எனக்கு. இதுபற்றி அந்தக் காலத்தில் தெளிவு பிறக்க வழி இருந்ததில்லை. இப்போது நல்ல தருணம், அவளிடமே கேட்டுவிடலாமே என்று குதித்தது என் மனம்.

மறுநாள் நாங்கள் அவள் வீட்டுக்குச் சென்றபோது காமாட்சி பூஜையை முடித்துவிட்டு, ஏதோ பக்திக் கதையைப் படித்துக்கொண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும் சிதம்பரம் சொன்னது சரிதான், என என் மனம் ஆமோதித்தது. புனிதவதியாகத் திகழ்ந்த அவள் முகத்தில் அமைதியும் திருப்தியும் நிறைந்த ஒரு பொலிவு ஒளிர்ந்தது.

எங்களை வரவேற்று பாயில் உட்காரும்படி உபசரித்தாள். உள்ளே சென்று என்னவோ உத்திரவிட்டு வந்தாள். காப்பி தயாரித்து எடுத்து வரும்படி ஏற்பாடு செய்துவிட்டு வந்திருக்கிறாள் என்பது, சிறிது நேரத்தில் சுடச்சுட காப்பியைக் கொண்டுவந்து ஒரு சிறு பெண் தந்ததிலிருந்து புரிந்தது.

நண்பர் என்னைப்பற்றிச் சொன்னார். உற்சாகத்தோடு அதிகமாகவே அளந்தார் என்றே சொல்லவேண்டும். 'நாடகங்கள், பழங்கால நாடக சபைகள், நடிகர்கள்பற்றி எல்லாம் பேசிக்கொண்டிருந்தோம், அப்போது கள்ளபார்ட் காத்தலிங்கம்பற்றி இவர் வியந்து பாராட்டினார். நாடக மேடையில் அவர் ஆட்சி செலுத்திய அற்புதம் பற்றிப் புகழ்ந்தார். உங்களைப்பற்றியும் சொன்னார். உடனேதான் நீங்கள் இங்கேயே இருப்பதாகத் தெரிவித்தேன். அதிலிருந்து உங்களைப் பார்த்துப் பேசவேண்டுமே என்ற ஒரே அவா தான் இவருக்கு!' என்று கூறினார்.

அவர் பேச்சில் நான் 'தடி வெட்டிப் போட' விரும்பவில்லை. அது அவள் 'தலையில் வைத்த சரியான ஐஸ்' என்றே எனக்குப்பட்டது. அது நன்றாக வேலை செய்யவும் செய்தது.

'அவங்கமாதிரி ஆளு யாரு இந்தக் காலத்திலே இருக்காங்க? கள்ளபார்ட்டிலே அவுக ராசா ஆச்சுதே!' என்றாள்

காமாட்சி. அதில் தனிப் பெருமையும் மகிழ்வும் தொனித்தன.

'நீங்க கூட அருமையாத்தான் நடித்தீங்க. அதிலும், அந்த நூலேணி வேலை...ஆகா!' என்று வியப்புச் சொல் உதிர்த்தேன்.

'நீங்க ஜில் சதாரம் பார்த்தீங்களா அந்த நாளிலே?' என்று அதிசய பாவத்தோடு அவள் விசாரித்தாள்.

'ஒரே ஒரு தடவை பார்த்தது உண்டு, உங்க கள்ள பார்ட்டை பார்ப்பதற்கென்றே நாங்க சிலபேர் போனோம். எங்க ஊரிலிருந்து அஞ்சு மைல் தள்ளி உள்ள டவுனில்தான் நாடகம். எவ்வளவு கூட்டம்! என்ன வரவேற்பு! அப்போதெல்லாம் கள்ளபார்ட் காமாட்சி என்ற பேச்சுத்தானே எங்கும்' என்றும் சொன்னேன்.

நேர்மையான புகழ்ச்சி எந்தக் கலைஞரின் உள்ளத்தையும் தொடாமல் போவதில்லை. அது எழுப்புகிற உளக் கிளர்ச்சியையும் முகமலர்ச்சியையும் எதிரே இருப்பவர்கள் நன்கு உணர முடியும்.

காமாட்சியின் முகத்திலும் ஒரு பிரகாசம் ஊர்ந்து மறைந்தது. எனினும் அவள் அடக்கத்தோடு சொன்னாள்: 'எல்லாம் அவங்க தந்த பிரசாதம்தானே! அவுக என்னைக் கண்டு, எனக்கு நாடகமேடை வித்தை கத்துத் தராமல் போயிருந்தால், நான் எங்காவது அடுப்படியிலே கிடந்து வெந்து புழுங்கவேண்டியவதானே?'

அவள் காத்தலிங்கம்மீது பக்தியே கொண்டிருந்ததாகத் தோன்றியது.

'காத்தலிங்கத்துக்கு நீங்கள் உறவு முறைதானா?'

'சொந்தமின்னுதான் சொல்லணும். எங்க ஐயா என்னை கரக ஆட்டத்திலே பழக்கிவிடணுமின்னு ஆசைப்பட்டாரு. அதுக்கு ஏற்பாடு செய்திருந்தாரு. ஒரு சமயம் அவுக இந்த ஊருக்கு வந்தபோது, எங்க ஐயா என் ஆட்டத்தைப் பார்க்கும்படி அவுகளை அழைத்து வந்தாரு. அப்பவே அவுக

சொன்னுக, கரக ஆட்டம் எதுக்கு? இதையும் நாடக மேடையிலே இழுத்துவிடலாமே இன்னுக. அது விளையாட்டுக்குச் சொன்ன வார்த்தைன்னு நெனச்சேன். ஆனல், மறு வருஷமே அவுக வந்து, என்ன காமாட்சி, நாடகத்திலே ஆக்ட் பண்ண வாறியா? உன்னை ஏ ஒன் கள்ளபார்ட்காரி ஆக்கி விடுறேன்னுக. அப்படியே செய்யவும் செய்தாக.'

அவள் பூர்வ கதையை நினைவுகூர்ந்தபோது, காத்தலிங்கத்திடம் அவள் கொண்டிருந்த நன்றியும், பக்தியும் மேலோங்கி நின்றன.

'மனமோகன சபா கலைந்துவிட்டதும், காத்தலிங்கம் என்ன ஆனர்?' என்று எனது வெகுநாளையக் கவலையை வெளிப்படுத்தினேன்.

'கம்பெனி இல்லாமல் போனதும், அவுகளுக்கு என்னமோ போல ஆயிட்டுது. மனசே முறிஞ்சு போச்சுன்னு தோணிச்சு வாழ்க்கையே அஸ்தமிச்சுப் போனதாக நினைச்சிட்டாக. எங்கே போறது? என்னையும் அழைத்துக்கொண்டு, மலையடிவாரக் கிராமம் ஒன்றிலே போய், நிம்மதியாக இருக்க முயன்ருக. ரொம்ப நாள் ஓடலே, வயசும் ஆச்சு, மனசு விட்டுட்டுது. நாடக வாழ்க்கையிலே ஈடுபட்டிருந்த காலத்திலே வளர்ந்த குடிப்பழக்கம் உடம்பை கெடுத்திருந்தது. ஓயாத சீக்கு, கொஞ்ச காலத்திலே செத்து தெய்வம் ஆயிட்டாக. அதுக்கப்புறம் தான் இந்த ஊரோடவே வந்திட்டேன்.

அதற்கு முந்தி அவள் ஏன் நாடக வாழ்க்கையை, புகழின் உச்சநிலையில் இருந்தபோது திடுமென வெறுத்து ஒதுக்கினுள் என்று கேட்டுவிடவேண்டும் என்று துடித்தது என் மனம். ஆனல், அப்படிக் கேட்டால் அவள் பதில் சொல்வாளோ மாட்டாளோ என்ற தயக்கமும் இருந்தது.

'நீங்கள் கள்ளபார்ட் வேஷத்திலே நடித்ததை கலெக்டர் துரை பார்த்துவிட்டு, மேடை மீது வந்து பாராட்டினுரே அன்றுதான் நான் நாடகம் பார்க்க வந்திருந்தேன்.'

உங்கள் நடிப்பைக் கண்டு மகிழ்ந்த துரை, அவர்களது வழக்கப்படி உங்கள் கையைப் பிடித்துக் குலுக்கி, ஆங்கிலத்தில் பாராட்டுரை வழங்கினார். அவர் மறுபடியும் அவரது இடத்துக்கு வந்து அமர்ந்ததும், நீங்கள் மேடை முன் வந்து நின்று, சிரித்துக்கொண்டே, துரை அவர்கள் கைவிரலில் கிடக்கிற மோதிரத்தை எனக்குப் பரிசாகத் தருவார்கள் என எதிர்பார்த்தேன்; ஆனால் துரை என்னை ஏமாற்றிவிட்டார் என்று சொன்னீர்கள். அது அவரிடம் ஆங்கிலத்தில் எடுத்துச் சொல்லப்பட்டதும், அவரும் சிரித்தார், சிரித்துக்கொண்டே தன் கைவிரலைப் பார்த்தார், திடுக்கிட்டார். அங்கே மோதிரம் இல்லை, நீங்கள் சிரித்தவாறே 'கள்ளனடா கள்ளனடா, தெற்கத்திக் கள்ளனடா!' என்று பாடி, ஆட்டம் போட்டு மோதிரத்தை உயர்த்திக் காட்டினீர்கள். தனக்குத் தெரியாமல், தன் கையில் கிடந்த மோதிரத்தை நைஸாகத் திருடிவிட்டதை அறிந்து கலெக்டர் துரை திகைத்துப் போனார், நீங்கள் மேடையிலிருந்து கீழே வந்து, அவரை பணிவுடன் கும்பிட்டு, சும்மா வேடிக்கை பண்ணினேன், துரை பெரிய மனசுபண்ணி என்னை மன்னிக்க வேண்டும் என்று சொல்லி, மோதிரத்தை அவரிடம் கொடுத்தீர்கள். அவர் சிரித்தார், உன்னை அரஸ்ட் செய்யோணும்; இனி நீ திருடனு ஆக்ட்பண்ணப்படாது; தடை போடணும் என்று கொச்சைத் தமிழில் சொன்னார். அந்த மோதிரத்தை உங்களுக்கே பரிசாக அளித்துவிட்டார். இல்லையா?

நான் பேசப்பேச, காமாட்சி வியப்புடனும், உள்ளூற அரும்பி மலர்ந்த சந்தோஷப் பெருக்கோடும் என் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். 'நீங்கள் நன்றாக ஞாபகம் வைத்திருக்கிறீர்கள், ஏயப்பா, அது நடந்து எவ்வளவு வருஷமாச்சு!' என்றாள்.

'நீங்கள் மறந்திருப்பீர்கள்...'

'இல்லை இல்லை. அதை நான் மறக்கவே முடியாது!' என்ற அவசர மறுப்புரை அவளிடமிருந்து வந்தது.

'அதற்குப் பிறகு கள்ளபார்ட் காமாட்சி மேடையில் தோன்றவேயில்லை, கலெக்டர் துரை தடை உத்திரவு

போட்டுவிட்டார். அதுதான் காரணம் என்று அப்போது சிலர் சொன்னார்கள்..'

'அவர் ஏன் தடை போடுகிறார்? அவர்தான் ரசித்துப் பாராட்டினாரே. அவர் உண்மையான ரசிகர். மறுநாள் என் கள்ளபார்ட் திறமையையும் பொருத்தத்தையும் பாராட்டி கடிதம் எழுதி சர்டிபிகேட்டும் அனுப்பியிருந்தார். அதெல்லாம் இன்னமும் அப்படியே இருக்கிறது, என்று அவள் அறிவித்தாள்.

'நான் ஏன் நடிப்பதை விட்டுவிட்டேன் என்றுதானே கேட்க விரும்புகிறீர்கள்' என்று அவளே தொடர்ந்தாள். 'எனக்குப்பிரியம் இல்லை, விட்டுவிட்டேன்...ஆக்டு பண்ணினது போதும் என்று மனசுக்குப்பட்டது, நின்றுவிட்டேன்... இப்படித்தான் நான் அந்தச் சமயத்தில் சொல்லிவந்தேன். ஆனால் இந்தப் பதில் உங்களுக்குத் திருப்தி அளிக்காது என்பது எனக்குத் தெரியும், உங்களிடம் உண்மையைச் சொல்ல வேண்டும் என்று எனக்கு ஏனோ தோன்றுகிறது. கலை உள்ளம் பெற்ற ரசிகராகவும், கலைமீதும் கலைஞர்களிடமும் அக்கறை கொண்டவராகவும் இருக்கிறீர்கள். அதனால் உங்களிடம் உள்ளதைச் சொல்வதில் தவறில்லை என்று நினைக்கிறேன்...'

இதைச் சொல்லிவிட்டு, அவள் சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். பிறகு பேசினாள்:

'புலமைக் காய்ச்சல் என்று சொல்வார்கள். அதுபோல் கலைக் காய்ச்சல் உண்டு என்றும் சொல்லவேண்டும். அவுக தான் எனக்குப் பயிற்சி அளித்து மேடை ஏற்றினுக. என்னை முன்னேற்ற வேண்டும் என்ற எண்ணம் முக்கியம் அல்ல. ஒரு குமரிப் பெண் கள்ளன் வேஷம் போட்டு ஆடினால், கம்பெனிக்கு நல்ல விளம்பரம் கிடைக்கும்; பண வசூலும் ஏற்படும் என்பதுதான் முக்கிய நோக்கம். அவுக எதிர் பார்த்ததைவிட நல்ல வெற்றி கிடைச்சுது, அதோடு அவுக எதிர்பாராத விளைவு ஒண்ணும் ஏற்பட்டுவிட்டது எனக்கு அதிகமான பெயரும் கவனிப்பும் வந்து குவிஞ்சுது. ஊர் ஊரிலே, மாலையும் மெடலும் எனக்கு நிறையவே கிடைச்சுது.

அதை எல்லாம் பார்த்து அவுக பெருமையும் சந்தோஷமும் படுவாகயின்னுதான் நான் முதல்லே எண்ணியிருந்தேன். ஆனா அது அப்படியில்லே என்று சீக்கிரமே புரிஞ்சுகிட்டேன். குருவுக்கு மிஞ்சின சிஷ்யப்புள்ளே ஆயிட்டியேன்னு அவுக அடித்து சொல்ல ஆரம்பிச்சாக, ஒருநாள், எனக்கு ஏகப்பட்ட அப்ளாசும் பாராட்டும் கிடைச்சுது, அன்று நாடகம் முடிஞ்சதும், அவுக சொன்னாக உலகம் அப்படித்தான் இருக்கு. திறமைக்கு எவன் மதிப்பு கொடுக்கான்? கண்ணுக்குக் குளுமையா வயசுப்பொண்ணு வந்து நின்னா, குதிச்சா, ஈயின்னு இளிச்சிடுதானுக. தேன் குடிச்ச நரி ஆயிடுதானுக எல்லாரும்!... இது எனக்கு வேதனை தந்தது. என்றாலும் நான் ஒண்ணும் பேசலே.

'கலெக்டர் துரை பாராட்டி சர்ட்டிபிகேட்டும் அனுப்பி வச்சதும், இனிமே உனக்கு என்ன! ஜமீன்தார்களும் பணக்காரங்களும் பாராட்டுவாங்க; இந்தக் கிழவன் தயவு உனக்கு எதுக்கு என்று குத்தலாகச் சொன்னாக, வழக்கமான மனக் கசப்பு மட்டும் இல்லே அதிலே. பொறாமை தலைதூக்கி நின்னுது. உடனே நான் சொன்னேன்—பேரும் புகழும் பணமும் பெறலாம்கிற ஆசையோடு நான் ஆக்ட் பண்ண வரலே. உங்களுக்குத் திருப்தியும் பெருமையும் நன்மையும் ஏற்படுங்கிறதனாலே தான் நான் நடித்துவாறேன். ஆனா, உங்களுக்கு அது சந்தோஷம் தரலே, மனவருத்தம்தான் உண்டாக்குதுயின்னு புரிஞ்சுக்கிட்டேன். அதனாலே இனி மேல் நான் மேடை ஏறப்போவது கிடையாது. இன்று நடந்ததுதான் கடைசி ஆட்டம், இது சத்தியம் என்று கையடித்தேன். அவுக இதை எதிர்பார்க்கலே. அதிர்ந்து போனாக. அப்புறம் அவுக எவ்வளவோ சொன்னாக, கெஞ்சிக் கேட்டாக. ஊஹூங், என்னாலே முடியாது என்று உறுதியாய் இருந்துவிட்டேன். எனக்கு அவுக மேலே வருத்தமே கிடையாது. பக்தியும் மரியாதையுமே என்றைக்கும் உண்டு" என்று கூறி முடித்தாள்.

அவள் அந்த வார்த்தையைச் சொல்லவில்லை என்றாலும், அவள் செயலின் அடிப்படை காதல்தான் என்று புரிந்தது.

பக்தி என்பதும் காதலின் ஒரு மலர்ச்சிதானே! இப்பவும் அவள் அந்த உணர்வை உள்ளத்தில் வைத்துப் பாதுகாத்து வந்தாள் என்பதை அவளது கண்களில் மின்னிய சுடரொளி காட்டியது. கள்ளபார்ட் காமாட்சிமீது எனக்கிருந்த வியப்பு மேலும் அதிகரித்தது.

'சாந்தி', செப்டெம்பர் 1970.

# பயம்

செந்திக்கு இரவு நேரங்களில் தெருவில் நடக்கவே பயம். தெரு நாய் ஏதாவது பாய்ந்து வந்து காலைக் கவ்வி விடும், மேலே விழுந்து கடித்துக் குதறிவிடும் என்று அவன் மனம் சதா அஞ்சி நடுங்கும்.

இதுவரை அவனை நாய் எதுவும் கடித்தது இல்லைதான். அதற்காக, இனிமேல் என்றைக்காவது நாய் கடிக்காது என்று உறுதியாய் எப்படிச் சொல்ல முடியும்? அவன் மனசில் எப்போதும் இந்த உதைப்பு இருந்து வந்தது.

செந்தியை நாய் கடிக்கும் என்று அவனது ஜாதகத்தைப் பார்த்த எந்தச் சோதிடரும் சொன்னாரோ இல்லையோ தெரியாது. அவனுடைய பாட்டியும், அத்தையும், பெரியம்மாவும் சின்ன வயது முதலே அவனுக்கு நாயை எண்ணிப் பயப்படும்படி கற்றுக் கொடுத்துவிட்டார்கள்.

செந்தியின் தாத்தா செந்தில்நாயகம் பிள்ளை நாய் கடித்து, நாற்பது நாட்கள் கஷ்டப்பட்டு, நாய்மாதிரிக் குரைத்துக்கொண்டே செத்துப்போனார். அந்தக் காலத்தில் நாய் கடித்தால் ஊசி குத்திக்கொள்கிற பழக்கம் இருந்ததில்லை.

செந்தியின் மாமா செந்திக்குமார பிள்ளையை கோட்டி நாய் ஒன்று கடித்துவிட்டது. அவரும் ரொம்பவும் கஷ்டப் பட்டார். எத்தனையோ 'பண்டுவம்—பக்குவம்' எல்லாம் பார்த்ததில் குறை இல்லை. இருந்தாலும் சாகிறவரை அவருக்கு ஒரு மாதிரியான இரைப்பு இருந்தது. அமாவாசைகளில் வாயோரம் நுரை கக்கிக்கொண்டு, மயக்கமாகக் கிடப்பார். ஒரு இழுப்பு நோய் வந்தது. முடிவில் சாவு அவருக்கு விடுதலை அளித்தது.

செந்தியின் பெரியப்பா செந்திவேல் பிள்ளையையும் ஒரு சமயம் வெறி நாய் கடித்துவிட்டது. வயிற்றில், தொப்புள் அருகில் ஊசிபோட்டுக்கொண்டார். நாற்பது நாட்கள். ஊசி என்றால் எப்படியாப்பட்ட ஊசி! கோணி ஊசி பருமன் இருக்கும்! அதை வைத்து, தொப்புளைச் சுற்றி நாற்பது ஊசிகள். தினந்தோறும் வலி சகிக்காது. அப்படிக் குத்திக் கொண்ட பிறகாவது சுகம் கண்டாரா? குணமாகிவிட்டது என்றுதான் எல்லோரும் நினைத்தார்கள். ஒருநாள்—ஏதோ விஷநாள் தான்—கண்ணாடியைப் பார்த்துக்கொண்டு, ரேசரை வைத்து தாடி மீசையை சிரைக்க ஆரம்பித்தார். லேசாக வெட்டிவிட்டதோ, காயம் பட்டு ரத்தம் கசிந்ததோ தெரியலே. உடனே லொள்—லொள்ளு குரைக்கத் தொடங்கிவிட்டார். குரைத்துக்கொண்டே கிடந்து, வலிப்பு கண்டு, செத்தேபோனார்.

இப்படி செந்தியின் பாட்டியும், அத்தையும், பெரியம்மாவும் அடிக்கடி சொல்லிச் சொல்லி அவன் உள்ளத்தில் பயம் விதைத்துப் பயிரிட்டு வந்தார்கள்.

'நம்ம குடும்பத்துக்கே இது ஒரு சாபக்கேடு மாதிரி. யாரு வயிறு எரிந்து ஏசினார்களோ! நம்ம குடும்பத்து முன்னோரிலே எந்தப் புண்ணியவான் எவர் குடியைக் கெடுத்தாரோ! அல்லது எந்த ஏழை எளியதை நாயைவிட்டு விரட்டி விரட்டிக் கடிக்கப்பண்ணி சித்திரவதை செய்தாங்களோ? அந்தப் பாபம் இப்படி நம்ம குடும்பத்து மேலே கவிந்துகிடக்குது. எத்தனை தலைமுறைக்கு இதுமாதிரிப் பழிவாங்கப் போகுதோ?' இதுதான் செந்தியின் பாட்டி அகிலாண்டத்தம்மாளின் ஓயாத புலப்பமாக இருந்தது, அவள் சாகும்வரை.

செந்தி சுயமாக எண்ணிப் பார்க்கும் ஆற்றல் பெற்று விட்டதும், இந்த ரகமான பேச்சுக்கள் அவனுள் விதம் விதமான பய அரிப்புகளை வளர்த்தன.

நாயினால் கடிக்கப்பட்டு, கஷ்டப்பட்டவர்கள்—அவனுடைய தாத்தா, மாமா, பெரியப்பா—எல்லோரும் 'செந்தி'

என்று பெயர் உடையவர்களே; தாத்தா பெயர்தான் தனக்கும் இடப்பட்டுள்ளது; எனவே, செந்தில்நாயகமான தானும் என்றைக்காவது ஒருநாள் நாய்க்கடிக்கு ஆளாகக்கூடிய சாத்தியக்கூறுகள் இருக்கின்றன...

தாத்தா பெயர் இடப்பட்டிருப்பதனுல், தானும் செந்தி என்று பெயர் பெற்றிருப்பதால் தன்னையும் நாய் ஏன் கடிக்க வேண்டும் என்று அவன் தன்னையே கேட்டு, அறிவின் துணையோடு தைரியம் அடைவதற்குப் பதிலாக, அர்த்தமற்ற—தெளிவற்ற—இனம்புரியாத மன உளைச்சலுக்கும் ஒருவித பயத்துக்கும் ஆளாகி வந்தான், சிறுவயசிலிருந்தே.

சிறு வயது முதலே நாயிடம் அவனுக்கு உள்ள பயம் வளர்வதற்கான சந்தர்ப்பங்களும் அவ்வப்போது ஏற்பட்டுக் கொண்டிருந்தன.

சோறு வேண்டாம் என்று அடம்பிடிக்கும் சிறுவனை அவனுக்கு, போக்குக்காட்டி சாதம் ஊட்டுவதற்காக அவனுடைய அம்மா, 'தோ தோ தோக்குட்டி! துரைமார் வீட்டு நாய்க்குட்டி! சின்னதுரை வேட்டைக்குப்போருன், நீயும் கூடப் போ நாய்க்குட்டி!' என்று ராகமிழுத்து நீட்டி முழக்குவது வழக்கம். ஒரு நாய் அந்தப் பக்கம் வந்து வாலை ஆட்டிக்கொண்டு நிற்கும். சோற்றுக் கவளத்தை அதற்குப் போடுவதுபோல் காட்டி, 'இந்தா பாரு, நாயி புடுங்கிக்கிடப் போகுது! நீ சாப்பிட்டுவிடம்மா' என்று தன் இடுப்பில் இருக்கும் செந்தியைக் கெஞ்சிக் குழையடித்து வாயில் சோற்றை ஊட்டிவிடுவாள். கடைசிவரை நாய்க்குச் சோறு போடாமலே இருந்துவிடுவாள். சில சமயம் கொஞ்சம் போட்டாலும் போடுவாள்.

ஒரு சமயம் அவள் குரலைக் கேட்டு வேறொரு நாய் வந்தது. எதிர்பார்த்தபடி நின்றது. கண்களில் ஏக்கம் படர அவள் கையையும் செந்தியின் வாயையும் கவனித்துக் கொண்டிருந்தது. அவள் சோறு போடமாட்டாள் என்று அதன் உணர்வு அதற்குப் புலப்படுத்தவும், அந்தத் தடி நாய் 'உர்ர்' என்று உறுமிக்கொண்டு, அம்மாவின் இன்னெரு

கையில் இருந்த தட்டுமீது பாய்ந்தது. அந்தக் கைதான் செந்தியையும் இடுப்பில் வைத்துப் பற்றிக்கொண்டிருந்தது.

நாயின் பாய்ச்சல் வேகத்தையும் பற்களையும், அவ்வேளைய அதன் முகத் தோற்றத்தையும் கண்ட அம்மா அஞ்சி நடுங்கி, தட்டைச் சோற்றுடன் கீழே போட்டுவிட்டாள். நல்லவேளை, பிள்ளையை கீழே போடவில்லை. நாய் சோற்றைக் கவ்வத் திரும்பியது. என்றாலும், அதன் கால் நகம் செந்தியின் காலில் லேசாகப் பரண்டிவிட்டது. அது வெகுநேரம் எரிச்சல் தந்தது. நாயின் அந்நேரத்திய பயங்கரத் தோற்றமும் உறுமல் பாய்ச்சலும் செந்தியின் மன ஆழத்தில் பதிந்து விட்டன. பயம் வளர்த்தன. அந்தப் பயத்தை வளர்ப்பதாக அமைந்தன தொடந்து பெரியவர்கள் பேசிய பேச்சுக்கள்.

பையன்களோடு சேர்ந்து பள்ளிக்கூடத்துக்கோ அல்லது வேறு எங்கோ போகிறபோது, எவனாவது ஒரு வால்ப்பயல் கல்லை எடுத்து தெருவோடு போகிற நாய்மீது வீசுவான். கல்லெறிபட்ட நாய் ஒரு காலை நொண்டிக்கொண்டு, வாள் வாள் எனக் கத்தியபடி ஓடும். அது சிறுவர்களுக்கு வேடிக்கை. ஆனால் செந்திக்குப் பயமாகத்தான் இருக்கும்.

அடிபட்ட நாய், அப்புறம் செந்தி தனியாகப் போகும் போது முறைக்கும். உர்ரென உறுமிக்கொண்டு ஓரமாக விலகிச் செல்லும். செந்தியின் பயம் அதிகரிக்கும். தானே தான் கல்லை அதன்மீது வீசியவன் என்று எண்ணி அந்த நாய் தன்மேல் விழுந்து பிடுங்குமோ என்று அவன் மனம் பதைக்கும்.

ஒருதடவை இரண்டு நாய்கள் வெறித்தனமாகச் சண்டையிட்டுக்கொண்டிருந்தன. அவற்றின் கோபமும் கொதிப்பும் பற்களிலும் குரலிலும் வெளிப்பட்டன. அந்த வழியாகப் போக நேர்ந்த சிறுவன் செந்தி பயத்தால் நடுநடுங்கினான். யாரோ கல்லை வீசி நாய்களை விரட்டவும், திக்குக்கு ஒன்றாக அவை ஓடியபோது, ஒரு நாய் செந்தியின்மீது இடித்துக் கொண்டது. அது வேகமாக ஓடிவந்து மோதிய இடத்தில், அவன் காலில் வலி எடுத்தது. நாயின் மண்டை இடித்த இடம்

அது. அதைவிட அதிகமாக பயம் கவ்விப் பிடித்தது அவன் உள்ளத்தில். அந்த மிரட்சியில் அவனுக்கு ஜுரம்கூடக் கண்டு விட்டது.

அதிலிருந்து நாயிடம் உள்ளூற அவனுக்கு இருந்த பயமும் கனம்பெற்று வளர்ந்து அவனது அமைதியை குலைத்துக்கொண்டிருந்தது. அவன் பெரியவனாகி, அவனுக்குக் கல்யாணம் ஆகி, அவன் குடும்பத் தலைவனாய் இரண்டு மூன்று குழந்தைகளின் தந்தை ஆகிவிட்ட பின்னரும், செந்தியின் உள்ளத்தில் அந்தப் பயம் அரித்துத் தொந்தரவு கொடுப்பது மறையவுமில்லை; குறைந்துபோகவும் இல்லை. நாயைக் கண்டால் அவனுக்கு எப்போதும் பயம்தான்.

தெருவில் எங்காவது நாய் குரைக்கும் சத்தம் கேட்டாலே, இரவில் அவன் தூக்கம் கெட்டுப்போகும். ஏதாவது ஒரு தெருவில் வெறிநாய் அலைகிறது என்று கேள்விப் பட்டால் போதும்; அவன் அந்த வீதியின் பக்கமே போக மாட்டான். சுற்றி வளைத்து, சந்து பொந்துகளைக் கடந்து, போகவேண்டிய இடம் போவான்.

'நாய் கடித்தால், அப்புறம் யார் படுறது? அதிலும், பைத்தியம் பிடித்த நாய்!' என்று முணுமுணுப்பான் செந்தி.

செந்தி ஒரு மருந்துக் கடையில் வேலை பார்த்தான். தினம் இரவு ஒன்பது மணிக்குமேல்தான் அவன் வீடு திரும்ப முடியும். சைக்கிளில்தான் போய்வந்தான். அப்படி சைக் கிளில் வரும்போது, மேலத் தெரு அருணசலம் பிள்ளை வீட்டின் பெரிய நாயின் நினைப்பு அவனை உளம் நடுங்க வைக்கும்.

அது பெரிய நாய். கறுப்பாக, பார்ப்பதற்கே பிசாசு மாதிரி. அதன் கண்கள் வெறிபிடித்தவைபோல, என்னவோ தினுசாகக் கூர்ந்து நோக்கும். யாரைக் கண்டாலும் உறுமும். புதிதாக யாராவது தெருவோடு போனால், திண்ணையில் படுத்துக்கிடக்கும் அந்த நாய் எழுந்து நின்று குரைக்கும். சைக்கிள் ஓட்டிச் செல்வோர் பேரில் அதற்கு ஒரு வெறுப்பு. குரைத்துக்கொண்டே சைக்கிளின் பின்னே ஓடும். சைக்கிள்

தெருவைக் கடந்து திரும்பி மறைகிறவரை துரத்திச் சென்று, அதை விரட்டிவிட்டோம் என்ற திருப்தியோடு அந்த நாய் தனது இடத்துக்கு வந்து நிம்மதியாகப் படுக்கும்.

ஒருதரம் அது செந்தியின் சைக்கிளை துரத்தியது. அவன் வேகமாய் மிதிக்க, நாயும் பாய்ந்து பாய்ந்து குரைத்தது. அப்படித் தாவிக் குதித்துக் குரைத்த நாயின் பற்களில் இரண்டு செந்தியின் பாதத்தில் லேசாகப் பதிந்தன. அவன் பதறிப் பயந்துபோனான்.

'நாயின் பல் பட்டுவிட்டதே. இது நிஜமான கடிதானா? இப்படி லேசாகப் பட்டாலே விஷம்தானா?' என்றெல்லாம் செந்தி குழம்பித் தவித்தான். பலபேரிடமும் விசாரித்தான். நாயின் பல் பட்ட இடத்தில் முதலில் சுண்ணாம்பைத் தடவினான். பிறகு அவரும் இவரும் சொன்னார் என்று எதை எதையோ தடவி வைத்தான். நல்ல வேளையாக ஒன்றும் பண்ணவில்லை.

என்றாலும் அந்தக் கறுப்பு நாயை நினைத்தாலே செந்தியின் உள்ளமும் உடலும் பதறுவது தவிர்க்க இயலாதது ஆகி விட்டது. அந்த நாயின் கண்களில் படாமலே வர அவன் பெருமுயற்சிகள் செய்வதும் இயல்பாயிற்று.

தெருமூலையில் வரும்பொழுதே கறுப்பு நாய் திண்ணையில் கிடக்கிறதா என்று அவன் பார்வை துழாவும். நிலாக் காலம் என்றால்—அல்லது அந்த வீட்டின் வாசல் விளக்கு எரிந்து கொண்டிருந்தால்—நாய் கிடப்பது தெரியும். முன்னிருட்டுக் காலத்திலும், விளக்கு இல்லாத நாட்களிலும், நிச்சயமாகச் சொல்ல முடியாது.

அத்தகைய இரவுகளில் செந்தி, எதுக்கு வீண் ஆபத்து என்று எண்ணி, வடக்குத் தெரு வழியே திரும்பி, நடுத்தெரு வந்து சுற்றி, தன் வீடு இருக்கிற குறுக்குத் தெரு சேருவான். வீண் சுற்றுத்தான். அதற்கு என்ன செய்வது? கரிமுடிந்து போகிற அந்தக் கறுப்பு நாய் சைக்கிள் பின்னே ஓடி வந்து, காலைக் கவ்விப்பற்றி, கடித்துக் குதறிவிட்டால்? நாய்க்கடி ரொம்ப மோசமான விஷயம்.

இது விஷயமாக மேலத் தெருக்காரர்களிடம் பேசிய போது, 'இது சும்மா ஓடிவரும். அவ்வளவுதான். குரைக்கிற நாய் கடிக்காது!' என்று தைரியம் சொன்னார்கள்.

'பழமொழி நமக்குத் தெரிகிறது. நாய்க்குத் தெரியுமா?' என்றான் செந்தி. அவன் பேச்சை நகைச்சுவையாக எடுத்துக் கொள்ள மனமில்லாதவர்கள் 'பெரிய அகராதி! ஹெட்வெயிட்! இவன் நாயிடம் ஏதாவது சேட்டை பண்ணியிருப்பான். அதனால்தான் அந்த நாய் இவனைக் கண்டால் விரட்டுது' என்று முணுமுணுத்தார்கள்.

'ஓடுகிறவனைக் கண்டால் விரட்டுகிறவனுக்கு உற்சாகம். நம்மைக் கண்டு இவன் பயப்படுகிறான் என்று நாய்க்குத் தெரிந்துவிட்டது. நாய் அறிவுள்ள பிராணி. இதுமாதிரி விஷயங்களை அது எளிதில் உணர்ந்துவிடும். அதனாலே அது இவனை ஓட ஓட விரட்டுது. அதுக்கு ஜாலி. சில நாய்கள் பயந்து ஓடுகிற மாட்டையும் கழுதையையும் விரட்டி விரட்டித் துரத்துமே அப்படித்தான் இந்த நாயும் விளையாடுது' என்று ஒருவர் அபிப்பிராயப்பட்டார்.

நாய்க்கு அது விளையாட்டாக இருக்கலாம். செந்திக்கு பயத்தை அதிகப்படுத்தி, அமைதியை இழக்கச் செய்யும் வினை ஆகத்தான் அது தோன்றியது.

நண்பர் ஒருவர் செந்தி வீட்டுக்கு அவ்வப்போது வருவது உண்டு. அவரோடு அவர் வளர்க்கும் சிறு நாயும் வரும். குட்டி என்ற நிலையைக் கடந்த, ஆயினும் முற்றிலும் பெரிதாகிவிடாத, அந்த நாய் முதலில் மோந்து பார்க்கும். பிறகு சுற்றிச் சுற்றி வரும். அதற்கு குஷி பிறந்துவிடும். மேலே விழுந்து, பொய்க்கடி கடித்து, துள்ளும்.

அப்படி அச் சிறு நாய் விளையாடுகிறபோது செந்தியின் மனம் பதைபதைக்கும். அவன் நெற்றியில் வேர்வை துளிர்க்கும். 'சவத்துப்பயல் நாய், கடித்துப்போடும் போலிருக்கே. பல்லைப் பாரு. ஊச்சி ஊச்சியாய்' என்று அவன் மனம் அச்சக் குரல் கொடுக்கும்.

நண்பர் சிரித்தபடி சொல்லுவார்: 'சும்மா அது விளையாடுது. எல்லாரிடமும் இப்படித்தான் பழகும். கடிக்காது. கடிக்கிற மாதிரி பொய்க்கடி கடித்து விளையாடுறதிலே அதுக்கு ஜாலி!'

அது பொய்க்கடி என்று கண்டதா; நிஜக்கடி என்று கண்டதா! இப்படிக் கடித்துக் கடித்து நிஜமாகவே ஒருநாள் பற்களை ஆழமாய் அழுத்தமாய்ப் பதித்துவிடும் என்று செந்தியின் மனம் புலம்பும். ஆயினும் அவன் அதை வெளியே சொல்லமாட்டான், 'இவனுக்கெல்லாம் என்னத்துக்கு நாயி?' என்று மனசுக்குள் சலித்துக்கொள்வான் செந்தி.

விழிப்புநிலையில் மட்டுமின்றி, தூக்கத்திலும் நாய்கள் செந்தியைப் பாடாய்ப் படுத்தி, பம்பரமாய் ஆட்டிவைத்தன. பயங்கரமான நாய் தன்னை துரத்திக் கடிக்க வருவது போலவும், வெறி நாய் காலைக் கவ்வி சதையைக் கடித்துக் குதறுவது போலவும், ஓநாய் போன்ற தோற்றமுடைய தடித்தடி நாய்கள் சைக்கிளில் செல்லும் அவனை விரட்டி வேட்டையாடிச் சூழ்ந்துகொண்டு குரைத்து நெருங்குவது போலவும், இன்னும் பலவிதமாகவும் அவன் கனவுகள் கண்டான். ஒவ்வொரு கனவும் நிஜமாகவே நிகழ்வதுபோல் துயில் நிலையில் அவனுக்குப் படும். அவ்வேளையில் அவன் அனுபவிக்கும் பய உணர்வு அவனை அலறவைத்து விழித்தெழும்படி செய்துவிடும். வேர்க்கும் உடல் உதறலெடுக்க அவன் எழுந்து குறுகுறு என்று உட்கார்ந்திருப்பான்.

ஏதாவது ஒரு நாய் பயங்கரமாகப் பாய்ந்து என்றாவது ஒரு நாள் தன்னைக் கடித்துவிடும்; நாய்க் கடி ரொம்ப மோசமானது; அதனால் அவன் மிகுந்த வேதனை அனுபவிக்க நேரிடும் என்று அந் நேரங்களில் எண்ணிக் குழம்புவான்.

செந்தியின் மனமே அவனுக்கு மோசமான துணையாக இருந்தது.

அன்று அவனுக்கு 'மனசே சரியில்லை.' தெளிவற்ற ஒரு கலவரம் அவன் உள்ளத்தில் காலையிலிருந்தே நிறைந்து நின்றது. அந்த ஊரில் வெறிபிடித்த நாய் ஒன்று வடக்குத்

தெருவில் இரண்டு மூன்று பேரைக் கடித்துவிட்டு ஓடிவிட்டது என்றும், அதை அடித்துக் கொல்வதற்காக ஏகப்பட்ட பேர் கைகளில் தடிக்கம்புகள் விறகுக்கட்டைகள் மண்வெட்டி கடப்பாறை சகிதம் சுற்றித் திரிகிறார்கள் என்றும் அவன் காதிலும் செய்தி விழுந்தது. அது அவன் மனக் குழப்பத்தை அதிகப்படுத்தியது.

பைத்தியம் பிடித்த நாய் மனிதர்கள் கையில் சிக்காமல் ஊருக்கு வெளியே கிழக்கே பார்த்து ஓடிவிட்டது என்றும் அவன் அன்று மாலை கேள்விப்பட்டான். அவனுக்கு இனம் புரிந்துகொள்ள முடியாத ஒரு பீதி உள்ளத்தில் கனத்தது.

அன்று வேலை கொஞ்சம் அதிகமாக இருந்தது. வீடு திரும்பும்போது மணி இரவு பத்து ஆகிவிட்டது. அன்று செந்தி சைக்கிள் எடுத்துச் செல்லவில்லை. சைக்கிளில் ஏதோ சிறு கோளாறு.

'நடந்துதானே போகிறோம்; மேலத்தெரு வழியாகவே போகலாம். கறுப்பு நாய் அநேகமாக திண்ணையில் இருக்காது' என்று எண்ணிக்கொண்டு, அவன் அந்தத் தெரு வழியே நடந்தான்.

தூரத்தில் வரும்போதே நாய் குரைக்கத் தொடங்கி விட்டது.

'நாசமாப்போற நாய் இங்கேதான் கிடக்குதா?' என்று அவன் மனம் முனகியது.

அவன் வேகமாக நடக்கலானான்.

நாய் திண்ணைமீது எழுந்து நின்று பலமாகக் குரைத்தது, ஊளையிட்டது.

அதனால் எரிச்சலுற்ற யாரோ, 'சீ சனியனே, சும்மா கிட. இல்லேன்னா வெளியே போய்த் தொலை' என்று கத்தினார்கள்.

செந்தியின் வாயும் 'சீ!' என்றது. உடனேயே, நாம் இப்படிச் சொல்லியிருக்க வேண்டாமே என்று அவன் மனம் கிச்சிட்டது.

நாய், உள்ளேயிருந்து ஆள் கத்தியதனலோ அல்லது எதேச்சையாகவோ, திண்ணையிலிருந்து குதித்துத் தெருவுக்கு ஓடி வந்தது.

அதே சமயத்தில் அந்த இடத்துக்கு வந்திருந்த செந்தி, தான் 'சீ' என்று சொன்னதால் நாய் வெகுண்டு தன்னைக் கடிக்க ஓடிவருகிறது என்று எண்ணிவிட்டான். அவன் பயம் அதிகரித்தது.

அவ் வீட்டின் வெளி விளக்கு சிந்திக்கொண்டிருந்த மங்கல் ஒளியில் நாயின் கண்கள் கோபக் கொள்ளிகள் போலவும், அதன் கூரிய பற்கள் சதையில் கவ்விக் குதறத் தயாராகிவிட்ட வெறுப்புச் சூரிக்கத்திகள் போலவும் அவனுக்குப் பட்டன. அவன் உடல் நடுங்கி படபடத்தது. அவன் 'ஐயோ அம்மா செத்தேன்! நாய் கடிக்க வருதே!' என்று பயங்கரமாகக் கதறிக்கொண்டு ஓடத் தொடங்கினன்.

அவன் ஓடவும் நாய் கோரமாகக் குரைத்தபடி மூர்க்கமாய் அவனைத் தொடர்ந்து ஓடியது.

மனித ஓலமும் நாயின் வெறித்தனமான குரைப்பும், கதவை அடைத்துக்கொண்டு வீடுகளினுள் இருந்த தெருக்காரர்களை வெளியே இழுத்தன. அங்குமிங்குமாகக் கதவுகள் திறக்கப்படும் ஓசை எழுந்து கூச்சலில் கலந்தன.

'ஓடாதேயுமய்யா. ஓடினல் நாய் துரத்திக்கிட்டே வரும்', 'நில்லு ஏ செந்தி', 'அந்த இடத்திலேயே நில்லு' 'பயப்படாமல் மெதுவாப் போங்க...' இப்படிப் பலவாருன உபதேசங்கள் வெடித்துச் சிதறின.

தன் மனபயம் புடதியைப் பிடித்துத் தள்ள, கடிக்க வரும் நாயின் பிடியில் சிக்கிவிடாமல் வேகம் வேகமாய் ஓடிப் போய், தன் வீட்டை அடைந்து, பத்திரமாய் கதவை

சாத்தித் தாளிட்டுக்கொண்டு பாதுகாப்பாய் இருக்க வேண்டும் என்ற எண்ணம் முடுக்க, ஓட்டப் பந்தயத்தில் ஈடுபட்டவன் கடைசிக் கட்டத்தில் முண்டியடித்து ஓடுவது போல், செந்தி ஓடினான். ஓடிக்கொண்டேயிருந்தான்.

கறுப்புத் தடிநாய் மண்டை வெடித்துப் போகிறமாதிரிக் குரைத்தபடி அவன் பின்னேயே ஓடியது.

'எழுத்தாளன்', மார்ச் 1974

# அருமையான துணை

பார்த்துப் பார்த்து அலுத்துவிட்ட வெள்ளைச் சுவர்கள். அவற்றின்மீது தொங்கும் பழகிப்போன படங்கள். சுவர்களின் மூலைகளில் ஒட்டிக்கொண்டிருக்கும் நூலாம்படை. அறையில் உள்ள பொருள்கள். எல்லாமே சலிப்பு ஏற்படுத்தின, படுத்த படுக்கையாய்க் கிடந்த புன்னைவனத்துக்கு.

சீக்காளியாகி விட்ட அவரைப் பார்ப்பதற்கென்று எப்போதாவது வந்த சொந்தக்காரர்கள்கூட அவருக்கு அலுப்பும் சலிப்புமே உண்டாக்குகிறார்கள். பெரியவர், பெயர் பெற்றவர். 'ரொம்ப பெரிய மனிதர்' என்ற நினைப்போடு வந்துபோன அவர்கள் ஒருவித பயமும் பக்தியும் கொண்டவர்களாக, அல்லது மதிப்பும் மரியாதையும் காட்டுகிறவர்களாக, நடந்துகொண்டார்கள். நோயாளியிடம் வழக்கமாகக் கேட்கப்படும் கேள்விகளைக் கேட்டுக்கேட்டு, அவரவருக்குத் தோன்றும் யோசனைகளை அவர்கள் வறண்ட குரலில் சொல்வதை சகிப்புத் தன்மையோடு ஏற்று ஏற்று, புன்னைவனம் அலுத்துப்போயிருந்தார். அடிக்கடி எரிச்சலுற்றார். அதனால் சிடுசிடுத்தார்.

'சீக்கு யாருக்கும் வாறது தான். அதுக்காக இப்படியா நாய்க்குணம் பெறணும்?' என்று அவரைப் பார்க்க வந்துபோனவர்கள் பேசிக் கொள்ளலானார்கள். வருவதைப் படிப்படியாகக் குறைத்துக் கொண்டார்கள்.

புன்னைவனம் விரும்பிய தனிமை அவருக்குக் கிடைத்தது. நாளாக ஆக அதுவே அழுத்தும் சுமைபோல் கனத்துக் கவிந்திருப்பதாக அவருக்குத் தோன்றியது. முன்பு ஏன் இவ்வளவு பேர் நம்மைப் பார்க்க வருகிறார்கள்; அமைதியைக் கெடுக்கிறார்கள் என்று சிடுசிடுத்த அவர் மனம் இப்போது

'எல்லோரும் நம்மை இப்படி அம்போன்னு விட்டுவிட்டார் களே! யாருமே பார்க்க வருவதில்லையே?' என்று சிணுங்கியது.

பெரிய வீட்டில், ஒதுங்கியிருந்த தனி அறையில்தான் புன்னைவனம் தன் நேரங்களைக் கழிப்பது வழக்கம். படிப்பது, எழுதுவது, சிந்தனை செய்வது—இதற்கே அவருக்கு நேரம் போதுமான அளவு இருந்ததில்லை. தனது அமைதியை எவரும் கெடுப்பதை அவர் விரும்பியது கிடையாது. யாரிடமும் ஒட்டிப் பழகும் இயல்பு அவருடையது அல்ல. 'என்னைப் பார்த்து பேச வருகிறவர்கள் என்னை கௌரவிக்கிறார்கள். அவரவர் அலுவலை கவனித்துக்கொண்டு விலகியிருப்பவர்களே எனக்குச் சந்தோஷம் தருகிறார்கள்' என்று வெளிப்படையாகப் பேசும் பண்பினர் அவர்.

ஆயினும், அவரை கௌரவித்துப் பார்க்க வருகிறவர் களிடம் அவர்களது சந்தோஷத்துக்காக இனிமையாக உரையாடிப் பொழுதுபோக்க அவர் மறுத்துவிடுவதுமில்லை. வந்தவர்கள் போன பின்னர், 'இவர்கள் வராமலே இருந் திருந்தால், என் பொழுது இன்னும் பயனுள்ளதாகக் கழிந் திருக்கும்' என்று அவரது உள்ளத்தில் எழும் எண்ணத்தை அவர் செல்லப் பிராணியைத் தடவிக் கொடுத்துச் சீராட்டுவதுபோல் வளர்த்து வந்தாரே தவிர, இது வேண்டாத நினைப்பு என்று மண்டையிலடித்து அமுக்கிவிட ஆசைப்பட்டதில்லை.

கடுமையான நோய் கண்டதும் அவர் தனது அறைக் குள்ளேயே முடங்கிவிட நேர்ந்தது. எதுவும் செய்ய முடியாமல், எழுதப் படிக்க இயலாமல், விரும்பியபோது காட்சி இனிமைகளை நாடி எங்கும் போகச் சக்தி இல்லாமல், மாசக் கணக்கில் புன்னைவனம் கட்டிலே கதி என்று விழுந்து விட்ட பிறகு, சூழ்நிலையும் பிறவும் சதா அலுப்பு ஏற்படுத்து வனவாக அமைந்துவிட்ட பின்னர், அவர் உள்ளம் ஏங்க லாயிற்று. கோடை கால புழுக்கத்தில் தவிக்கும் உடல் புளகிதம் உண்டாக்கக்கூடிய மென்காற்றுக்காக ஏங்குவது போல, இதம்தரக்கூடிய இனிமையை அவாவியது அவர் மனம்.

பெரியவர் புன்னைவனத்தின் உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டு, அவர் உள்ளத்துக்கு மகிழ்வளிக்கும் விதத்தில் செயல்புரியக்கூடியவர்கள் எவரும் இல்லை. வீட்டில் இருந்த வர்கள் தங்கள் கடமைகளை ஒழுங்காகச் செய்தார்கள். அவருக்குத் தேவையான பணிவிடைகள் குறையின்றி, வேளை பிசகாது நிறைவேற்றப்பட்டன. வாய் திறந்து அவர் வெளியிடும் விருப்பங்கள் உடனுக்குடன் பூர்த்தி செய்யப் பெற்றன. எனினும், குறிப்பறிந்து அவரது பெரும் குறையை நீக்கிவைக்கக்கூடிய திறமை மற்றவர்களுக்கு இல்லாமல் போயிற்று.

சில சமயங்களில், இளையவர்களில் யாரையாவது அழைத்து அவர் பேச்சுக்கொடுப்பார். அவர்கள் ஆசிரியரின் கேள்விகளுக்குப் பதில் சொல்லும் மாணவர்கள் மாதிரி, வேண்டா வெறுப்பாகவோ—கடமையே என்றோ முணமுணப் பார்கள். புத்தகம் எதையாவது எடுத்து உரக்கப் படிக்கு மாறு கோருவார். அவர்கள் 'கிழடுக்கு சும்மா கிடக்க முடியலே. சாகப்போற சமயத்திலும் புத்தக ஆசைதானு? நம்ம பிராணனை வாங்குது' என்று புகைந்து குமைந்தவாறு, சுரத்தில்லாமல் படிப்பார்கள்.

இளையவர்களின் மனப்போக்கைப் புரிந்துகொள்ளும் ஆற்றல் பெற்றிருந்த புன்னைவனம் அப்புறம் அவர்களை ஏவுவதை விட்டுவிட்டார். அவர்களும் அவர் இருந்த அறையின் பக்கம் தங்கள் நிழல்கூடப் படாதவாறு சிரத்தை யோடு கவனித்துக் கொண்டார்கள்!

எனவே, சுவர்களையும் படங்களையும் பழகிய காட்சி களையும் பார்த்து அலுப்புடன் கண்களை மூடிக்கொண்டு கிடப்பதைத் தவிர வேறு வழி இல்லை என்று ஆகிவிட்டது அவருக்கு.

அப்போதும் புன்னைவனம் சூழ்நிலை வெறுமையில் சலிப் புற்ற கண்களை மூடிக்கொண்டு கிடந்து பின் ஏதோ ஒரு குறு குறுப்பில் விழித்து, பார்வையை வாசலின் பக்கம் ஓட விட்டார். அங்கே ஒரு புதுமை பூத்திருந்தது.

அவர் கண்கள் அப்பக்கம் பார்ப்பதைக் கண்ட ஒரு சிறு முகம் பின்வாங்கியது. பிறகு மெதுமெதுவாக எட்டிப் பார்த்தது. கருவண்டுக் கண்கள் உணர்வோடு மின்னின. பிஞ்சு உதடுகளில் சிறு சிரிப்பு வெடித்தது.

அந்த இடத்தில் சிறு சூரியன் உதயமாகி ஒளிர்வதுபோல் அவருக்குத் தோன்றியது. இது யார் குழந்தை? இங்கே பிள்ளைகள் யாரும் வருவதில்லையே? அவர் மனம் அரித்துக் கொண்டது.

'நான் வரலாமா?' என்று மழலைக் குரலில் கேட்டு, பதிலுக்குக் காத்திராமலே உள்ளே வந்தாள், ஒரு சிறுமி. ஐந்து வயதிருக்கும். களையான முகம். அலைபாயும் கண்கள். சிரிப்பு சதா குமிழிடும் ஊற்றுப் போன்ற சிறு வாய்.

அறை நடுவில் வந்து, கைகளைப் பின்னால் கட்டியபடி நின்று, சுற்றிலும் நோக்கினாள். அங்குமிங்கும் வண்ணப் பூச்சிகள்போல் பாய்ந்து திரிந்த விழிகள் புன்னைவனத்தின் மீது தேங்கி நின்றன.

'நீ யாரு?' என்று கேட்டார் அவர்.

'உஷா' என்று பெயரைச் சொன்னாலே எல்லோருக்கும் தெரிந்துவிடும் என்றொரு நம்பிக்கையோடு பேசுபவள்போல் திடமாக அறிவித்தாள் அந்தச் சிறுமி.

'உஷான்னா...? சந்திரசேகரன் மகளா? இந்தத் தெருவிலே மூன்றாவது வீட்டிலே...'

அவர் பேச்சு அநாவசியமானதாகத் தோன்றியது அவளுக்கு. சிறு எரிச்சல் தொனிக்கக் கூறினாள்: 'நான்தான் உஷா, என் பேரு உஷா...உஷான்னு சொன்னப்புறமும் சும்மா புழுபுழுங்கிறியே!'

அந்தக் குழந்தையின் தன்னம்பிக்கையும் தைரியமும் அவருக்கு வியப்பளித்தன. ஏதோ பலிபீடத்தின் முன் வந்து அச்சத்தோடு தலைவணங்கி நிற்பவர்கள் போலவும், வரம் தரும் தெய்வத்தின் திருமுன்னிலையில் பக்தியும் பணிவும் காட்டுவது போலவும், வந்து மதிப்பும் மரியாதையும்

5

செலுத்தக்கூடிய பெரியவர்களையே கண்டு, சகித்து சலிப்புற்றுப் போயிருந்த பெரியவருக்கு இச்சிறு குழந்தையின் துணிச்சலான சுபாவம் புதுமையாக இருந்தது.

வெகு நாட்களுக்குப் பிறகு அவர் முகத்தில் புன்னகை ரேகையிட்டது. 'அப்படியா! ரொம்ப சந்தோஷம். இங்கே எங்கே வந்தே?' என்றார்.

'இந்த வீட்டிலே ரொம்பப் பெரிய ஆளு ஒருத்தரு இருக்காரு; அங்கே போய்க் குரங்குத்தனம் எதுவும் பண்ணி வைக்காதேன்னு அம்மா அடிக்கடி சொல்லுவா. ஆமா, ரொம்பப் பெரிய ஆளுதான்னு அப்பாவும் சொன்னு. இன்னொரு மாமாவும் சொன்னுங்க. இந்தத் தெருவிலேயே பெரிய வீடு இது. இதிலே இருக்கிற பெரிய ஆளு எப்படி இருக்கும்னு பார்க்க எனக்கு ரொம்ப ஆசை. அதுதான் வந்தேன். உனக்குத் தெரியுமா? அந்தப் பெரிய ஆளு எங்கே இருக்கு?'

தயங்காமல் பேசினுள் உஷா. துடிப்பான குழந்தைதான் என எண்ணிய புன்னைவனம் சிரித்தார். 'என்னைப் பார்த்தால் உனக்கு எப்படித் தோணுது? நான்தான் அந்தப் பெரிய ஆளுன்னு...'

அதற்குள் அவள் கத்தினுள்: 'பொய்யி...பொய் சொல்லுறே!...'

அப்போது அவள் கண்கள் குறுகி ஒளி வீசியதும், முகம் சிரிப்பால் அழகு பெற்றதும் வசீகரமாக இருந்தன.

'நான் ஏன் பொய் சொல்லப்போறேன்!' என்று இயல்பான குரலில் அவர் பேசினுர். அவருக்குக் கோபம் வரவில்லை. ஒரு விளையாட்டை ரசித்து, அதில் தானும் கலந்து கொள்ளும் ஈடுபாடுதான் உண்டாயிற்று.

'சும்மா சொல்லுறே, பெரிய ஆளு உன்னை மாதிரியா இருக்கும்! நீ தாத்தா கணக்கா இருக்கியே' என்றுள் உஷா.

'பெரிய ஆளு எப்படி இருக்கும் பின்னே?' என்று புன்னைவனம் கேட்டார்.

'பெருசா...ரொம்ப பெருசா...ஆனை மாதிரி, பனை மரம் மாதிரி...புள்ளைகளை எல்லாம் மிரட்டும்படியா... இந்தாத்தண்டி மூஞ்சி. இம்மாம் பெரிய மீசை. முண்டக் கண்ணு. ஏய் எங்கே வந்தே. சீ ஓடிப்போ, அடிப்பேன் உதைப்பேன்னு பேசிக்கிட்டு, அப்படியெல்லாம் இருக்கும். உன்னைப்போலெயா இருக்கும்? ஏஹே, பெரிய ஆளுன்னு எல்லோரும் பேசிப் பயப்படுற ஆளை நீ பார்த்ததேயில்லை போலிருக்கு!' என்று, உரிய நடிப்புகள், நொடிப்புகள், கண் உருட்டல்கள், கைச் சைகைகளோடு சொல்லி முடித்தாள் அவள்.

மிகவும் ரசிக்க வேண்டிய காட்சியாகத்தான் இருந்தது அது.

'எனக்குத் தெரியாதம்மா. அப்படியாப்பட்ட ஆளை நான் பார்த்ததேயில்லை' என்று அவர் தெரிவித்தார்.

'அப்போ உனக்கு இந்த வீடு இல்லையா? நீ இந்த வீட்டுக் குள்ளே எல்லாம் போயிப் பார்த்தது கிடையாதா?' என்று ஆச்சரியத்தோடு விசாரித்தாள் சிறுமி.

'ஹூங்! நான் எங்கே போறேன், வாறேன்! இந்த அறையிலேயே, இந்தக் கட்டிலிலேயேதான் இருக்கேன்...'

'அய்யய்யோ! உனக்கு எப்படிப் பொழுது போகுது? விளையாடதுக்கு யாராவது வருவாங்களா?' என்று அனுதாபத்தோடு, அக்கறையோடு கேட்டாள் உஷா.

அவளது முக மாறுதல்களும் குரல் ஏற்ற இறக்கங்களும் அவருக்கு இனிய விருந்தாக அமைந்தன. இது சுவாரஸ்ய மான குழந்தைதான் என்று அவர் மனம் வியந்தது.

'ஹூம்ப்! யாரு வாரு? இந்தக் கிழவனோடு பேசிப் பொழுதுபோக்க யாருக்குப் பிடிக்கும்!' இயல்பான அலுப்பு வெளிப்பட்டது அவர் பேச்சில்.

'நான் வாரேன் தாத்தா. நான் தொந்தரவு பண்ண மாட்டேன். அந்தச் சன்னல்கிட்டே உக்காந்து விளையாடிக் கிட்டிருப்பேன். நீயா பேசணும்னு நெனைச்சாப் பேசு,

இல்லையோ, கண்ணை மூடிக்கிட்டுத் தூங்கு. உனக்குத் தூக்கம் வரலேன்னு, நான் கதை சொல்லுவேன். எனக்கு நெறைய கதை தெரியும்...'

'அப்படியா! ரொம்ப நல்லதாப் போச்சு!' என்று உற்சாகமாகச் சொன்னார் புன்னைவனம். அவர் உள்ளத்தில் அவர் அதுவரை அனுபவித்திராத ஒரு கிளுகிளுப்பு ஏற்பட்டது.

இவ்வாறுதான் பிறந்தது அந்த விநோத நட்பு.

உஷா தனது பொழுதுகளை பெரும்பாலும் அங்கேயே கழிப்பதில் உற்சாகம் கண்டாள். அவள் ஒற்றைக் குழந்தை. அண்டை அயலில் அவளோடு சேர்ந்து விளையாடுவதற்கும், அவளைச் சேர்த்துக்கொண்டு ஓடி ஆடிக் களிப்பதற்கும் சம வயதுப் பிள்ளைகள் இல்லை. பெரிய பிள்ளைகள் 'இது சின்னப் புள்ளை. இதுக்கு விளையாடத் தெரியாது. நம்ம ஆட்டத்துக்கு இடைஞ்சலாகத்தான் இருக்கும்' என்று அவளை கூட்டிக் கொள்வதில்லை. வீட்டில் இருந்துகொண்டு அதையும் இதையும் எடுத்து, சாமான்களைக் கீழே தள்ளி ஓசைப் படுத்தியும் நாசப்படுத்தியும், அம்மாவிடம் ஓயாது தொண தொணத்தும் எரிச்சலூட்டுவது அம்மாவுக்குப் பிடிக்காது. 'புள்ளையாளு வெளியே போய் விளையாடும் கண்டிருக்கேன். இது வீட்டுக்குள்ளேயே கிடந்து தொல்லை கொடுக்குதே!' என்று அம்மா சீறுவாள். சிலசமயம் அடியும் கொடுப்பாள்.

இப்படியிருக்கிறதே என்று தனியாகத் தெருவில் திரிந்தால், வீடுவீடாக எட்டிப் பார்த்தால் அப்பவும் ஏகப்பட்ட குறைகூறல்கள், கண்டிப்புகள், போதனைகள். இதனால் எல்லாம் அலுப்புற்றிருந்த உஷாவுக்கு அமைதியான அந்த அறையும், கண்டிக்காமல்—குறைகூறாமல்—அவள் பேச்சைக் கேட்டுக்கொண்டு சும்மா படுத்திருக்கும் 'தாத்தா'வும் மனசுக்குப் பிடித்துவிட்டது வியப்பில்லை.

அவள் விளையாட்டுச் சாமான்கள் என்று கொண்டு வருபவை புன்னைவனத்துக்கு வேடிக்கையாகத் தோன்றும். உடைந்த கண்ணாடி, கோலிக்குண்டு, சோடாபாட்டில் மூடி,

பழைய தீப்பெட்டி என்று உபயோகமற்ற கழிவுகளை வைத்து அவள் தனி உலகம் படைத்து அதிலேயே மகிழ்வுடன் ஆழ்ந்துவிடுவதை அவர் சுவாரஸ்யமாகப் பார்த்துக் கொண்டே இருப்பார்.

'உனக்கு விளையாடறதுக்குப் பொம்மைகள் ஏதாவது வேண்டுமா?' என்று அவர் கேட்டார்.

'எனக்கு ஏன் பொம்மை? என் கிட்டேத்தான் நிறைய விளையாட்டுச் சாமான் இருக்கே!' என்று சொன்னவள், வீட்டுக்குப் போய், துருப்பிடித்த மூடியில்லாத தகர டப்பாக் களையும், டப்பாக்கள் இல்லாத மூடிகளையும், அவை போன்ற அநேக சாமான்களையும் ஒரு பையில் போட்டு எடுத்து வந் தாள். கீழே கொட்டினாள்.

'ஏ புள்ளே, இதை எல்லாம் இங்கே கொட்டி ஏன் இப்படி இடத்தை அசிங்கமாக்குதே?' என்றார் அவர்.

அவள் முகத்தை உம்மென்று வைத்துக்கொண்டு பேசினாள்: 'நான் உஷா. புள்ளெ இல்லே. என்னை உஷான்னு கூப்பிடணும். உஷான்னு கூப்பிட்டால்தான் ஊம்னு கேட்பேன். அப்புறம், நீதானே என் விளையாட்டுச் சாமான்களை எல்லாம் பார்க்கணுமின்னே. பையை விட்டுக் கீழே கொட்டாமல் எப்படிப் பார்க்க முடியுமாம்?'

உடனேயே குனிந்து அவசரமாக அனைத்தையும் அள்ளி பைக்குள் அடைத்தாள். 'நான் வீட்டுக்குப் போறேன்' என்று சொல்லிப் போய்விட்டாள்.

சரி, இந்தக் குழந்தை இனிமேல் இங்கே வராது என்று எண்ணிய புன்னைவனம் ஏமாந்தார். உஷா சிறிது நேரத்தி லேயே அங்கு வந்து சேர்ந்தாள். எட்டிப் பார்த்தாள். 'நீ தூங்குதியோன்னு பார்த்தேன். தூங்கலியா?' என்று கேட்டுச் சிரித்தாள்.

அந்தக் குழந்தையின் சிரித்த முகம் அவருக்குப் பிடித் திருந்தது. அதுவே ஒளிபொருந்திய ஒரு மலர்போல் விளங்கியது. அது அவர் உள்ளத்தில் பல மலர்களைப் பூக்க

வைக்கும் இளம் சூரியன் போலுமிருந்தது. அம் முகத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதே ஒரு சந்தோஷம்தான்.

உஷா புத்திசாலிக் குழந்தை. அழகான அச்சிறுமியை அவள் அம்மா காலையிலேயே குளிப்பாட்டி, எளிமையான, எனினும் வனப்பும் வசீகரமும் நிறைந்த, ஆடை அணிவித்து, தலைவாரி முடித்து, சுத்தமாக விளங்கும்படி செய்வதை ஒரு வழக்கமாகக் கொண்டிருந்தாள். ஆகவே அதைப் பார்ப்பது கண்ணுக்குக் குளுமையாகத்தானிருந்தது.

புன்னைவனம் அக்குழந்தையின் மகிழ்ச்சியை அதிகப் படுத்தலாமே என்று நினைத்தார். அவருக்கும் பொழுது போனது போலவும் இருக்குமே! எனவே, தாமரைப்பூ, கிளி, தென்னைமரம் என்று படங்கள் வரைந்து, வர்ணம் தீட்டி, உஷாவிடம் கொடுத்தார்.

வியப்பினால் அவள் கண்கள் விரிந்தன. ஆனந்தத்தால் முகம் ஒளிர்ந்தது. 'ஐயா, பூ! பச்சைக்கிளி! ரொம்ப ஜோராயிருக்குதே. நீயா போட்டே?' என்று ஆச்சர்யமாய்க் கேட்டாள்.

'ஊம்' என்று சொன்ன பெரியவர், அந்தக் குழந்தைக் காக, அவள் கண்முன்னாலேயே, மேலும் சில சித்திரங்கள் தீட்டினார். சந்தோஷம் சந்தோஷத்தை வளர்த்தது. இரண்டு பேருக்குமே சந்தோஷம்தான்.

உஷா பேராசைப்படும் குழந்தை அல்ல. பெருந்தீனி விரும்புவதுமில்லை. வரும்போதே வீட்டில் உணவு உண்டு வரும். 'சாப்பிட்டாச்சா?' என்று விசாரித்தால், 'ஊம். சாப்பிட்டாச்சு' என்று திருப்தியோடு சொல்லும். என்ன சாப்பிட்டேன் என்று தெரிவிக்கும்.

'இட்டிலி சாப்பிடுறியா?' 'உப்புமா தின்னேன்!' 'பாதித் தோசை?' என்று சமயத்துக்குத் தக்கபடி அவர் கேட்பார். உஷா தலையை அசைத்து, 'வேண்டாம். நான்தான் வீட்டிலே சாப்பிட்டாச்சே!' என்று உறுதியாக மறுத்து விடுவாள். இந்தக் குணம் புன்னைவனத்துக்கு மிகுதியும் பிடித் திருந்தது.

ஒருநாள்—உஷா அங்கு வர ஆரம்பித்த மூன்றுவது நாள்—'உனக்கு என்ன வேணுமோ கேளு. நான் தாரேன்' என்று அவர் அவளை ஊக்குவித்தார்.

அக் குழந்தையின் பதில் அவர் எதிர்பாராதது.

'எனக்கு வேறே ஒண்ணும் வேண்டாம். இந்த வீட்டை பூராவும் பார்க்கணும். உள்ளே போயி, இந்தப் பெரிய வீடு பூராவையும் சுத்திப் பார்க்கணும்.'

மனித மனசின் ஆசைகள் விசித்திரமானவை; எந்த மனசில் எப்படிப்பட்ட ஆசை மறைந்து கிடக்கும் என்று கணிப்பது இயலாத காரியம் என்று எண்ணினுர் அவர். வீட்டினுள்ளிருந்தவர்களில் ஒரு ஆளை அழைத்து, அக் குழந்தையின் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கும்படி பணித்தார்.

வீடு முழுவதையும், ஒவ்வொரு அறையாக—அடைத்துக் கிடந்த அறைகளையும் திறந்து திறந்து—நன்கு பார்த்து விட்டுத் திரும்பிய உஷா, 'பின்னே ஏன் எல்லாரும் அப்படிச் சொல்றுங்க?' என்று தனக்குத் தானே கேட்டுக்கொண்டாள்.

'என்ன விஷயம்?' என்றுர் பெரியவர்.

'இங்கே இல்லியே. எந்த அறையிலும் இல்லியே!' என்று ஏமாற்றம் தொனிக்கப் பேசினுள் அவள்.

'என்னது?'

'பெரிய ஆளுதான். அதை எங்கேயுமே காணோம்.'

புன்னைவனம் ரசித்துச் சிரித்தார். 'அதுக்காகத்தான் வீடு பூராவையும் பார்க்கணுமின்னியா? சரிதான் போ!' என்றுர். 'நீ நினைக்கிறபடி ஆளு யாருமே கிடையாது!'

'பின்னே எல்லாரும் சொல்றுங்களே!'

'ஏனோ சொல்றுங்க! எனக்கென்ன தெரியும்?' என்றுர் அவர்.

அச் சிறு பெண் அவரோடு ரொம்பவும் சகஜமாகப் பேசிப் பழகியது. அவரும் உஷாவோடு சுமுக உறவு கொண்

டாடினார். இது அந்த வீட்டில் உள்ள அனைவருக்கும் ஆச்சர்யமாகவே இருந்தது. அவர் குணத்தை நன்றாகத் தெரிந்து வைத்திருப்பதாக நம்பியவர்கள் அவரது இந்தப் போக்கைக் கண்டு அதிசயித்தார்கள்.

உஷா மற்றவர்களைப் பற்றிக் கவலைப்படவில்லை. அந்த ஒரு தடவைக்குப் பிறகு வீட்டுக்குள் போய்ப்பார்க்கவேண்டும் என்று ஆசைப்படவுமில்லை. அவளுக்கு, இஷ்டப்பட்ட போது, பிறர் தொந்தரவோ, கண்டிப்போ, பரிகசிப்போ இல்லாமல், தனியாக இருந்து மனம்போல் தானாகவே பேசி—தானே தோழிகளை உண்டாக்கியும் அவர்களை நீக்கியும், சட்டாம்பிள்ளைதனம் பண்ணியும் விளையாடுவதற்கு ஏற்ற இடம் கிடைத்திருந்தது. அவளை நச்சரிக்காமல், பிச்சுப் பிடுங்காமல், அதிகாரம் பண்ணாமல், வேலை ஏவாமல், சிவனேன்னு ஒதுங்கியிருக்கும் தாத்தா ரொம்ப நல்லவர். அவரிடமும் இஷ்டம்போல் பேச முடிந்தது. கதைகள் சொல்ல முடிந்தது. அவரை விட்டு போட்டு வீட்டுக்கு ஓடிப் போகவும் முடியும். அப்புறம் வேறென்ன வேண்டும்!

பெரியவருக்கு அந்தச் சிறு பெண் பொழுதுபோக்குத் துணை; அச் சிறுமிக்கு அவர் நல்ல விளையாட்டுத் துணை. இரண்டு பேருக்கும் இந்த ஏற்பாடு மனசுக்கு இதமாக யிருந்தது.

புன்னைவனத்துக்கு அவரது தனிமைப் புழுக்கம் அவ் இளம் தென்றலின் வருகையால் நீங்கியது. அவளது குழந்தைத்தனமான விளையாட்டுக்களும், பெரிய மனுஷி தோரணையில் அவள் பேசுகிற பேச்சுக்களும் அவர் உள்ளத் துக்கு உவகையூட்டின. புத்துணர்வு சேர்த்தன. அவர் புதுமையான இனிமைகளை, ஆனந்தங்களை உணரலானார்.

பொழுது போவது தெரியாமலே நாட்கள் நகர்ந்தன. நாட்கள் ஓடுவது தெரியாமலே வாரங்கள் பறந்தன.

ஒருநாள் உஷா துள்ளாட்டம் போட்டபடி வந்தாள். கையை மூடிவைத்துக்கொண்டே அவரருகில் போய், 'ஆ ஆக்காட்டு. உனக்கு ஒண்ணு தருவேன்' என்றாள்.

'என்னது? கையிலே என்ன வச்சிருக்கே?' என்று அவர் கேட்டும் பயனில்லை. வாயை ஆவெனத் திறந்தார். அவள் கையிலிருந்ததை அவர் வாய்க்குள் போட்டுவிட்டுக் கலீரிட்டுச் சிரித்தாள். குதித்தாள்.

அவர் வாயில் இனிப்பு. மனசில் கிளுகிளுப்பு. 'இந்த மிட்டாய்க்குத்தானு இந்தக் குதியாட்டம்!' என்ருர்.

'இது ஏன் தெரியுமா? இன்னிக்கு எனக்குப் பிறந்த நாள். ஆமா!' என்று உஷா உற்சாகத்தோடு சொன்ஞள். 'பார்த்தையா, புதுச்சட்டை. தலையிலே புது ரிப்பன். இன்று நான் புது உஷா' என்று குதூகலித்தாள்.

'அடடே, எனக்குத் தெரியாமல் போச்சே! நேத்தே சொல்லியிருக்கப்படாது?'

உஷா அவர் பேச்சைப் பெரிதுபடுத்தவில்லை. 'உனக்கு இன்னொரு மிட்டாய் வேணுமா? இதோ வச்சிருக்கேன்' என்று பெருமையாக எடுத்துக்காட்டினுள்.

'வேண்டாம் வேண்டாம். நீயே தின்னு. உனக்கு இன்னும் மிட்டாய் வேணுமின்னு காசு தாறேன். வாங்கிக்கோ.'

அவள் மறுத்துவிட்டாள். வழக்கம் போல் பேசினுள். விளையாடினுள். போனுள்.

அன்று மாலை உஷாவின் தந்தையிடம் ஒரு ஆள் வந்து, 'உங்களை பெரிய வீட்டு ஐயா இட்டு வரச் சொன்னுங்க' என்று தெரிவிக்கவும், அவர் திகைப்படைந்தார். 'ஏன்? என்ன விஷயம்?' எனக் கேட்டார்.

'எனக்குத் தெரியாது. என்னமோ உங்க குழந்தை விஷயமாகத்தானிருக்கும்' என்று அவன் சொல்ல, அவர் திகிலுற்ருர். 'ஏ சரசு, உஷா அங்கே போயி ஏதாவது விஷமம் பண்ணிட்டு வந்துதா?' என்று மனைவியிடம் விசாரித்தார்.

அவளோ 'எனக்கென்ன தெரியும்!' என்று நீட்டினுள். அவ்வேளையில் அங்கே நுழைந்த உஷாவை இழுத்து, 'ஏட்டி,

அந்தப் பெரிய மனிதர் வீட்டுக்குப் போகாதே. அங்கே போய் சேட்டை பண்ணுதேன்னு சொன்னேனு இல்லையா? நீ அங்கே போயி என்னட்டி பண்ணுனே?' என்று வெடுவெடுத்தார்.

'அதுல்லாம் ஒண்ணுமிராது ஐயா. முதலாளி ஏனோ உங்களை கையோடு அழைச்சிட்டு வரச் சொன்னுங்க' என்று கூறி, வேலையாள் முன்னே நடந்தான்.

சிறு மனப்பதைப்புடன் அவர் பின்னுல் போனுர். உஷாவும் குதித்துக்கொண்டு உடன் நடந்தாள். 'தாத்தாவை பார்க்கப் போறியா? அந்தத் தாத்தாவை உனக்கு முன்னுடியே தெரியுமா?' என்று தன் இயல்புப்படி சளசளத்துச் சென்ருள்.

'என்னவோ ஏதோ...ஏன் இப்படி வழக்கமில்லாத முறையிலே கூப்பிட்டு அனுப்பியிருக்கார்' என்று சந்தேகங்களை வளர்த்தபடி நடந்த தந்தைக்கு எரிச்சலாக இருந்தது அவள் போக்கு. 'பேசாம வாயை மூடிக்கிட்டு வரமாட்டே?' என்று அதட்டல் போட்டார் மகளைப் பார்த்து.

அவர் பயந்தபடி ஒன்றுமில்லை. புன்னைவனம் அன்புடன் அவரை வரவேற்ருர். ஒரு நாற்காலியில் உட்காரும்படி உபசரித்தார். அவர் தான் பணிவுடன் வணங்கி, மரியாதை காட்டி ஒதுங்கி நின்ருர். 'சும்மா உட்காரப்பா' என்று கிசுகிசுத்தாள் உஷா.

'இன்னிக்கு உஷாவுக்குப் பிறந்த நாளா? காலையிலே உஷா சொல்லப் போய்த்தான் தெரியும்' என்று புன்னைவனம் ஆரம்பித்தார்.

'ஆமாங்க. அஞ்சு போயி ஆறு வருது. இனிமேல்தான் ஸ்கூலிலே சேர்க்கணும். ஆருவது வயசு வந்தாத்தான் சேர்த்துக்கிட முடியும்னு கார்ப்பரேஷன் ஸ்கூலிலே சொல்லிட்டாங்க' என்று தேவை இல்லாத விவரங்களைக் கூறினுர் தந்தை.

'உஷா கெட்டிக்காரி. புத்திசாலி. பள்ளிக்கூடத்துக்குப் போகாமலே அவள் எவ்வளவோ விஷயங்கள் கற்று வச்சிருக்கா...'

'நான் உனக்கு எத்தனையோ கதைகள்லாம் சொன்னேன்லா!' என்று பெருமையோடு இழுத்தாள் உஷா. 'நீ கூட...'

'ஏட்டி, மரியாதையாப் பேசணும். அவங்களை நீ என்கக்கூடாது. நீங்கன்னு சொல்லணும். அவங்க எவ்வளவு பெரிய மனுஷரு...'

'தாத்தா ஒண்ணும் பெரிய மனுசரு இல்லே. நம்மை மாதிரி...'

அப்பாவுக்கு ஆத்திரம், குழப்பம். நாக்கைத் துருத்திக் கொண்டு பிள்ளையை அடிக்கப் போனார்.

புன்னைவனம் தான் அவசரமாகத் தடுத்தார். 'ஐயா சந்திரசேகரன், உஷா சின்னப்புள்ளெதானே. அதுக்கு இந்த வித்தியாசங்கள் எல்லாம் என்ன தெரியும்! குழந்தை இயல்பின்படி பேசிப் பழகுது. அதனாலேதான் எனக்கு அதை முதல் முறையே பிடித்துவிட்டது. இப்ப ஒரு ஒன்றரை மாசமா நான் சந்தோஷமா இருக்கிறேன்னு அதற்கு உஷா தான் காரணம். உஷா எனக்குத் துணையாக இங்கே வந்து, தினசரி பொழுது போக்கத் தொடங்கியதிலிருந்து நானே புது மனுஷன் ஆயிட்டேன். அதுக்காக என் நன்றியைத் தெரிவிக்கிற முறையிலும், அவள் பிறந்த நாள் வாழ்த்துக்களோடு ஒரு அன்பளிப்பாகவும், இதை கொடுக்கணுமின்னு தான் உங்களை அழைத்துவரச் சொன்னேன். உஷாவிடமே கொடுக்கலாம்னு தான் நினைத்தேன். அவள் வாங்கிக்கொள்ள மாட்டேன்பா. அப்படியே வாங்கிக்கொண்டாலும், நீங்களும் அவள் அம்மாவும் அவளை கண்டித்துக் கட்டுப்பாடு பண்ணுவீங்க என்று எண்ணி, உங்களிடமே விஷயத்தைச் சொல்லி இதைக் கொடுக்க விரும்பினேன், இந்தாங்க' என்று பரிசுப் பொருளைக் கொடுத்தார்.

அழகான, அருமையான, பட்டுக்கவுன். உஷாவின் தந்தை பிரமித்து நின்ருர். என்ன சொல்வது, எப்படி நன்றி அறிவிப்பது என்றே அவருக்குப் புரியவில்லை.

'இதென்ன இவங்க ரெண்டு பேரும் இப்படி இருக்காங்க. தாத்தா என்னென்னவோ சொல்லுது. அப்பா எப்படியோ முழிக்குது. எனக்கு எதுவும் புரியலேம்மா!' என்று நினைத்துக் கொண்டே உஷா இருவரையும் பார்த்துச் சிரித்தாள்.

'எழுத்தாளன்' மலர், 1973

---



கடந்த அரை நூற்றாண்டு காலமாகத் தமிழ்ப் படைப்பிலக்கியத்திற்கு வளம் கூட்டும் வகையில் தம் எழுத்துச் செல்வங்களை வழங்கி வருகின்றவர் திரு. வல்லிக்கண்ணன். ஓர் எழுத்தாளராக மட்டுமல்லாமல் இதழாசிரியராகவும், கவிஞராகவும், திறனாய்வாளராகவும் திகழ்கின்ற இவ் இலக்கியச் செல்வர் எழுத்துப் பணிக்கென்றே தம்மை அர்ப்பணித்துக்கொண்டு சமுதாய நலநாட்டம் கொண்டவராய் எழுதி வருபவர்.

திரு. வல்லிக்கண்ணன் அவர்களின் எழுத்துப்பணி, எழுத்துசார்ந்த வாழ்க்கை ஆகியவை இந்நூற்றாண்டிலும் வரும் நூற்றாண்டுகளிலும் தமிழ் மக்களுக்குப் பயன்தர வல்லவை என்பதை நன்குணர்ந்த நிலையில் இந்நூலை அவரின் 71-வது ஆண்டு நிறைவினை ஒட்டி வெளியிடுகின்றோம்.




ARUMAIYANA THUNAI

By VALLIKANNAN

விலை ரூ. 25·00 (இந்தியாவில் மட்டும்)